# GRASIM

## STAPLE FIBRE A SUPPLEMENT TO COTTON AND OTHER FIBRES



**Among Indian technological achievements Gwalior Rayon's success in producing Rayon Grade Pulp from indigenous raw materials without any foreign aid or collaboration has, perhaps, been the most remarkable.** The staple fibre produced from the pulp has been a boon to the hard-pressed textile industry which was deprived of valuable raw materials when vast areas of cotton-growing land were lost to Pakistan as a result of Partition.

Grasim Staple Fibre is unique in many respects, and is, in effect, a supplement to all natural fibres including cotton, wool, silk, jute, as well as to synthetic fibres. When blended or mixed with other fibres, it increases the usefulness of the resultant fabrics, making them cooler, softer, and more comfortable while at the same time helping to lower costs.

Today Gwalior Rayon contributes substantially to the national economy. It keeps hundreds of textile mills busy, gives employment to thousands of people, helps clothe lakhs more, saves crores of rupees in foreign exchange, contributes handsomely and in ever-increasing amounts to the national exchequer—these are just a few of the calculable benefits.

Besides Rayon Grade Pulp and Staple Fibre, Gwalior Rayon also produces high quality fabrics and fabricates its own machinery and equipment.

As the needs of the nation for the basic necessities of life are constantly growing, Gwalior Rayon, conscious of its responsibilities, has already made plans to expand its production. It is the constant endeavour of the Company to serve the country to its utmost ability.

**THE GWALIOR RAYON SILK MANUFACTURING (WVG.) CO. LTD.**

Birlagram, Nagda.




# கல்கி


## பொருளடக்கம்


கீலக, தைமீ, 13உ 1969 ஜனவரி, 26உ


இந்தியா
காச்மீரப் பிரச்னைச் செலவு
PK


இரும்பை ரப்பராக்கி விட்டார்களே!
நிர்வாக இயந்திரம்
சர்க்கார்
PK


காமராஜ் திட்டம்
(புதிய பதிப்பு)



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 □ இதழ் 26



# முக்கியமான பிரச்னை

குடியரசுத் தினம் நம்முடைய தீவிரமான பிரச்னைகளையெல்லாம் புதிய சிந்தனையுடன் ஆராய வேண்டிய நாள். பட்சபாதத்துக்கும் உணர்ச்சி வேகத்துக்கும் ஆளாகாமல், தெளிந்த அறிவுடன் ஒரு முக்கியமான பிரச்னையை ஆராய்ந்து பார்க்க வேண்டியது அவசியம்.

பாகிஸ்தானுடன் இந்தியா உறுதியான நட்பு பெற வேண்டியதே இந்த முக்கியமான பிரச்னை. இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே பகை தீர்ந்து, பரஸ்பர விசுவாசமும் நல்லெண்ணமும் ஏற்பட வேண்டும் என்ற கருத்தின் மீதே காச்மீரத்தின் நிர்வாகம் பத்தாண்டுகளுக்கு வல்லரசுகளின் மேற்பார்வையில் நடக்க வேண்டுமென யோசனை கூறினேன்.

என் யோசனையை இந்தியா ஏற்குமெனத் தோன்றவில்லை என்கிறார் ஸ்ரீ பி. சிவராவ். இன்றுள்ள நம் மக்களின் மனப்பான்மையைப் பார்த்தால் அவர் சொல்வது சரியே. இந்தியா, பாகிஸ்தான் இரண்டுமே வளைந்து கொடுக்காத சில சித்தாந்தங்களை ஏற்றுவிட்டன. ஆயினும் இவ்விரு நாடுகளும் நல்லெண்ணத்துடன் வாழாவிடில் இரண்டுமே விரைவில் திவாலா நிலைக்கு வந்துவிடும். அர்த்தமில்லாத ஓர் இலட்சியத்துக்காக நாம் திவாலா நிலையையும், அந்நியரை உபக்கிரகமாகச் சுற்றும் நிலையையும் உண்டாக்கிக் கொள்கிறோம். இதே ரீதியில் தொடர்ந்து செல்லக்கூடாது என்பதே காந்தி அடிகள், லால்பஹாதுர் சாஸ்திரி ஆகியோரின் ஆன்மா விதிக்கும் ஆணையாகும்.

ஆசியாவின் ஜனநாயக நாடுகள் எச்சரிக்கையாக இல்லாவிடில் சீனத்தின் ஆதிக்கத்தின் கீழ் ஒவ்வொரு நாடாக விழக்கூடிய சந்தர்ப்பம் இது. வியட்நாம் நமக்கு ஓர் அபாய அறிவிப்பாகும். அமெரிக்கா வெளியேறி விட்டால், வியட்நாம் கம்யூனிஸ்ட்களிடம் சரணாகதி அடைவதைத் தவிர்க்க முடியாது. இந்நிலையில் காலம் உணர்ந்து செயலாற்ற வேண்டியது இன்றியமையாதது.

சில தவறுகளைச் செய்வதால், அவை நம்மை அவசியமான விஷயங்களில் ஜாக்கிரதை கொள்ள முடியாமல் செய்து விடுகின்றன. பட்சபாதங்களும், உணர்ச்சி வேகமுமே தவறுகளுக்குக் காரணம். இதனால் எந்தப் பிரச்னைக்கு முதலிடம் என்பது தெரியாமல் போகிறது. ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய பிரச்னைகளை அலட்சியம் செய்துவிட்டு, அனாவசியமான பிரச்னைகளில் கவனம் செலுத்தப்படுகிறது. பாகிஸ்தானுடன் நட்புக்கொள்ள வேண்டியது இப்போது முதலிடம் பெற வேண்டிய முக்கியமான விஷயம்.

பாகிஸ்தான் முதலில் காச்மீரத்தைத் தாக்கிய போது அதன் மன்னர் இந்தியாவுடன் ராஜ்யத்தைச் சேர்த்தார். அந்த முடிவுப்படியே, காச்மீரம் தீர்மானமாக இந்தியாவின் ஆளுகைக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்று இந்தியா விரும்புகிறது. அதே சமயத்தில் இந்தியாவின் நிரந்தர நலனைக் கவனிப்போமாயின், இந்தியாவும் அதன் மிக முக்கியமான அண்டை நாடான பாகிஸ்தானும் நல்லெண்ணத்துடன் ஒத்துழைக்க வேண்டிய அவசியமும் புரியும். இவ்விரு விஷயங்களையும் பிரித்து வைத்து, கிரமப்படி அவற்றின் முக்கியத்துவத்தை விவேகமாக ஆராய்ந்து பார்த்து உரிய முடிவைக் காண வேண்டும். பிரச்னைகளைக் குழப்பினால் பகுத்தறிவைச் சிதைத்துவிடும். பகுத்தறிவு சிதைந்த நிலையில் பிரச்னைக்குத் தீர்வு காண முடியாதல்லவா? எனவே, ஆர அமர ஆராய்ந்து முக்கியமான பிரச்னையை முதலில் எடுத்துக் கொள்ள வேண்டும். சீனத்தின் விஸ்தரிப்பு ஒரு மாற்றவொண்ணாத சித்தாந்தமாகிவிடுமுன் நாம் அறிவுத் தெளிவு பெறுவோமாக!

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

# நாகர்கோயில் வோட்டின் பொருள்

நாகர்கோயில் இடைத் தேர்தல் பிரசாரம் பற்றியும், அங்கு நிகழ்ந்த 'சம்பவங்கள்' பற்றியும் நான் எழுதப் போவதில்லை. கன்யாகுமரி மாவட்ட மக்கள் போட்ட வோட்டுக்களின் அரசியல் அர்த்தத்தை அவர்கள் எண்ணிப் பார்க்க வேணும் என்பதற்கே இதை எழுதுகிறேன்.

கன்ட்ரோல்களும் லைசென்ஸ்களும் தேச நலனுக்கு ஏற்பத் தொழிலை ஒழுங்கு செய்யாமல், தொழில் துறையின் மென்னியையே பிடிக்கின்றன என்று சமீபத்தில் ஸ்ரீ ஜே. ஆர். டி. டாடா கூறியதை இவ்வாக்காளர்களில் சிலர் படித்திருக்கலாம். இதை நான் நீண்ட காலமாகக் கூறி வருகிறேன். பெர்மிட் லைசென்ஸ் முறை தொழில் துறையை நெருக்குவதோடு ஏகபோக் இயங்களை உண்டாக்குகிறது. சலுகை பெற்றவர்கள் மட்டுமே பெர்மிட், லைசென்ஸ் பெற்றுச் சில பண்டங்களை உற்பத்தி செய்யவும் விற்கவும் உரிமை பெறுகிறார்கள். இதனால் நேர்மையான போட்டிக்கு இடமில்லாமல் போகிறது. போட்டியில்லாத ஏகபோக்கியம் தரப் படுவதால் தரம் குறையவும், விலை உயரவும், இரகசியமாக லாபம் பெறவும் ஊக்கம் ஏற்படுகிறது. பெர்மிட் லைசென்ஸ் முறையால், ஒரு பொருளின் உற்பத்திக்கு அவசியமான ஒரு சிறிய உறுப்புக்கு லைசென்ஸ் தர மறுப்பதாலோ, அல்லது காலதாமதம் செய்வதாலோ ஒரு தொழிற்சாலையையே மூடச் செய்யலாம்.

இந்தத் தீய முறை நீடிக்க வேண்டும் என்பது நாகர்கோயில் மக்களின் விருப்பமா? இம்முறைக்கு மக்கள் சபையில் உள்ள எதிர்ப்பு பலவீனமடைய வேண்டும் என்பது அவர்களது ஆசையா? நாகர்கோயில் மக்களும் சரி, மற்றவர்களும் சரி, பெர்மிட் தளையிலிருந்து விடுபட்டு, நேர்மையான போட்டியும் சுதந்திரமான வியாபாரமும் நடைபெற வேண்டுமென விரும்பவில்லையா?

திரு காமராஜுக்குப் போட்ட வோட்டு, தனிப்பட்ட முறையில் அவருக்குப் புனர் வாழ்வு தருவது மட்டுமல்ல; அரசியல் ரீதியில் இந்தத் தேர்தலைப் பார்த்தால், தேச நலனுக்குத் தீங்கு செய்யும் கொள்கைக்கு ஊக்கம் தந்ததாக ஆகும். தனிப்பட்டவர்களின் வெற்றி தோல்வியை விட இதுவே மிக முக்கியத்துவம் வாய்ந்தது.

கன்ட்ரோல் முறையால் காங்கிரஸுக்கு லாபம் கிடைக்கிறது. ஆட்சியிலுள்ள அந்தக் கட்சி இம்முறையால் வியாபாரிகளைப் பணயம் வைத்து, விரும்பிய மட்டும் அவர்களிடமிருந்து நிதி பெற முடிகிறது. இவ்விதம் பண பலம் பெற்று, தேர்தலைப் பண விஷயமாக்கி, தன் ஆட்சியை நீடித்துக்கொள்வதே காங்கிரஸின் ஆசை. இதைக் கன்யாகுமரியின் அறிவுவாய்ந்த மக்கள் ஆதரிக்க எண்ணினரா? அப்படி இராது என்றே நம்புகிறேன்.

நாகர்கோயில் தேர்தலுக்குத் தமிழ் நாட்டு அரசாங்கத்துடனோ, அதன் நல்லாட்சி அல்லது ஊழலாட்சியுடனோ சம்பந்தமில்லை. இது மக்கட் சபை இடைத் தேர்தல். அகில இந்தியப் பிரச்னைகளை ஆராய்ந்து வாக்களிக்குமாறே வாக்காளர் எதிர்பார்க்கப்பட்டனர்.

நாகர்கோயில் தொகுதியின் நன் மக்களுக்குச் சொல்கிறேன்: கோடிக் கணக்கில் நஷ்டப்பட்டு வரும் சர்க்காரின் ராட்சத நிறுவனங்களுக்காக மூச்சடைக்கச் செய்யும் வரிச் சுமையை நீடிக்க வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள்? உயர்ந்த வரிவிகிதம் காரணமாக, தனியார் நல்ல முறையில் நிர்வகிக்கக் கூடிய தொழில்கள் தலையெடுக்க முடியவில்லை; ஏற்கனவே நன்கு நிலைத்துள்ள தனியார் தொழில்களை விஸ்தரிக்க முடியவில்லை.

கன்ட்ரோல் முறையாலும் உயர்ந்த வரி விகிதத்தாலும் கறுப்புப் பண உற்பத்தி பெருகுவதைக் கன்யாகுமரி மக்களான நீங்கள் ஆதரிக்கிறீர்களா? கறுப்புப் பணத்தைப் பகிரங்கமாகப் பயன்படுத்த முடியாது. அதை உற்பத்தி பெருக்கும் தொழில்களில் முதலீடுசெய்ய முடியாது. எனவே, அது இரகசிய வழிகளில், உற்பத்திக்கு உதவாத வகையில் செலவாகிறது. இது தொடர வேண்டும் என்று நீங்கள் விரும்புவதாகவே தேர்தல் விளைவு அமைந்துள்ளது — ஆனால் உண்மையில் நீங்கள் இப்படி எண்ணியிருக்க முடியுமா?

அரசாங்கத்தை மாற்றி, இந்தக் கொள்கைகளையெல்லாம் திடுமென நிறுத்துவது இயலாது எனலாம். தவறான கொள்கைகள் எளிதில் விளைவிக்கும் தீமைகளைச் சுலபமாக மாற்றிவிட முடியாது. ஆனால் இது காரணமாக, தவற்றின் மேல் தவற்றைக் குவித்துக் கொண்டே போக வேண்டும் என்றோ, நஷ்டத்தின்மேல் நஷ்டத்தைக் குவித்துக்கொண்டே போக வேண்டும் என்றோ ஆகாது. காலம் கடந்தாயினும் தவறான போக்கைத் தடுக்க மனித யத்தனம் அவசியமே!

இந்தியாவின் இன்றைய மக்கள் மீதும் வருங்கால சந்ததி மீதும் காங்கிரஸ் சர்க்கார் சுமத்தியுள்ள இமாலய அந்நியக் கடன்கள் பற்றி நாகர்கோயில் மக்களாகிய நீங்கள் அறிந்திருப்பீர்கள். அறியாவிட்டாலும் இவ் விஷயமாக எளிதில் உண்மை நிலையைத் தெரிந்து கொள்ள முடியும். இந்தக் கடன் சுமையிலிருந்து நாட்டை மீட்க ஒரு திட்டமும் வகுக்கப்படவில்லை. இவ்விஷயமாக காங்கிரஸ் சர்க்கார் எவ்வித மனச் சங்கடமும் கொள்ளவில்லை. வட்டித் தவணைகளைத் தீர்ப்பதற்காகப் புதுக் கடன் வாங்கி வருகிறது!

இன்னும் எவ்வளவோ சொல்லலாம். இப்போதைக்கு இது போதும். காங்கிரசுக்கு வோட்டுப் போட்டதன் தவற்றைக் கன்யாகுமரி மாவட்ட வாக்காளர் உணர வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன். காங்கிரஸுக்கு எத்தனையோ வசதிகள் இருந்தும், சென்ற பொதுத் தேர்தலில் பெரும்பான்மையான ராஜ்யங்களில் காங்கிரஸ் ஆட்சியதிகாரத்தை இழந்ததிலிருந்தே நாட்டில் அக்கட்சியின் மதிப்புக் குன்றியிருப்பதை உணரலாம். நாகர்கோயிலில் தோல்வி ஏற்படும் என்று பயந்தே காங்கிரஸ் கட்சி முன்னாள் அக்கிராசனரை நிறுத்தி வைத்தது. தனிப்பட்ட முறையில் அவருக்கும் புனர்வாழ்வு தேவைப்பட்டது. அவரது கட்சியின் கொள்கைகளைக் கருதாமல் நீங்கள் அவருக்கு வாக்குத் தந்தது இயற்கைக்கு விரோதமானது என்று சொல்வதற்கில்லை.

ஜனவரி 26 குடியரசு தினம். இச் சமயத்தில் இந்த விசனகரமான எண்ணங்களை வெளியிடுவதற்காக, திரு காமராஜுக்கு வாக்குத் தந்த நன் மக்கள் என்னை மன்னிக்க வேண்டும். நாம் ஒரு குடியரசாக வாழ்கிறோம். அதாவது நாம் அறிவு விளக்கம் பெற்ற ஒரு மகாராஜா அல்லது மகாராணியின் ஆட்சியில் இல்லை. மக்கள் அறிவு விளக்கம் பெற்றிராவிடினும், மன்னர் (அல்லது ராணி) திறமையுள்ள நல்ல மந்திரிகளை நியமித்து நாட்டு நடப்புக்களை நல்லபடியாக நிர்வகிக்கச் செய்ய முடியும். குடியரசிலோ, வாக்காளர்களே விவேகமாகச் செயலாற்றினால்தான், தேசத்தின் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் சந்தோஷமாக வாழ முடியும். வாக்காளர் விவேகமாகச் செயல் புரியாவிடில் தேசமே பாதிக்கப்படும்.

நம் தேசப் பொருளாதாரத்தை நாசம் செய்யும் கொள்கைகளை மாற்ற வேண்டும் என்று திரு காமராஜ் விரும்புவாராயின் — தமது பகுத்தறிவுக்கு இசைவான கொள்கைகளையே அவர் வற்புறுத்துவாராயின் — நானே அவருக்கு வாக்குப் போடுவேன்; மற்றவர்களையும் அவருக்கு வாக்குப் போடுமாறு யோசனை சொல்வேன். காமராஜைத் தேர்ந்தெடுத்திருக்கலாமா என்பதுபற்றி நீங்களோ, மற்றவர்களோ மீண்டும் சிந்திக்க வேண்டும் என நான் விரும்பவில்லை. இன்றைய இந்திய சர்க்காரின் கொள்கைகளை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்றே விரும்புகிறேன். எப்போது சந்தர்ப்பம் கிடைத்தாலும் அப்போது நாட்டு நடப்புக்களைச் சரியாக்க உங்களால் இயன்றதையெல்லாம் செய்ய வேண்டும் என்றே விரும்புகிறேன். ('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி)

# விண்வெளி நிலையத்தின் முன்னோடி

சந்திர மண்டலத்தை அடைய இரண்டு விதமாக விஞ்ஞானிகள் யோசித்தார்கள். சக்தி வாய்ந்த ராக்கெட்டுகளின் உதவியுடன் நேரடியாகச் சந்திர மண்டலத்தைச் சென்றடைவது ஒரு வழி. இம்முறையைப் பின்பற்றி அமெரிக்க விண்வெளி வீரர்கள் சில தினங்களுக்கு முன் சந்திரனைச் சுற்றி வந்து உலகை வியப்பில் ஆழ்த்தினார்கள். மற்றொரு வழி உலகைச் சுற்றி வரும் ஒரு விண்வெளி நிலையத்தை அமைப்பது. இடையில் ஒரு ஸ்டேஷனில் இறங்கி ரயில் மாறிப் போவது போல இந்த விண்வெளி நிலையத்திலிருந்து கிளம்பி சந்திரனை அடையலாம். இந்த விண்வெளி நிலையம் பிற கோள்களையும் வான மண்டலத்தையும் நுணுகி ஆராயும் விஞ்ஞானக் கூடமாகவும் திகழலாம்.

விண்வெளி நிலையத்தைப் பகுதி பகுதியாகத் தயாரித்துத் தனித் தனியே அனுப்பித்தான் விண்வெளியில் இணைத்தாக வேண்டும். இப்படி வெவ்வேறு பகுதிகளை விண்வெளிக்குக் கொண்டு சென்று சரியானபடி பொருத்த முடியுமா என்ற பூர்வாங்க ஆராய்ச்சியில் மனிதன் வெற்றி பெற்று விட்டான். சோவியத் விண்வெளி வீரர்கள் அண்மையில் இரு விண்வெளிக் கப்பல்களை அவை உலகைச் சுற்றி வருகையிலேயே இணைத்துக் காட்டினார்கள். ஒரு கலத்திலிருந்து மற்றொன்றுக்கு இவ்வீரர்கள் இடம் மாறினார்கள். விண்வெளியில் நடந்தார்கள். கலங்களை மீண்டும் தனித் தனியே பிரித்தார்கள்.

விண்வெளியில் மனிதன் நடப்பதும் இரு கலங்களை விண்வெளியில் இணைப்பதும் ஏற்கெனவே நிகழ்த்திக் காட்டப் பட்டுள்ள சாதனைகள்தான். இவற்றை முற்றிலும் புதுமை என்று கூற முடியாது. இதனால் சோவியத் விஞ்ஞானிகளின் — விண்வெளி வீரர்களின் சமீபத்திய சாதனையைக் குறைத்து மதிப்பிட்டு விடவும் கூடாது. இது மேலும் மேலும் விண்வெளித் துறையில் நிகழவிருக்கிற அற்புதங்களுக்கு ஒரு முன்னோடி.

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவில் உள்ள கம்யூனிஸ்ட்கள் 'நாக்ஸல்பாரி பாணி' என்ற பெயரில் நாச வேலை செய்பவர்களாக உருவாகி வருவதைச் சமாளிப்பதற்குத் தில்லியின் சட்ட மந்திராலயம், உள்துறை மந்திராலயம் இரண்டின் கூட்டுச் சாமர்த்தியமும் போதவில்லை போலிருக்கிறது. யூனியன் சர்க்கார் வெறுமே எச்சரிக்கை செய்கிறது; அல்லது கவலை தெரிவிப்பதாக அறிக்கை விடுகிறது. ராஜ்ய சர்க்கார்கள் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் என தில்லி எதிர்பார்ப்பதாகத் தெரிகிறது. நக்ஸல்பாரி பாணிச் செயல்கள், இந்தியக் குற்றப் பிரிவின் கீழ் விசாரித்து விட்டால் போதும் என்கிற ரீதியில் ஆங்காங்கு ராஜ்யங்கள் தீர்க்கக்கூடிய விஷயமல்ல. இது அகில இந்தியாவிலும் பரவிவிட்ட பிரச்னை.

சிறைப்பட்ட நக்ஸல்பாரிக்காரர்கள், 'தியாகி'களாகின்றனர். அவர்களது சிறைவாசத்தில் சௌகரியம் செய்து தர வேண்டும் என்று கோரப்படுகிறது. பயங்கரமான தேசிய ஆபத்தை எதிர்கொள்ள இதுவா வழி?

வன்முறையின் மீது பிறந்த கம்யூனிஸம் நாளாவட்டத்தில் அரசியல் கட்சியாகி, அரசாங்கத்தின் மீதும், தொழில்துறை மீதும் செல்வாக்குப் பெற்றது. இப்போது கம்யூனிஸம் புதுத் திருப்பம் பெற்று, பகிரங்க வன்முறையில் ஈடுபட்டிருக்கிறது. இந்தியா முழுவதும் நாச வேலையைப் பரப்பி, நாட்டை மா—சே—துங்கின் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக்குவதே அதன் இலட்சியம்.

இந்திய சர்க்கார் தைரியமாக நடவடிக்கை எடுக்க வேண்டும். நடவடிக்கை எடுப்பதால் இடைத் தேர்தல்களில் காங்கிரஸின் நிலை என்ன ஆகுமோ என்பதை எண்ணக் கூடாது. இடைத் தேர்தல்களில் சில ஸ்தானங்களைப் பெறுவதால் தேசத்தையே இழந்ததாக நேரிடலாம். காங்கிரஸுக்குப் புத்தாடை புனைவித்து அதை அலங்காரமாகக் காட்டுவதைவிட முக்கியமான விஷயம் கம்யூனிஸமும் வன்முறையும் கூடியிருப்பதை முளையிலேயே கிள்ளுவதுதான்.

ஃஃஃ

நான் பயந்தது போலவே அரசாங்க லாட்டரி பரவி வருகிறது. உலகின் மிகப் பெரிய ஜனநாயகம் என்று சொல்லப்படும் இந்தியா, உலகின் மிகப் பெரிய சூதாட்ட விடுதியாகி வருகிறது.

லாட்டரிகளால் ஒரு கோடியோ, இரண்டு அல்லது மூன்று கோடியோ வருமானம் பெற்றாலும், தார்மிக ரீதியில் அதைவிட அதிக செலவு செய்தே இவ்வருமானம் பெறப்படுகிறது. தொடர்ந்து தூண்டிற் புழுவைக் காட்டி மக்களை இழுப்பதால் பெரும் தார்மிகச் சிதைவு ஏற்பட்டிருக்கிறது.

சர்க்காருக்கும், மத்திய தரகர்களுக்கும், பரிசு பெறும் அதிர்ஷ்டசாலிகளுக்கும் பொது மக்களுடைய பணத்தைப் பெற்றுத் தருகிற முறையே லாட்டரி. இதை விஸ்தரிக்கும் பழிப்புக்கிடமான காரியத்தைச் செய்ததில் தமிழ் நாட்டு அரசாங்கத்துக்கும், தமிழ் நாட்டுப் பத்திரிகைகளுக்கும் மிகப்பெரிய பங்கு உண்டு. தமிழகப் பத்திரிகைகளிலும், சுவரொட்டிகளிலும் பரிசு பெற்றவர்களின் படங்களை அச்சிட்டுப் பிரமாதமாகப் பிராபல்யப் படுத்தியதே இச்சூதாட்ட சாகஸம் இந்தியா வெங்கும் பரவ வழி செய்திருக்கிறது.

முறை மீறிய காமம், மதுபானம், சூதாட்டம் ஆகிய மூன்று பாபங்களையும் மிகப் பழைய தமிழிலக்கியம் ஒன்றாகச் சேர்த்துக் கூறி, மக்களை எச்சரித்தது. தேசத்துக்கு உழைப்பே தேவைப்படும் சமயத்தில் இப்பாபங்களில் ஒன்றைப் பரப்பிய பழியையா தமிழ் நாட்டுச் சர்க்கார் பெற வேண்டும்?

## மகாத்மாவின் மணிமொழி



மதம் என்றால் நான் என்ன பொருள் கொள்கிறேன் என்று விளக்குகிறேன். அது ஹிந்து மதம் அல்ல. ஹிந்து மதத்தை நான் மற்ற எல்லா மதங்களுக்கும் மேலாக மதிப்பது நிச்சயம். எனினும் நான் 'மதம்' என்னும்போது, ஹிந்து மதத்துக்கும் அப்பாற்பட்ட ஒன்றையே குறிப்பிடுகிறேன். அது ஒருவரின் சுபாவத்தையே மாற்றி விடுவது. உள்ளுக்குள் இருக்கும் சத்தியத்துடன் ஒருவரைப் பிரிக்கவொண்ணாமல் பிணைப்பது. எப்போதும் தூய்மைப்படுத்துவது. தன்னை முற்றிலும் வெளிப்படுத்திக் கொள்வதற்காக எதையும் அநுபவிக்கத் தயாராயுள்ள நிரந்தர அம்சம் அது. அது தன்னைத் தானே கண்டு கொண்டாலன்றி ஆன்மா நிம்மதியில்லாமல் தத்தளித்துக் கொண்டேயிருக்கும். தன்னை அறிந்து கொள்ளும் வரையில், தன்னைப் படைத்தவனை அறிந்து கொள்ளும் வரையில், தனக்கும் தன்னைப் படைத்தவனுக்கும் உள்ள தொடர்பை அறிந்து கொள்ளும் வரையில் அமைதி பெறாமல் மனிதனின் இயல்புக்குள் இருக்கும் அம்சமே மதம்.



கோயிலின் முன் தோற்றம்

இக்கோயிலில் முருகனின் ஒரு மூர்த்தம் வேலை வீரத்துடன் பிரயோகிக்கும் புதுமைக் கோலத்தில் உள்ளது. மற்றொரு முருக சிற்பத்தில் மயூரம் சர்ப்பத்தை எதிர்க்கும் வீறு வேறெங்கிலும் காணவொண்ணாதது.

இன்னொரு புதுமை, ஜ்யேஷ்டா தேவியாகிய மூதேவிக்கு இந்த ஆலயத்தில் இடம் தரப்பட்டிருப்பதே! அந்த அம்மாளுக்கு இடம் கொடுத்ததால்தானோ என்னவோ, நீண்ட நெடும் காலமாகக் கோயில் லக்ஷ்மீகரத்தை இழந்து விட்டிருக்கிறது.

ஸ்ரீ காஞ்சி பெரியவாள் இந்த அதிசய ஆலயத்தை அளவற்ற ஈடுபாட்டுடன் நின்று நின்று நிதானமாகப் பார்த்து ரசித்து, ருசித்து, ரமித்து வருகிறார்கள்.

ஓரிடத்தில் சட்டென்று நின்று விடுகிறார்கள். தமது பக்கத்தில் நிற்கும் திரு விஜயராகவ ரெட்டியாரைப் பார்த்து, "இதோ, இந்தக் கல்வெட்டைப் படி" என்கிறார்கள் முகமெல்லாம் முறுவலாக.

# "இன்றே திருப்பணி தொடங்குக!"

**ப**ழைய கோயில். பொதுமக்களின் கவனத்தில் இல்லாத கோயில். புராதனமான சநாதன தர்மம் இன்று பாழ்பட்டுக் கிடப்பது போல் இந்தப் புராதன ஆலயமும் பாழாகிக் கிடக்கிறது.

இடிபாடுகளிலிருந்து சநாதன தர்மத்தை மீண்டும் நிர்மாணிக்கப் பாடுபட்டு வரும் ஸ்ரீ காமகோடிப் பெரியவாள் இந்தப் பழைய, சிதிலமடைந்த ஆலயத்தை இதயம் லயித்து வலம் வருகிறார்கள்.

வேறெங்கும் காணாத அற்புதங்கள் பல உள்ள ஆலயம் இது. மூலஸ்தான மூர்த்தியான ஆடவல்லீசுவரன், கிழக்கோ மேற்கோ பாராமல் தெற்கு நோக்கி எழுந்தருளியிருப்பது இப்பழங் கோயிலில் ஒரு புதுமை. தெற்கு நோக்கி இருக்கும் சில மூர்த்தங்கள் நடராஜமூர்த்தியும், தட்சிணாமூர்த்தியுமே. தஞ்சை நடராஜ மூர்த்திக்கு ஆடவல்லான் என்ற பெயருண்டு. இங்கு மூல மூர்த்தியான ஆடவல்லானும் தெற்குப் பார்த்திருக்கிறான். தஞ்சை நடராஜனின் பெயரைச் சூட்டிக் கொண்டுள்ள ஆடவல்லீசுவரருக்குத் தேவியாக இக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் அம்பிகை, தஞ்சை ராஜ ராஜேசுவரத்து அம்பிகையான பிருகந்நாயகியின் திருநாமத்தைத் தரிப்பது விசேஷம். ஆனால் இத் தலம் தஞ்சைப் பிருகதீசுவரத்துக்கும் முற்பட்டது எனப்படுகிறது.

இக் கோயிலில் தட்சிணாமூர்த்தி 'பச்சிமா மூர்த்தி'யாக இருக்கிறார். அதாவது தட்சிண (தெற்கு) முகமாக அமர வேண்டியவர், பச்சிம (மேற்கு) முகமாய் வீற்றிருக்கிறார்.

'ஆனந்தத்தில் திக்குத் திசை புரியவில்லை', 'திக்பிரமை பிடித்தது' என்றெல்லாம் நாம் சொல்வது போல், அருள்வெறியில் ஈசனுக்குமே இந்த ஸ்தலத்தில் திசை புரியவில்லை போலும்.

அவரது திருவிரல் சுட்டும் வரியைப் படிக்க முயல்கிறார் திரு ரெட்டியார். ஆனால் கல்வெட்டு எழுத்தைப் படித்துப் பழக்கமில்லாததால் தடுமாறுகிறார்: "இ....ன்...றே..." அவர் பிரயாசையுடன் எழுத்துக் கூட்டுவதைப் பார்த்தவுடன் ஸ்ரீ பெரியவாளே கல்வெட்டைப் பளிச்சென்று படிக்கிறார்கள்:

**"இன்றே திருப்பணி தொடங்குக....."**

ஒரு முறை அல்ல; நான்கு முறை அர்த்தபுஷ்டி ததும்பும் குரலில் அந்த வரியைத் திரும்பத் திரும்பப் படிக்கிறார் ஸ்ரீ ஆசாரியாள்.

திரு ரெட்டியாரை நோக்கிப் பொருள் பொதிந்த பார்வையை வீசுகிறார். திரு ரெட்டியாருக்கு அர்த்தமாகி விடுகிறது. அடியார்களின் தலையெழுத்தையும் படித்துத் துடைத்து விடுகிற ஜகத்குரு, பக்தர்களுடைய மனத்தின் அடிவாரத்தில் இருப்பதையும் படித்துவிடும் ஜகத்குரு, முதன்முறை ஆலயத்

ஷண்முகன்: பாம்போடு போரிடும் மயில்



துக்கு வந்தபோதே, அங்குள்ள கல்வெட்டெல்லாம் தமக்கு முன்பே பரிசயமானது போல், இந்த ஒரு கல்வெட்டைக் குறிப்பாகப் படித்து, அதன் மூலம், என்றோ யாருக்கோ யாரோ இட்ட ஆக்ஞையை இன்று தமக்கு இட்டு விட்டார் என்று புரிந்து கொள்கிறார்.

ஆம், இக்கோயில் திருப்பணி வேலையை உடனுக்குடனே ஆரம்பித்து விட ஆசான் ஆணை பிறப்பித்து விட்டார்!

அன்றிரவு, ஸ்ரீ பெரியவாளை மீண்டும் தரிசிக்கிறார்கள் திரு ரெட்டியாரும், ஆலயத்தில் சம்பந்தப்பட்ட மற்ற பிரமுகர்களும்.

பெரியவாள் ஸ்ரீ மடத்தின் மானேஜரைப் பார்த்து, "1121 ரூபாய் கொண்டு வாருங்கள்" என்கிறார்.

அன்றிரவோடு பெரியவாள் அக் கிராமத்தில் முகாமிட்டிருப்பது முடிந்து வேறு ஊர் செல்கிறார்கள். பரிவாரங்கள் எல்லாம் போயாகி விட்டது. கஜானாவும் சிறிது போதுக்குமுன் புறப்பட்டு விட்டது.

அமுதத் தட்சிணாமூர்த்தி.





வேலைப் பிரயோகிக்கும் வேலவன்

பணப்பெட்டி இல்லை என்பதை மானேஜர் பெரியவாளிடம் தெரிவிக்கிறார்.

"இங்கிருந்து எவ்வளவு தூரம் கஜானா வண்டி போயிருக்கும்?" என்று விசாரிக்கிறார் பெரியவாள்.

"சுமார் இரண்டு மைல் போயிருக்கும்" என்று விடை வருகிறது.

"அங்கு போய்ப் பணப் பெட்டியைக் கொண்டு வரவேண்டும்" என்று ஆசாரியாள் ஆக்ஞை இடுகிறார்.

அப்படியே செய்யப்படுகிறது.

"இன்றே திருப்பணி தொடங்குக" என்ற சொற்றொடரை ஸ்ரீ ஆசாரியாள் தமக்கு விதிக்கப்பட்ட ஆணையாகவே கருதி, அந்தக் கல்வெட்டைப் படித்த அன்றிரவே திருப்பணிக்காக ரூ. 1121 அள்ளி அளிக்கிறார்கள்.

இடிந்த அக்கோயிலின் திருப்பணியில்தான் அவர்களுக்கு எத்தகைய மனமார்ந்த ஆர்வத் துடிப்பு?

பெரியவாள் தொடங்கி வைத்துவிட்ட திருப்பணியைச் சிரமேற் கொண்டு நடத்தி வருகிறது ஒரு குழு. திரு முத்துசிங்காரவேல் செட்டியாரின் தலைமையில் திரு விஜயராகவ ரெட்டியார் முன் நின்று முன்னூர் ஆலயத் திருப்பணியில் பரம பக்தியுடன் முழு மனத்தையும் செலுத்திக் கவனித்து வருகிறார்.

❀ ❀ ❀

'முன்னூரா? முன்பின் கேட்டிராத ஊராக இருக்கிறதே!' என்று நினைக்கலாம். ஆனால், முன்னொரு காலத்தில் மிகப் பிரசித்தமாக இருந்த ஆலயம் அது. மூதூர், இல்லை மூதூர், முன்னூர் என்ற பெயர்கள் சங்க இலக்கியங்களிலும், தேவாரங்களிலும் கூடக் காணப்படுகின்றன. அவை இந்த முன்னூரையே குறிப்பனவா யிருக்கும் என்று ஆராய்ச்சியாளர் சொல்கின்றனர். தென் ஆர்க்காடு மாவட்டத்தில் திண்டிவனம் — மரக்காணம் சாலையில், திண்டிவனத்திலிருந்து பன்னிரண்டாவது மைலில் உள்ள அரிய தலம் முன்னூர்.

சோழ, பாண்டிய, பல்லவ, சாளுக்கிய, விஜயநகர மன்னர்களெல்லாம் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்திருப்பதைக் கல்வெட்டுக்களில் காண்கிறோம். அந்தப் பணியை — கல்வெட்டு கூறுவது போல் — ஸ்ரீ பெரியவாள் நடத்திக் காட்டியது போல் — நாம் இன்றே செய்வோமாக! ஏற்கெனவே சுமார் 50,000 ரூபாய் சேர்ந்துள்ளது. அத்தியாவசியமான திருப்பணிகளையேனும் செய்து, ஆடவல்லீசனுக்கு நல்ல முறையில் நித்திய பூஜை நடக்கச் செய்வதற்கு இன்னும் 50,000 ரூபாய் தேவைப்படுகிறது. அடியிற் கண்ட விலாசத்துக்கு ஆஸ்திக அன்பர்கள் அவசியம் பொருளனுப்பவேணும்: **திரு முத்து சிங்காரவேல் செட்டியார், தலைவர், முன்னூர் ஆடவல்லீசுவரர் ஆலயத் திருப்பணிக் குழு, முன்னூர் கிராமம், திண்டிவனம் தாலூக்கா, தென் ஆர்க்காடு மாவட்டம்.**



இடப்பக்கம் தமிழகப் பகுதி. வலப்பக்கம் மைசூர் மாநிலம் - ஹொகனேகல் நீர்வீழ்ச்சியின் தோற்றம்.

# தொழில் வளமும் எழில் வளமும்

(தமிழக அரசினர் பத்திரிகையாளருக்காக ஏற்பாடு செய்த சுற்றுப்பயணத்தில் பங்கெடுத்துக் கொண்ட நமது நிருபரின் கட்டுரை.)

கோவைக் குளிர் எப்படி இருக்கும் என்று சொல்வதைவிட அனுபவித்துப் பார்த்தால் தான் தெரியும். அதுவும் மேட்டுப்பாளையத்திலோ? எல்லாரும் அடக்க ஒடுக்கமாகக் கையைக் கட்டிக் கொண்டு நடக்கலானோம். எங்கள் பரிதாப நிலையைப் பார்த்துத்தானோ என்னவோ எங்களைச் செயற்கை வைரத் தொழிற்சாலைக்குள் கொண்டு போய்த் தள்ளினார்கள்..... அப்பாடா! அந்த இதமான கதகதப்பை இப்போது நினைத்தாலும் உடம்பில் சூடேறுகிறது. பின்னே இருக்காதா? 2000 டிகிரி சென்டிகிரேட் உஷ்ணத்தை உற்பத்தி செய்யும் அடுப்புகள் வரிசையாகக் 'கண கண' வென்று எரிந்தபடி வைரக் கற்களை உருவாக்கிக் கொண்டிருக்கும் இடத்தில் குளுகுளுவென்றா இருக்கும்?

'வைரமுடைய நெஞ்சு வேண்டும், வேண்டும்' என்று எத்தனை கவிகள் எப்படி எப்படியெல்லாம் கற்பனை பண்ணியிருக்கிறார்கள். உலகப் புகழ் பெற்ற கோஹினூர் வைரத்தைப் பெற்ற பாரத மக்களாகிய நாம் வைரமுடைய நெஞ்சுரம் வேண்டும் என்று வேண்டுவது அந்த மாதிரி ஒப்பற்ற வைரங்களை இழக்க நேரிடினும் கலங்கக் கூடாது என்பதற்காகத்தானோ?

நிஜ வைரம் ரொம்ப விலை. ஆனால் அது பற்றி நமக்குக் கவலை இல்லை. செயற்கை நூலில் துணி, செயற்கை ரப்பர், செயற்கை



கிருஷ்ணகிரி நீர்த்தேக்கத்துக்கு விஜயம் செய்த பத்திரிகைப் பிரதிநிதிகள்.

அழகு, செயற்கைப் புன்னகை என்று செயற்கை மோகம் மிகுந்துள்ள இந்நாளில் செயற்கை வைரத்தை உருவாக்கவா முடியாது? செயற்கை வைரத்தை எதற்காக உருவாக்க வேண்டும்? வைரம் ஆபரணங்களில் தவிர வேறு பல விதங்களிலும் உபயோகப்படுகிறது. 'காஜ்'களாகவும் 'பேரிங்'காகவும், நுட்பமான பொருட்களை அளக்க உதவும் தராசில் நிறை கல்லாகவும், விமான யந்திரப் பகுதிகளிலும், துணி ஆலைகளின் நுட்பமான யந்திரப் பகுதிகளாகவும் கைக்கடிகாரத் தொழிலில் தேய்மானம் ஏற்படும் பகுதிகளில் அதைத் தடுக்கப் பொருத்தவும், தேயாத கிராமபோன் ஊசியாகவும், போட்டோ செல்லிலும், அதிக உஷ்ணத்தை வெளிப்படுத்தும் பர்னர்களின் மூக்கிலும் என்று இப்படிச் செயற்கை வைரத்துக்குத் தொழில் துறையில் எத்தனையோ உபயோகங்கள் இருக்கின்றன.

1957வரை இந்தியா ஆண்டுதோறும் ஐம்பது லட்சம் ரூபாய்கள் மதிப்புள்ள செயற்கை வைரங்களை வெளிநாடுகளிலிருந்து

இறக்குமதி செய்து வந்தது. 1957ல் ஸ்விஸ் நாட்டு ஒத்துழைப்புடன் முதல் இந்தியச் செயற்கை வைரத் தொழிற்சாலை மேட்டுப்பாளையத்தில் நிறுவப்பட்டது. இருபத்திரண்டு லட்சம் ரூபாய் செலவில். அன்றைய தயாரிப்புக் குறியீடு ஒரு நாளைக்கு நாற்பது கோலாஸ் கற்கள், இன்று இது அறுபது கோலாஸ்களாக உயர்ந்துள்ளது. சிவப்பு, வெள்ளை, நீலம், பச்சை, வெளிர் மஞ்சள் என்று விதம் விதமான வைரங்களை உருவாக்குகிறார்கள். அதற்கு ஏற்ற ரசாயன மூலப்பொருள்களைக் கொண்டு. நிஜ வைரம் எப்படிப் பல்லாண்டு காலம் பூமியின் அழுத்தத்தினால் உருவாகிறதோ, அதேபோல ஏராளமான உஷ்ணத்தில் ரசாயன மூலகங்களை ஒன்று சேர்த்து உருக்குவதின் மூலம் செயற்கை வைரக் கற்களை உருவாக்குகிறார்கள். உஷ்ணம் உறுதிக்கு அடிப்படை.







1. இந்தக் கோடி வீட்டையும் தோட்டத்தையும் எந்தத் திரைப்படத்திலாவது பார்த்திருக்கிறீர்களா? இந்த அழகான காட்சியை ஆழியாறு அணைக்கட்டுப் பகுதியில் காணலாம். 2. 'மண் வேண்டாம். மரப்பெட்டியே போதும் உருளைக்கிழங்கு மூளைவிட' என்கிறார் ஜெர்மன் நிபுணர் பத்திரிகைப் பிரதிநிதிகளிடம். 3. உதகையிலே 'இந்தோ - ஜெர்மன் விவசாயத் திட்டத்தின் கீழ்' ஒப்பந்த முறையில் உருவாகியிருக்கும் ஆராய்ச்சிப் பாத்திகளில் செழித்து வளர்ந்திருக்கும் பயிர்கள்.

அரை அங்குலத்திலிருந்து முக்கால் அங்குல சுற்றளவும் இரண்டரை அங்குல உயரமும் கொண்ட மெழுகு வத்தி போன்ற உருவில் வைரக் கல் உருவாக 2000 டிகிரி உஷ்ணம் கொண்ட ஜ்வாலையில் ரசாயனக் கலவைகள் இரண்டு மணி நேரம் குளிக்க வேண்டும். அப்படிக் குளிக்கும்போது மெள்ள மெள்ளக் கொஞ்சம் கொஞ்சமாக வைர உருளை வளருகிறது.

இப்படித் தயாரான வைர உருளைகளைத் தரம் பிரித்து விடுகிறார்கள். இவற்றைப் பட்டை தீட்டி ஜ்வலிக்கும் வைரக் கற்களாக்கும் பணியைத் தென்னகத்தில் திருச்சி மாவட்டமும் வட இந்தியாவில் ஜெய்ப்பூரும் ஏற்கின்றன. இங்கு தயாராகும் செயற்கை வைரத்தில் அறுபது சதவீதத்தைத் திருச்சியும், நாற்பது சதவீதத்தை ஜெய்ப்பூரும் பகிர்ந்து கொள்ளுகின்றன. வைர உருளையை வெட்டிப் பட்டை தீட்டிப் பளபளப்பாக்கும் பணியில், இவ்விரண்டு இடங்களிலுமாக, 20,000 மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். குடிசைத் தொழிலாக இதைச் செய்கிறார்கள். மேட்டுப்பாளையத்தில் உள்ள இதுதான் இந்தியாவிலே உள்ள ஒரே செயற்கை வைரத் தொழிற்சாலை.

கதகதப்பான செயற்கை வைரத் தொழிற்சாலையிலிருந்து வெடவெடக்க வைக்கும் ஊட்டி குளிருக்குச் சென்று கொண்டிருந்தோம். டீலக்ஸ் கோச் மையிருட்டில் வழிவகுத்துக் கொண்டு குளிரை வாரி வண்டிக்குள் வீசியபடி விரைந்து கொண்டிருந்தது. ஊட்டியை நாங்கள் அடைந்தபோது நள்ளிரவு. உதறியெடுக்கும் குளிரில் அவரவர்களுக்கு அறிவிக்கப்பட்ட அறையை நோக்கி ஓடலானோம். ஒன்பது மணிக்கு ஊட்டியில் உண்ண வேண்டிய இரவுச் சாப்பாட்டைப் பற்றி ஒரு மணிக்கு

யாருக்கு நினைவு இருக்கப் போகிறது? படுக்கையில் விழுந்து கம்பளிப் போர்வைக்குள் புகுந்து கொண்டால் போதாதா என்ற எண்ணத்தில் போய்ப் படுத்துக் கொண்டு விட்டேன். மறு நாள் காலையில்தான் எங்களுக்காகத் தயாரான விருந்தை எங்களில் பலருக்கு அந்த அகால வேளையிலும் அளித்தே மகிழ்ந்தார்கள் அரசினர் என்று தெரிந்து கொண்டேன்.

நீலகிரியில் இந்தோ-ஜெர்மன் விவசாய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் உருவாகியுள்ள உரு

ளைக் கிழங்குப் பண்ணையைக் கண்டபோது, 'மேல் நாட்டுக்காரர்கள் மேல் நாட்டுக்காரர்கள்தான்!' என்று வியக்காமல் இருக்க முடியவில்லை. இந்திய விவசாயத்தில் நவீன முன்னேற்றங்களைப் புகுத்தித் தக்க பயிற்சி அளிப்பதே இந்த 'இந்தோ - ஜெர்மன்' விவசாயத் திட்டத்தின் குறிக்கோள். விவசாயக் கால்நடைத் துறைகளில் நிபுணர்களையும் மருந்து யந்திர சாதனங்களையும் தேவையான பொருளாதார உதவியையும் ஜெர்மனி வழங்குகிறது.

டாக்டர் காஸ்டிங் என்ற ஜெர்மானிய நிபுணருக்கு வயது ஐம்பத்தைந்துக்கு மேலிருக்கும். ஆனால் வயலில் அவருடன் இளைஞர்களான எங்களால் நடந்து போக முடியவில்லை. மலைப் பிரதேசத்தை உழுது உருளைக் கிழங்கு சாகுபடிக்கு ஏற்ற நிலமாக்கச் சிறு டிராக்டர் இருக்கிறது. ஆனால் அவர்கள் அதை மட்டுமே நம்பி இருக்கவில்லை. முதலில் பாறைக் கற்களைப் புரட்டி அப்புறப்படுத்த நம்நாட்டு ஏர்க்கலப்பை முறையையும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இரண்டாவது கட்டமாகத்தான் டிராக்டரைப் பயன்படுத்துகிறார்கள். நிலத்தை அவர்கள் பண்படுத்தும் அழகு உண்டே, அபாரம். பொருவிளங்காய்



என் உறவினர் ஒருவர் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவர்கள் வீட்டுக் குழந்தை உமா அடிக்கடி 'ஃப்ரிஜ்'ஜைத் திறக்க முயன்று கொண்டிருந்தாள். அதில் அவள் விரும்பும் தின்பண்டம் என்னதான் இருக்கும் என நினைத்தேன்.....

(தொடர்ச்சி 27ம் பக்கம்)

உருண்டை போலன்றி ரவாலாடு போல் அத்தனை பொல பொல வென்று பயிரிடும் பூமியை ஆக்குகிறார்கள். அதன் பிறகு அதற்கு ஊசி போடுகிறார்கள்! விளையாட்டல்ல. உருளைக்கிழங்கு பயிரிடப்படும் பூமியை முக்கால் அடிக்கு முக்கால் அடியாகப் பிரித்துக் கொண்டு ஏராளமாக ஊசி போடுகிறார்கள். மனிதர்களுக்குப் போடும் அதே இஞ்செக்ஷன் ஊசியைப் போலவே — ஆனால் பல மடங்கு பெரிதான அளவில் — மருந்தைக் குழாயில் நிரப்பிக் கொண்டு பண்படுத்திய நிலப்பரப்பில் ஊசியை நுழைத்து அழுத்தி மருந்தைச் செலுத்துகிறார்கள்.

'நெமடோட்ஸ்' (Nematodes) என்ற ஒரு வித நோய். இதைத் தடுக்கவே இந்த மருந்து ஊசிகள். இப்படித் தயாரிக்கப்பட்ட பூமியில் வீரியமுள்ள உருளைக் கிழங்குகளை விதைக்கிறார்கள். அப்போது அவை தளதள வென்று என்னமாய் வளர்கின்றன! சாதாரண முறையில் ஓர் ஏக்கருக்கு எவ்வளவு பயிராகுமோ அதைப் போல ஐம்பது சதவீதம் அதிகமாக இம்முறையில் மகசூல் கிடைக்கிறது.

மருந்திடப்படாத நிலத்தில் நடந்து வந்த எங்களை மருந்திட்ட நிலத்துக்குள் அழைத்துச் செல்லுமுன் 'எல்லாரும் கால்களை அங்குள்ள பக்கெட் நீரில் கழுவிக் கொண்டுதான் உள்ளே வரவேண்டும்' என்று கேட்டுக் கொண்டார் ஜெர்மானிய நிபுணர். எங்கள் கால்களில் 'நெமடோட்ஸ்கள்' ஒட்டிக் கொண்டு வந்து அவர்கள் உழைப்பைப் பாழ்படுத்திவிடக் கூடாது என்பதற்காகவே இந்த முன்னேற்பாடு.

உருளைக் கிழங்கைத் தமது கையில் எடுத்துக் கொண்டு விளக்கும்போது, சொந்தக் குழந்தையைக் காட்டிக் குதூகலிக்கும் ஒரு தகப்பனின் நிலையில் இருந்தார் அந்த ஜெர்மானிய நிபுணர். நிலம் தயாராகச் சற்றுத் தாமதமாகிறது. அல்லது விதைப்பதற்கு ஏற்ற பருவமில்லை. அப்போது தயாராக உள்ள விதைக் கிழங்குகளை என்ன செய்வது? வீணாகி விடுமே என்று கவலைப்பட வேண்டாம். மருந்துக் குளியலை ஏற்றுக் கொண்ட விதைக் கிழங்குகள் அதற்கெனப் பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட தட்டுப் போன்ற பெட்டிகளிலேயே ஆனந்தமாக முளைவிட்டுக் கொண்டிருக்கின்றன. அவசரப்பட வேண்டாமாம். சாவதானமாக விதைப்பதற்கு ஏற்ற சூழ்நிலை அமையும் போது அவைகளை எடுத்து நடலாமாம். நல்ல பலன் தரும் என்று விளக்கினார் டாக்டர் காஸ்டிங்.

அவர்களது ஆராய்ச்சியையும் புதுமுறைகளையும் நாம் பயன்படுத்திக் கொள்வதோடு உழைப்பிலே அவர்கள் காட்டும் ஆர்வத்தையும் பின்பற்ற வேண்டும்.

தமிழக அரசினர் ஏற்பாடு செய்திருந்த ஆய்வுப் பயணத்தில் அணைக்கட்டுக்கள் பலவற்றையும் காணும் வாய்ப்புப் பத்திரிகையாளர்களுக்குக் கிடைத்தது.

இயற்கை அளித்துள்ள செல்வங்களாகிய நதிகளில் நாம் தொண்ணூறு சதவீதத்தைப் பயன்படுத்திக் கொண்டு வருகிறோம். ஆகவே புதிய பாசனத் திட்டங்களுக்கான வாய்ப்



சென்னை நகர சங்கீத சபைகளின் சமஷ்டிக் குழுவினர், சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்குப் பாராட்டு விழா நடத்திக் கௌரவித்தனர். லாயிட்ஸ் ரோடு ஹேம மாலினியில் நடைபெற்ற இந்த இனிய விழாவில் சங்கீத சபை சமஷ்டித் தலைவர் திரு யக்ஞராமன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். பிரதம நீதிபதியாக இருப்பதுடன் கர்நாடக சங்கீதத்தில் ஆழ்ந்த ஈடுபாடும் தியாகராஜ கீர்த்தனைகளில் புலமையும் கொண்ட திரு எம். அனந்தநாராயணன் இவ்விழாவுக்குத் தலைமை வகித்து வித்வான்கள் பாவபூர்வமாகப் பாடவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் வித்வத் திறமையையும் எடுத்துச் சொன்னார். இந்தப் பாராட்டு வைபவத்தில் ஸ்ரீ எச். வி. ஆர். அய்யங்கார், திரு ம. பொ. சி., ஸ்ரீமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு, திரு எம். பக்தவத்ஸலம், திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் ஆகியோர் பல்வேறு கோணங்களில் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் சிறப்பை நவின்றார்கள். ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரி சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்குப் பொன்னாடை போர்த்தி மகிழ்ந்தார். நகர சங்கீத சபைகள் சமஷ்டி இசையரசி ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு வெள்ளி சரஸ்வதி தேவியை வழங்கியது.

ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் சார்பில் நன்றி தெரிவித்துப் பேசிய கல்கி அதிபர் திரு சதாசிவம் அவர்கள் இந்த வெள்ளி சரஸ்வதி, ஆண்டுதோறும் எந்த ஒரு சபா அதிகமாக இளம் வித்வான்களுக்கு வாய்ப்புக்கள் அளிக்கிறதோ அந்த சபாவை அலங்கரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கலாதேவியின் பரிபூரண அருள் பெற்று, கர்நாடக சங்கீதத்தின் புதிய தலைமுறை மட்டில்லாச் சிறப்பு எய்த வாழ்த்துகிறோம்.

---

புக்கள் குறைந்து விட்டன. அடுத்த மாநிலமான கேரளத்தின் ஒத்துழைப்புடன் மேற்கொள்ளப்பட்டுள்ள திட்டம் பரம்பிக்குளம் ஆழியாறு திட்டம்.

அதே போல் ஹோசூர் மாவட்டத்தில் ஹொக்கேனகல் திட்டம் கன்னட அரசின் ஒத்துழைப்புடன் நடைபெற வேண்டிய ஒன்று.

திட்டங்கள் கிடக்கட்டும். இந்தத் திட்டப் பகுதிகளுக்குப் போகும் பாதை.... ஆஹா! அற்புதமான காட்சி!

ஆனைமலைக் குன்றுகளிலும் காடுகளிலும் இயற்கையன்னை தன் சௌந்தரியத்தை அப்படிக் கொட்டிக் குவித்திருக்கிறாள். அதே போன்று ஹொகனேகல் நீர்வீழ்ச்சிப் பகுதியிலும் இயற்கை அன்னையின் சௌந்தரியத்தைக் காண முடிந்தது.

தண்ணீர், பாறைகளைக் குடைந்து விசித்திரமான கோலங்களை உண்டாக்கியிருக்கும் அற்புதத்தை ஹொகனேகல்லில் பார்த்து வியக்கலாம். ஜனங்கள் குளிப்பதற்கு ஏற்றபடி இந்த நீர்வீழ்ச்சியின் ஒரு சிறு பகுதியைத் திருப்பி ஸ்நான கட்டம் அமைத்திருக்கிறார்கள். அது இயற்கையை மனிதன் தன் இஷ்டத்துக்குக் கட்டியாள முனையும்போது அது எப்படிக் கலை இழந்து விடுகிறது என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ஆற்றோடு சற்றுத் தள்ளிப் படகில் சென்று காடுகளில் புகுந்து, பாறைகளில் தாவி ஏறிப் பார்ப்போமானால், அடடா! அடடா! நீரின் பயங்கரத்தை, அது அட்டகாசமாகச் சீறிச் சிரித்துச் சுழித்து ஓடும் அற்புதத்தை, ஹொகனேகல்லின் ஒப்பற்ற முழு அழகைக் கண்டு களிக்க முடிகிறது.

ஹொகனேகல் ஓர் அற்புதமான உல்லாசப் பயணத்துக்குகந்த இடம். ஆனால் இங்கு சுலபமாக வரவோ வந்து தங்கி மகிழவோ வசதிகள் இல்லையே. —கௌசிகன்

(இது குழந்தைகளுக்கு வழக்கமாக வழங்கப்படும் முதல் திட உணவு) அப்படியென்றால், நீங்கள் புத்தி சாலியான தாயார்தான்!

பாரெக்ஸ் குழந்தைகளுக்கு முழுப்போஷாக்கும் அளிக்கிறது; இது எளிதில் ஜீரணமாகும். சுகாதார ரீதியில் உருவாக்கப்படும் பாரெக்ஸ், தயாரிப்பதற்கு சௌகரியமானது; சுலபமானது பாரெக்ஸுடன், தேவைக்குத் தக்கபடி பாலும், சர்க்கரையும் சேர்க்க வேண்டியது தான். குழந்தையின் உணவு தயார்! முதலில் குழந்தைக்கு சிறு-சிறு அளவில் பாரெக்ஸ் ஊட்டத் தொடங்குங்கள்.

பின்னர், அளவை அதிகரிக்கவும். தானியங்கள், விடமின்கள் கனிஜ சத்துக்கள், இரும்புச்சத்து மற்றும் சரியான அளவு புரத சத்துக்கள் கலந்து உருவாக்கப்படும் பாரெக்ஸ் பச்சிளம் குழந்தைகளுக்கு முழுப் போஷாக்கும் அளிக்கிறது.



ஆரோக்கியமுள்ள திடமான வளர்ச்சிக்குத் தேவைப்படும் எல்லா சிறந்த அம்சங்களும் இதில் அடங்கியுள்ளன. அதனால்தான், உலகெங்கிலும் தாய்மார்கள் பாரெக்ஸை நம்புகிறார்கள்.

இலவசமாக பாரெக்ஸ் புத்தகம் பெற, இந்தக் கூப்பனை அனுப்புங்கள்.

என் குழந்தைக்கான மிகச் சிறந்த உணவைப்பற்றி நான் அறிய விரும்புகிறேன் தயவுசெய்து பாரெக்ஸ் புத்தகத்தின் பிரதி ஒன்றை அனுப்பவும். தபால் செலவுக்காக 20 பைசா தபால்தலை அனுப்பியிருக்கிறேன் என் முகவரி.

பெயர் ..............................

விலாசம் ..............................

..............................

.............................. IDH

பாரெக்ஸ் தபால் பெட்டி நம்பர் 202, பம்பாய்-1.




**பாரெக்ஸ் குழந்தைகளின் முதல் திட உணவு**

**Glaxo**

க்ளாக்ஸோ லாபரெட்டரீஸ் (இந்தியா) லி.







1. திருவையாற்றில் ஆராதனை விழாவில் தியாகராஜர் ஊர்வலமாகச் செல்கிருர். 2. திருவரங்கம் பாஞ்சராத்ர பூஷணம் திரு இராகவபட்டரின் 61வது ஆண்டுவிழா கொண்டாடப்பட்டது. 3. பம்பாய் கவர்னர் முன்னிலையில் குமாரிகள் லலிதா, கீதா இருவரின் பரத நாட்டிய அரங்கேற்றம் நடைபெற்றது. 4. மாநிலத் தமிழாசிரியர் கழகப் பதினேராம் மாநாட்டில் மயிலை சிவமுத்து அவர்களின் படத்தைத் திரு நெ. து. சுந்தர வடிவேலு திறந்து வைத்தார். 5. பீஹார், தான்பாத் நிலக்கரிச் சுரங்க தென்னிந்திய கழகத்தின் ஆதரவில் குமாரி ஜானகியின் பரதநாட்டிய அரங்கேற்றம் நடைபெற்றது. 6. திரு என். எஸ். கிருஷ்ணனின் உருவச் சிலையைத் தமிழக முதன்மந்திரி திறந்து வைத்தார்.







# பொன்னியின் செல்வன்

ஐம்பத்துநான்காம் அத்தியாயம்

## நஞ்சினும் கொடியாள்''

மாமல்லபுரத்தில் பழைய பல்லவ சக்கரவர்த்திகளின் மாளிகை ஒன்றில் அன்றிரவு அம்மூன்று வீரசிகாமணிகளும் தங்கினார்கள். இரவு உணவு அருந்தியானதும் மலையமான் அரசர் ஐந்து ரதங்களுக்கு அருகில் அரவான் கதை நடக்கிறது என்று கேள்விப்பட்டு அதைக் கேட்கப் போய் விட்டார். ஆதித்த கரிகாலனும் பார்த்திபேந்திரனும் அரண்மனை மேல் மாடத்துக்குச் சென்றார்கள்.

மேல் மாடத்திலிருந்து ஆதித்த கரிகாலன் மாமல்லபுரத்தின் இரவுத் தோற்றத்தைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆங்காங்கு மினுக்கு மினுக்கு என்று சில தீபங்கள் மங்கலாகப் பிரகாசித்தன. வீதிகளில் பெரும்பாலும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. கோயில்களில் அர்த்தஜாம பூஜை முடிந்து வெளிக் கதவுகளைச் சாத்திக் கொண்டிருந்தார்கள். சமுத்திரத்தின் கோஷம் 'ஓ'வென்று சோகத் தொனியாகக் கேட்டது. ஐந்து ரதங்களுக்குப் பக்கத்தில் வில்லுப் பாட்டு வித்வானும் அவருடைய கோஷ்டியும் அரவான் கதை நடத்த, அவர்களைச் சூழ்ந்து கதை கேட்டுக் கொண்டிருந்த ஜனக் கூட்டம் தீவர்த்திகளின் ஒளியில் கரிய நிழல் உருவங்களாகத் தெரிந்தனர்.

''இந்த முதிர்ந்த வயதில் கிழவர் கதை கேட்கப் போய்விட்டார் பார்! என்ன இருந்தாலும் பழைய காலத்து மனிதர்கள்தான் மனிதர்கள்! அவர்களுடைய உடல் வலிமையும் மனோ திடமும் இந்த நாளில் யாருக்கு உண்டு?'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''அரசே! தாங்களும் பழைய காலத்தின் பெருமையைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்து விட்டீர்களா? பழைய கால மனிதர்கள் சாதித்த என்ன காரியத்தை நம் காலத்தில் நாம் சாதிக்கவில்லை? தங்களைப் போல் இளம் பருவத்தில் போர்க் களத்தில் வீரச் செயல் புரிந்தவர்களைப் பற்றிக் கதைகளிலும் காவியத்திலும் கூடக் கேட்டதில்லையே?'' என்றான் பார்த்திபேந்திரன்.

''பார்த்திபா! நீ உண்மை உள்ளம் படைத்தவன். மனத்தில் ஒன்று வைத்துக் கொண்டு வாயில் ஒன்று பேசாதவன் என்பதை நன்கு அறிந்திருக்கிறேன். இல்லாவிட்டால் நீ என்னுடைய நண்பன் அல்ல, இத சத்ரு என்றே சந்தேகிப்பேன். அவ்வளவு தூரம் என்னைக் குறித்து நீ முகஸ்துதி செய்கிறாய். முகஸ்துதியைப் போல் ஒருவனைப் பாதாளப் படுகுழியில் தள்ளக் கூடியது வேறொன்றுமில்லை!'' என்றான் ஆதித்த கரிகாலன்.

''ஐயா! சுயநல நோக்கத்துடன் ஒருவனைப் பற்றி இல்லாத உயர்வைப் புனைந்து சொன்னால் அது முகஸ்துதியாகும். தஞ்சாவூரில் பழுவேட்டரையர்களின் அடிமையாக இருக்கிறானே மதுராந்தகன், அவனிடம் சென்று நீ 'வீராதி வீரன்' என்று புகழ்ந்தால் அது முகஸ்துதியாகும். அப்படி நான் எப்போதாவது செய்ததாகத் தெரிந்தால் என்னை உடனே தங்கள்

அமரர் கல்கி

கையிலுள்ள வாளினால் கொன்று விடுங்கள். தங்களைப் பற்றி நான் சொன்னதில் ஒரு வார்த்தை கூட அதிகம் இல்லையே? பழைய காலத்தில் எந்த வீரன் இவ்வளவு இளம் வயதில் இத்தனை பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறான்! தங்கள் பெரிய பாட்டனாராகிய யானைமேல் துஞ்சிய இராஜாதித்தியரை ஒருவேளை தங்களுக்குச் சமமாக வேணுமானால் சொல்லலாம்; தங்களை விட அதிகம் என்று அவரையும் சொல்ல முடியாது...''

''நிறுத்து, பார்த்திபா, நிறுத்து! இராஜாதித்யர் எங்கே, நான் எங்கே? மகாசமுத்திரம் போல் பொங்கி வந்த இராஷ்டிரகூடர்களின் மாபெரும் சைன்யத்தை ஒரு சின்னஞ் சிறு படையை வைத்துக் கொண்டு எதிர்த்து நிர்மூலமாக்கி வீர சொர்க்கம் அடைந்த இராஜாத்தியரைப் பற்றிப் பேசுவதற்கே நாம் தகுதியற்றவர்கள். அவருடன் நம்மை ஒப்பிட்டுக் கொள்வதா? சோழ குலம் இருக்கட்டும்; நீ பிறந்த பல்லவ குலத்தில் முற்காலத்தில் எப்பேர்ப்பட்ட மகாபுருஷர்கள் இருந்தார்கள்! மகேந்திர வர்மரையும் மாமல்லரையும் இனி இந்த நாட்டில் எப்போதாவது காணப் போகிறோமா? தெற்கே துங்கபத்திரையிலிருந்து வடக்கே நர்மதை வரையில் ஒரு குடை நிழலில் அண்ட புலிகேசியை வென்று வாதாபியை அழித்து ஜயஸ்தம்பம் நாட்டிய நரசிம்மவர்மர் எங்கே? நீயும் நானும் எங்கே? இந்த மாமல்லபுரத்தைப்போல் ஒரு சொப்பனபுரியை நம்முடைய காலத்திலோ நமக்குப் பிற்காலத்திலோ யாராவது சிருஷ்டி செய்ய முடியுமா?... அடடா! ஒரு தடவை நாலு புறமும் நன்றாகப் பார், பார்த்திபேந்திரா! அதோ வில்லுப் பாட்டு நடக்கிறதே, அங்கே உற்றுப் பார்! அம்மாதிரி கற்பாறைகளைக் குடைந்து அற்புத ரதங்களின் வடிவங்களிலே அமைத்தவர்கள் சாதாரண மனிதர்களா? முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு இந்த மாமல்லபுரம் எத்தகைய கோலாகலமான காட்சி அளித்திருக்க வேண்டும் என்று நினைக்கும்போதே எனக்கு உடம்பு சிலிர்க்கிறது. உனக்கு அத்தகைய உணர்ச்சி உண்டாகவில்லையா? உன் முன்னோர்களைப் பற்றி எண்ணும் போது உன் தோள்கள் பூரிக்கவில்லையா?''

''அரசே! சற்று முன்பு தங்களை முகஸ்துதி செய்வதாகச் சொன்னீர்களே? சில சமயம் தங்களிடமுள்ள குற்றங் குறைகளையும் நான் எடுத்துச் சொல்வதுண்டு என்பதை மறந்துவிட்டீர்கள். சிற்பம் — சித்திரம் — கலை என்று வாணாளை வீணாக அடிக்கும் பைத்தியம் தங்களையும் பிடித்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பைத்தியம் பிடித்ததினாலேதான் என் முன்னோர்கள் அடைந்த வெற்றி யெல்லாம் வீணாக ஆயிற்று. வாதாபிக்குச் சென்று, ஜயஸ்தம்பம் நாட்டிவிட்டு மாமல்லர் திரும்பி வந்தாரே? பிறகு என்ன செய்தார்? கற்களைச் செதுக்கிக் கொண்டும், பாறைகளைக் குடைந்து கொண்டும் உட்கார்ந்திருந்தார்! அதன் பலன் என்ன? சில காலத்துக்கெல்லாம் மறுபடியும் சளுக்கர்கள் தழைத்தோங்கினார்கள். பெரும் படையுடன் மீண்டும் பழி வாங்குவதற்கு வந்தார்கள். காஞ்சியையும் உறையூரையும் அழித்தார்கள். மதுரை வரையில் சென்றார்கள். நெடுமாற பாண்டியன் மட்டும் நெல்வேலியில் சளுக்கர் படையைத் தடுத்து நிறுத்தித் தோற்கடித்திராவிட்டால் இன்றுவரை இத்தென்னாடு முழுவதும் சளுக்கர் ஆட்சியில் இருந்திருக்கும் அல்லவா?''

''இல்லை, பார்த்திபா, இல்லை! உலகில் எந்த அரச குலமும் என்றென்றைக்கும் நீடித்திருந்ததாக நாம் கேள்விப்பட்டதில்லை. இராமர் பிறந்த இக்ஷ்வாகு குலத்துக்கும் ஒரு முடிவு ஏற்பட்டது. சளுக்கர்களை வீழ்த்த இரட்டை மண்டலத்தார் தோன்றினார்கள். இராஜ்யங்கள் சில சமயம் உன்னத நிலையை அடைவதும் சில சமயம் தாழ்ச்சி உறுவதும் இயல்பு. சில இராஜ்யங்கள் சில காலம் எவ்வளவோ உன்னதமாக இருந்துவிட்டு இருந்த இடம் தெரியாமல் போய்விடுகின்றன. என்னுடைய முன்னோர்களையே பார்! கரிகால் வளவன், கிள்ளி வளவன் முதலிய சோழ மன்னர்கள் எவ்வளவோ சீரும் சிறப்புமாக இருந்தார்கள். அவர்களை யெல்லாம் பற்றி இப்போது நமக்கு என்ன தெரிந்திருக்கிறது? கவிஞர்கள் சிலர் அவர்களைப் புகழ்ந்து பாடியிருப்பதனால் அவர்கள் பெயரையாவது தெரிந்து கொண்டிருக்கிறோம். கவி பாடிய பாணர்கள் உண்மையைத்தான் பாடினார்களோ அல்லது நன்றாக மதுபானம் செய்து விட்டு மனம் போன போக்கில் பாடினார்களோ நமக்குத் தெரியாது. ஆனால்



மகேந்திர பல்லவரும் மாமல்லரும் இந்தச் சிற்பபுரியைச் சிருஷ்டித்தார்களே, இது ஆயிரமாயிரம் ஆண்டு காலம் அவர்களுடைய பெருமையை உலகத்துக்கு உணர்த்திக் கொண்டிருக்கும். அவர்கள் செய்த காரியத்துக்கு ஈடாக நீயும் நானும் என்ன செய்திருக்கிறோம்? போர்க்களத்திலே பல்லாயிரம் மனிதர்களைக் கொன்று குவித்திருக்கிறோம். இரத்த வெள்ளம் ஓடச் செய்திருக்கிறோம். உலகில் நம் பெயரை நிலைநிறுத்த வேறு என்ன செய்திருக்கிறோம்?''



இதைக் கேட்ட பார்த்திபேந்திரன் இவ்விதம் பேசுவது ஆதித்த கரிகாலன் தானா என்று ஐயுறும் பாவனையுடன் சிறிது நேரம் திகைத்திருந்தான். பிறகு ஒரு பெருமூச்சு விட்டு, ''அரசே! போரையும் வீரத்தையும் குறித்துத் தாங்களே இவ்விதம் பேசுவது என்றால், நான் என்ன சொல்வதற்கு இருக்கிறது? தங்களுடைய மனம் இன்று சரியான நிலையில் இல்லை. அதனாலேயே இப்படிப் பேசுகிறீர்கள். ஐயா! தங்களுடைய மனத்திலுள்ள வேதனை இன்னதென்பதை எனக்குச் சொல்லலாகாதா? தங்களுடைய வைர நெஞ்சத்தைச் சிறிது திறந்து காட்டக் கூடாதா?'' என்று ஆவலோடு கேட்டான்.

''பார்த்திபா! என் நெஞ்சைப் பிளந்து காட்டினேனாயின், அதற்குள்ளே என்ன இருக்கும், — எவர் இருப்பர் என்று நினைக்கிறாய்?''

''அதைத்தான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன், சுவாமி!''

''என்னைப் பெற்ற தாயும் தந்தையும் இருக்க மாட்டார்கள். என் உயிரினும் இனிய தங்கையும் தம்பியும் இருக்க மாட்டார்கள். என் உயிருக்குயிரான நண்பர்களாகிய நீயும் வந்தியத் தேவனும் இருக்க மாட்டீர்கள். வஞ்சகமே வடிவான ஒரு பெண் அதில் இருப்பாள். பாவமே உருவான பழுவூர் இளைய ராணி அதில் இருப்பாள். நஞ்சினும் கொடியவளான நந்தினி என் நெஞ்சுக்குள்ளே இருந்து என்னைப் படுத்தி வைக்கும் பாட்டை இன்றுவரை வாயைத் திறந்து யாரிடமும் சொன்னதில்லை. உன்னிடம்தான் இன்றுசொன்னேன்!'' என்று ஆதித்த கரிகாலன் கூறிய வார்த்தைகளில் தணலின் ஜ்வாலை வீசிற்று.

''அரசே! அதை ஒருவாறு நான் ஊகித்தேன். பழுவூர் இளைய ராணியின் பேச்சு வரும்போதெல்லாம் தங்கள் முகம் கறுத்துக் கண்கள் சிவந்து சொல்ல முடியாத மனவேதனையை வெளியிட்டதைக் கொண்டு அறிந்தேன். ஆனால் இந்தத் தகுதியில்லா மோகம் எப்படித் தங்கள் நெஞ்சில் இடம் பெற்றது? அந்நியப் பெண்களையெல்லாம் அன்னையெனக்கருதும் மரபில் தாங்கள் வந்தவராயிற்றே? பழுவேட்டரையர் தங்கள் குலத்துக்கு நெடுங்கால உறவினர்; பிராயம் முதிர்ந்தவர். இன்றைக்கு அவர்கள் நமக்குப் பகைவர்களானாலும் முன்னால் அப்படி இல்லையே! தங்கள் தந்தையும் பாட்டனாரும் அவரை எவ்வளவு மதித்து மரியாதை செய்தார்கள்? அப்படிப்பட்டவர் அக்கினி சாட்சியாக மணந்து கொண்ட பெண்ணை... அவள் எவ்வளவு தான் கெட்டவளானாலும்... தாங்கள் மனத்திலும் கருதலாமா?''

''கூடாது, பார்த்திபா, கூடாது! அது எனக்குத் தெரியாது என்று நினைக்கிறாய்? தெரிந்திருப்பதனாலேதான் இந்த மனவேதனை. அவள் பழுவேட்டரையரை மணந்த பிறகு என் நெஞ்சில் இடம் பெறவில்லை. அதற்கு வெகு காலம் முன்பே என் உள்ளத்தில் அவளுடைய மோக விஷம் ஏறிவிட்டது. அதைக் களைந்தெறிய எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. குற்றம் எல்லாம் அவள் பேரில் என்று தோன்றும்படி நான் பேசுகிறேன். குற்றம் யாருடையது என்பதைக் கடவுளே அறிவார். பார்க்கப் போனால் பாவம், பழியெல்லாம் எங்களைப் படைத்த கடவுள் தலையிலேயே விழ வேண்டும். அல்லது எங்களைச் சந்திக்கப் பண்ணிய பின்னர் பிரித்து வைத்த விதியின் பேரில் குற்றம் சொல்ல வேண்டும்!''

''அரசே! நந்தினி பழுவூர் ராணியாவதற்கு முன்னால் தாங்கள் அவளைச் சந்தித்ததுண்டா? எங்கே, எப்போது, எப்படிச் சந்தித்தீர்கள்?''

''அது பெரிய கதை. இன்றைக்கு அதைக் கேட்க விரும்புகிறாயா?''

''கட்டாயம் கேட்க விரும்புகிறேன். அதைத் தெரிந்து கொள்ளா விட்டால் எனக்கு மன நிம்மதி இராது. நாளைக்கு இலங்கை போகச் சொல்லுகிறீர்களே? அங்கே சென்று என் கடமையைச் சரிவரச் செய்ய முடியாது. நிலைமை இன்னதென்பதைத் தெரிந்து கொண்டு தங்களுக்கு ஆறுதல் சொல்லி விட்டுப் போனால்தான் என் உள்ளம் ஒருவாறு நிம்மதி அடையும்!''

''நண்பா! எனக்கு ஆறுதல் சொல்லப் போகிறாயா? இந்த ஜன்மத்தில் எனக்கு ஆறுதல் என்பது கிடையாது. அடுத்த பிறவியில் உண்டா என்பதும் சந்தேகம்தான். உன்னுடைய மன நிம்மதிக்காகச் சொல்லுகிறேன். உன்னிடம் சொல்லாமல் நான் எதையோ ஒளித்து வைத்திருப்பதாக எண்ணிக் கொண்டு நீ இலங்கை போக வேண்டியதில்லை!''

இவ்விதம் கூறி ஆதித்த கரிகாலன் சிறிது நிதானித்தான். பிறகு ஒரு நெடிய பெருமூச்சு விட்டு விட்டுச் சொல்லத் தொடங்கினான்.

## ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

# நந்தினியின் காதலன்

"முதல் முதலாக என்னுடைய பன்னிரண்டாம் பிராயத்தில் நந்தினியை நான் சந்தித்தேன். ஒரு நாள் பழையாறையில் எங்கள் அரண்மனையின் பின்புறத்தில் உள்ள நீர் ஓடையில் நானும் என் தங்கையும் தம்பியும் ஓடம் விட்டு விளையாடிக் கொண்டிருந்தோம். விளையாட்டு முடிந்து ஓடத்திலிருந்து இறங்கிப் பூஞ்சோலை வழியாக அரண்மனைக்குச் சென்றோம். வழியில் எங்கள் பெரிய பாட்டி செம்பியன் மாதேவியின் குரல் கேட்டது. நாங்கள் மூன்று பேரும் பாட்டியிடம் செல்லமாக வளர்ந்தவர்கள். பாட்டியிடம் நாங்கள் ஓடம் விட்டதைப் பற்றிச் சொல்வதற்காக அவருடைய குரல் கேட்ட கொடி வீட்டுக்குள் புகுந்தோம். அங்கே பாட்டியைத் தவிர இன்னும் மூன்று பேர் இருந்தார்கள். மூன்று பேரில் ஒருத்தி எங்களையொத்த பிராயத்துச் சிறு பெண். மற்ற இருவரும் அவளுடைய பெற்றோர்கள் என்று தெரிந்தது. அந்தப் பெண்ணைப் பற்றி அவர்கள் ஏதோ மாதேவடிகளிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் கொடி வீட்டுக்குள் புகுந்ததும் அங்கிருந்த எல்லாரும் எங்களைப் பார்த்தார்கள். ஆனால் அந்தச் சிறு பெண்ணின் வியப்பினால் விரிந்த நெடிய கண்கள் எங்களைப் பார்த்தது மட்டும் என் கண்ணுக்குத் தெரிந்தது. அந்தக் காட்சி இன்றைக்கு நினைத்துப் பார்த்தாலும் என் மனக் கண் முன்னால் நிற்கிறது...''

இவ்விதம் கூறிக் கரிகாலன் வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டு மௌனமாயிருந்தான். வானத்தில் அச்சமயம் உலாவிய மெல்லிய மேகத் திரைக்குள்ளே அந்தச் சிறு பெண்ணின் முகத்தை அவன் பார்த்தானோ என்னமோ தெரியாது.

''ஐயா! அப்புறம் சொல்லுங்கள்!'' என்று பார்த்திபேந்திரன் கேட்டதும் கரிகாலன் இந்த உலகத்துக்கு வந்து கதையைத் தொடர்ந்தான்:

''பாட்டியிடம் நாங்கள் ஓடம் விட்டு விளையாடியதைப் பற்றி என் தங்கை குந்தவைதான் சொன்னாள். அதைக் கேட்ட பிறகு, மாதேவடிகள், 'என் கண்ணே! இந்தப் பெண்ணைப் பார்த்தாயா? எவ்வளவு சூடிகையாக இருக்கிறாள்? இவர்கள் பாண்டிய தேசத்திலிருந்து நம்முடைய ஈசான சிவபட்டர் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். கொஞ்ச நாளைக்கு இங்கே இருப்பார்கள். இந்தப் பெண்ணின் பெயர் நந்தினி. இவளையும் சில சமயம் உங்கள் விளையாட்டுக்களில் சேர்த்துக் கொள்ளுங்கள். இவள் உனக்கு நல்ல தோழியாயிருப்பாள்!' என்றார். ஆனால் என் தங்கைக்கு இது பிடிக்கவில்லையென்பதை நான் அறிந்து கொண்டேன். நாங்கள் மூவரும் அங்கிருந்து அரண்மனைக்குச் சென்றபோது குந்தவை, 'அண்ணா! அங்கே ஒரு பெண் நின்றாளே, எவ்வளவு அவலட்சணமாயிருந்தாள் பார்த்தாயா? அவளுடைய முகம் ஏன் அப்படிக் கோட்டான் முகம் மாதிரி இருக்கிறது? அவளுடன் நான் விளையாட வேண்டும் என்கிறாரே, பாட்டி? அவள் முகத்தைப் பார்த்தால் என்னால் சிரிக்காமலிருக்கவே முடியாதே? என்ன செய்வது?' என்றாள். இதைக் கேட்டதும் எனக்கு ஒரு முக்கியமான உண்மை தெரிய வந்தது. அதாவது பெண்கள் பிறக்கும் போதே பொறாமையுடன் பிறக்கிறார்கள் என்பதுதான். ஒரு பெண் எவ்வளவு அழகுடையவளாக இருந்தாலும் இன்னொரு பெண் அழகாயிருப்பதைக் காணச் சகிப்பதில்லை. எங்கள் குலத்தில் பிறந்த பெண்களுக்குள்ளே என் சகோதரி சௌந்தரியம் மிக்கவள் என்பது பிர



சித்தமானது. அவளுக்கும் இன்னொரு பெண் அழகா யிருப்பதைக் கண்டு பொறுக்கவில்லை. இல்லாவிட்டால் அந்தப் பெண்ணைக் குறித்து ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? நான் என் சகோதரியை இலேசில் விடவில்லை. அவளுக்குக் கோபம் உண்டாக்குவதற்காகவே அந்த இன்னொரு பெண் அழகாகத்தான் இருக்கிறாள் என்று வற்புறுத்திச் சொன்னேன். இருவரும் அடிக்கடி இதைப் பற்றி விவாதம் செய்து சண்டை பிடித்தோம். எங்கள் சகோதரன் அருள்மொழியோ இந்தச் சண்டையின் காரணத்தை அறியாமல் திகைத்தான். பிறகு சில நாளைக்கெல்லாம் பாண்டிய நாட்டு யுத்தத்துக்குச் சென்ற என் தந்தையோடு நானும் புறப்பட்டுச் சென்றேன். பாண்டிய சைன்யத்தையும் பாண்டியர்களுக்கு உதவியாக இலங்கை அரசன் அனுப்பிய சைன்யத்தையும் பல இடங்களில் முறியடித்தோம். கடைசியில் வீர பாண்டியன் ஓடி ஒளிந்து கொண்டான். அவன் ஒளிந்து கொண்டானா அல்லது போர்க்களத்தில் மடிந்தானா என்பது அச்சமயம் தெரியவில்லை. வீரபாண்டியன் சைன்யத்துக்கு உதவியாக வந்த இலங்கை வீரர்கள் பின்வாங்கி ஓடினார்கள். அவர்களைத் துரத்திக் கொண்டு நாங்கள் சேதுக்கரை வரையில் சென்றோம். இறந்தவர்கள் போக மற்றவர்கள் கப்பலேறித் தப்பித்துச் சென்றார்கள். அடிக்கடி பாண்டியர்களுக்கு உதவியாகப் படைகள் அனுப்பித் தொல்லைப்படுத்தும் இலங்கை மன்னர்களுக்கு என் தந்தை புத்தி கற்பிக்க விரும்பினார். கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் தலைமையில் ஒரு பெரிய படையை இலங்கைக்கு அனுப்புவதென்று தீர்மானித்தார். இதற்கு வேண்டிய கப்பல்களையும் தளவாடங்களையும் சேகரிக்கச் சிறிது காலமாயிற்று. ஆயினும் நாங்கள் அங்கேயே தாமதித்து, கப்பல்களில் படைகளை ஏற்றி அனுப்பினோம். மாதோட்டத்தில் நம் வீரர்கள் பத்திரமாகச் சென்று இறங்கினார்கள் என்று தெரிந்த பிறகே அங்கிருந்து சோழ நாட்டுக்குத் திரும்பினோம்.

"மீண்டும் நான் பழையாறைக்கு வந்து சேருவதற்குள் இரண்டு வருஷத்



துக்கு மேலாகி விட்டது. மதுரைப் பக்கத்திலிருந்து வந்திருந்த அர்ச்சகர் பெண்ணை நான் அடியோடு மறந்துவிட்டேன். பழையாறைக்கு வந்து பார்த்தபோது என் சகோதரியும் அப் பெண்ணும் அடையாளம் அறிய முடியாதபடி வளர்ந்திருக்கக் கண்டேன். அவர்களிருவரும் மிக்க சிநேகத்துடன் பழகுவதையும் கண்டேன். நந்தினி வளர்ந்திருந்தது மட்டுமல்ல, ஆடை ஆபரணங்களினால் ஜொலித்துக்கொண்டிருந்தாள். இது என் சகோதரியின் காரியம் என்று அறிந்தேன். முன்போலில்லாமல் நந்தினி இப்போது என்னைப் பார்க்கவும் பேசவும் கூச்சப்பட்டாள். அதை நான் போக்குவதற்குப் பாடுபட்டேன். வேறு எதிலும் காணாத இன்பம் அவளுடன் பேசிப்பழகுவதில் அடைந்தேன். இது எனக்கு அந்தச் சிறிய பிராயத்தில் எவ்வளவு வியப்பை அளித்தது என்பதைச் சொல்ல முடியாது. காவேரியில் பெருகி வரும் புது வெள்ளத்தைப் போல் என் உள்ளத்தில் ஏதோ ஒரு புதுமை உணர்ச்சி பொங்கி வெள்ளமாய்ப் பெருகிக் கொண்டிருந்தது. ஆனால் இது என்னைச் சேர்ந்தவர்கள் யாருக்கும் பிடிக்கவில்லையென்பதை விரைவிலேயே கண்டு கொண்டேன். நான் வந்ததிலிருந்து குந்தவை அப் பெண்ணிடம் வெறுப்பைக் காட்டத் தொடங்கினாள். ஒரு நாள் எங்கள் பாட்டியார் மாதேவடிகள் என்னை அழைத்து, 'நந்தினி அர்ச்சகர் வீட்டுப் பெண்; நீயோ சக்கரவர்த்தி குமாரன்; உங்கள் இரண்டு பேருக்கும் இப்போது பிராயமும் ஆகிவிட்டது. ஆகையால் நந்தினியுடன் நீ பழகுவது உசிதமல்ல' என்று புத்திமதி கூறினார். அதுவரை பாட்டியைத் தெய்வமென மதித்து வந்த நான் அப்போது அவரிடம் கோபமும் அவருடைய வார்த்தையில் அவமதிப்பும் கொண்டேன்.

அவருடைய புத்திமதியை மீறி நந்தினியைத் தேடிப் பிடித்துப் பேசிப் பழகினேன். இது நெடுங்காலம் நிலைத்திருக்கவில்லை. திடீரென்று ஒரு நாள் நந்தினியும் அவளுடைய பெற்றோர்களும் பாண்டிய நாட்டில் அவர்களுடைய ஊருக்குப் புறப்பட்டுச் சென்று விட்டார்கள் என்று தெரிந்தது. அப்போது எனக்குத் துக்கம் பொங்கி வந்தது. கோபம் என்னை மீறி வந்தது; துக்கத்தை என் மனத்துக்குள் வைத்துக்கொண்டு கோபத்தை என் சகோதரியின் பேரில் காட்டினேன். நல்ல வேளையாகச் சில நாளைக்கெல்லாம் நான் வடக்கே பிரயாணப்பட நேர்ந்தது. திருமுனைப்பாடியையும், தொண்டை மண்டலத்தையும் ஆக்கிரமித்திருந்த இராஷ்டிரகூடப் படைகளை விரட்டுவதற்காகப் புறப்பட்ட சோழ சைன்யத்துடன் நானும் புறப்பட்டு வந்தேன். அப்போதுதான் நீயும் நானும் சந்தித்தோம்; இணை பிரியாச் சிநேகிதர்களானோம்.

"மலையமான் அரசருடைய உதவியுடன் நீயும் நானும் இராஷ்டிரகூடப் படைகளுடன் போரிட்டோம். பாலாற்றுக்கு வடக்கே அவர்களைத் துரத்தி அடித்துக் காஞ்சி நகரையும் கைப்பற்றினோம். அச்சமயத்தில் இலங்கையிலிருந்து கெட்ட செய்தி வந்தது. நமது படை அங்கே முறியடிக்கப்பட்டதென்றும், கொடும்பாளூர் சிறிய வேளார் இறந்து விட்டார் என்றும் தெரிந்தன. இதைக் கேட்டுவிட்டு, அது வரையில் பாலைவனத்தின் மத்தியில் பாறைக் குகையில் ஒளிந்திருந்த வீர பாண்டியன் புற்றிலிருந்து பாம்பு புறப்படுவதுபோல் வெளிப்பட்டு வந்தான். மறுபடியும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு மதுரையைக் கைப்பற்றி மீனக் கொடியை ஏற்றினான். இதையெல்லாம் கேட்டபோது உனக்கும் எனக்கும் எப்படிப்பட்ட வீராவேசம் உண்டாயிற்று என்பது ஞாபகம் இருக்கிறதல்லவா? நாம் இருவரும் உடனே புறப்பட்டுப் பழையாறைக்குச் சென்றோம். என் தந்தை சக்கரவர்த்திக்கு அப்போதே உடல் நலம் கெடத் தொடங்கியிருந்தது. கால்களின் சுவாதீனம் குறைந்திருந்தது. ஆயினும் சக்கரவர்த்தி பாண்டிய நாட்டுப் போர்க்களம் புறப்படச் சித்தமாயிருந்தார். வேண்டாம் என்று நான் அவரைத் தடுத்தேன். பாண்டிய சைன்யத்தை முறியடித்து மதுரையை மீண்டும் கைப்பற்றி வீர பாண்டியனுடைய தலையையும் கொணராமல் சோழ நாட்டுக்குத் திரும்புவதில்லை என்று என் தந்தை முன்னால் பிரதிக்ஞை செய்தேன். அப்போது நீயும் என்னுடன் இருந்தாய். என் பிரதிக்ஞையை ஒப்புக் கொண்டு என் தந்தை நம்மைப் பாண்டிய நாட்டுப் போர்க்களத்துக்கு அனுப்பினார். ஏற்கெனவே படைத் தலைமை வகித்துச் சென்றிருந்த கொடும்பாளூர் பூதி விக்கிரம கேசரியின் தலைமையில் நாம் போர் செய்ய வேண்டும் என்று பணித்தார். அதற்குச் சம்மதித்து நாம் சென்றோம். வழியில் பெரிய பழுவேட்டரையரைச் சந்தித்தோம். அவரைப் படைத் தலைவராக்காமல் கொடும்பாளூர் வேந்தரை நியமித்ததில் பழுவேட்டரையருக்கு அதிருப்தி உண்டாகியிருந்தது என்பதை அறிந்தோம்.

"நம்முடைய போர் ஆவேசத்தைக் கண்டு சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி யுத்தம் நடத்தும் பொறுப்பை நம்மிடமே ஒப்புவித்து விட்டார். நண்பா! அந்த யுத்தத்தில் நீயும் நானும் நம்ப முடியாத வீரச் செயல்களைப் புரிந்தோம் என்று பெருமை கொள்வதில் யாதொரு தவறும் இல்லை. பாண்டிய சைன்யத்தை முறியடித்து மதுரையைக் கைப்பற்றினோம். அத்துடன் நாம் திருப்தி அடைந்து விடவில்லை. மறுபடியும் பாண்டிய சைன்யம் தலையெடுக்க முடியாதபடி அதை நிர்மூலம் செய்துவிட விரும்பினோம். சிதறி ஓடிய வீரர்களை நாலா பக்கத்திலும் துரத்திச் சென்று ஒருவர் மிச்சமில்லாமல் துவம்ஸம் செய்துவிடும்படி நம் படை வீரர்களுக்குக் கட்டளையிட்டோம். நாம் மட்டும் ஒரு வலிமையான படையுடன் பாண்டியனைத் துரத்திக்கொண்டு போனோம். உயரமாகப் பறந்த மீனக் கொடி பாண்டியன் எந்தத் திசையை நோக்கி ஓடுகிறான் என்பதை நமக்குக் காட்டியது. அந்தத் திசையை நோக்கி நாமும் சென்று அவனைப் பிடித்தோம். வீரபாண்டியனைச் சுற்றிலும் ஆபத்துதவிகள் மதிள் சுவரைப் போல் பாதுகாத்து நின்றார்கள். சோழ நாட்டு வேளக்காரப் படையைக் காட்டிலும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகள் ஒருபடி மேலான வீரர்கள். பின்வாங்கி ஓடுவதில்லை என்றும் தங்கள் உயிரை அளித்தாவது பாண்டிய மன்னனைக் காப்பாற்றுவோம் என்றும் சபதம் செய்தவர்கள். அது சாத்தியப்படாமற் போய்ப் பாண்டிய மன்னனுக்கு ஆபத்து வந்துவிட்டால், தங்கள் தலையைத் தாங்களே வெட்டிக் கொண்டு பலி கொடுப்போம் என்று சபதம் பூண்டவர்கள். அப்படிப்பட்ட வீரர்களோடு நாம்



# புதுடயரா அல்லது டிவிஎஸ் ரீடிரெட் செய்ததா?

*சொந்தக்காரருக்கு மட்டுமே தெரியும்!*

மதிநுட்பமுள்ள கார் சொந்தக்காரர்கள் என்ற முறையில் உங்கள் டயர்கள் ரீடிரெட் செய்யப்படுவதன்மூலம் அதிக தாலைக்கு பயன்படுவதையே நீங்கள் விரும்புவீர்கள். எனினும் வெளிப்படையாக ரீடிரெட் செய்யப்பட்டதாக தோன்றும் ஒரு டயரை உபயோகிக்க நீங்கள் விரும்பமாட்டீர்கள். டி வி எஸ் ரீடிரெட் செய்தவை புதியனபோலவே தோற்றமளிக்கின்றன, புதியன் போலவே உழைக்கின்றன. அவை ரீடிரெட் செய்யப்பட்டவை என்று உங்களுக்குமட்டுமே தெரியும். மேலும் எவ்வளவோ செலவு மிச்சம்! புதிய டயர் ஒன்றின் விலைக்கு நீங்கள் மூன்று டயர்களை ரீடிரெட் செய்துகொள்ளமுடியும்!



**உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்**

*இந்தியாவிலேயே மிகப்பெரிய ரீடிரெடிங் ஸ்தாபனம்*

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்** (இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

பங்களூர்-கோயமுத்தூர்-சென்னை-புதுக்கோட்டை - செகந்திராபாத்-திருநெல்வேலி-விஜயவாடா

SI-4743

போர் புரிந்தோம். அவர்களும் தங்கள் கடனை நிறைவேற்றினார்கள். ஒருவர் மிச்சமின்றி அவர்களைக் கொன்று தீர்த்தோம். இறந்தவர்களின் சவங்கள் மலை மலையாய்க் குவிந்தன. ஆனால் அவர்களுக்கு நடுவில் வீர பாண்டியனை நாம் காணவில்லை. மீனக் கொடியைப் பார்த்து நாம் ஏமாந்து போனோம். மீனக் கொடியைத் தாங்கிக் கொண்டு யானை ஒன்று நின்றது. ஆனால் அதன் பேரிலோ, பக்கத்திலோ பாண்டிய மன்னனைக் காணவில்லை! வீரபாண்டியன் போர்க் களத்திலிருந்து தப்பி ஓடி ஒளிந்து கொள்ளுவதில் சமர்த்தனல்லவா? இப்போதும் அவன் ஓடியிருக்கலாம் என்று சந்தேகித்துப் படைகளைப் பிரித்து நாலாபுறமும் அனுப்பினோம்.

**வை**கை நதியின் இரு கரைகளோடு நீங்கள் எல்லோரும் விரைந்து சென்றீர்கள். நானும் சும்மா இருக்கவில்லை. வைகை நதியில் இறங்கி மணலில் நடந்து தெற்கே சென்றேன். ஒரு தனிக் குதிரையின் குளம்படி மணலில் சில இடங்களில் பதிந்திருந்தது. குதிரை போன வழியில் மணலில் இரத்தக் கறையும் காணப்பட்டது. அதைப் பிடித்துக் கொண்டு நான் போனேன். வைகையாற்றின் மத்தியில் தீவு போல் அமைந்திருந்த ஒரு சோலையை அடைந்தேன். அந்தச் சோலைக்குள்ளே திருமாலின் கோவில் ஒன்றிருந்தது. அதையொட்டி இரண்டொரு அர்ச்சகர் வீடுகள் இருந்தன. பெருமாள் பூஜைக்குரிய பூ மரங்கள் அச்சோலையில் ஏராளமாக இருந்தன. ஒரு சிறிய தாமரைக் குளம் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. நண்பா! உனக்கு ஒரு வேளை ஞாபகம் இருக்கலாம். அந்தச் சோலையைச் சுட்டிக்காட்டி அதில் நம் வீரர்கள் யாரும் தப்பித் தவறிக்கூடப் பிரவேசிக்கக் கூடாது என்று நான் கண்டிப்பான கட்டளை இட்டிருந்தேன். இதற்குக் காரணம், அந்தப் பெருமாள் கோவிலின் பூஜைக்குப் பங்கம் எதுவும் வரக் கூடாது என்று நான் எண்ணியது மாத்திரம் அல்ல. அங்கே இருந்த பட்டரின் வீட்டில் என் உள்ளத்தைக் கவர்ந்து என் நெஞ்சில் கோவில் கொண்ட பெண்ணரசி இருந்ததுதான். ஒரு நாள் அந்தச் சோலைக்குள் நான் புகுந்தபோது நந்தினியைப் பார்த்து விட்டேன். அவளுடைய கோலம் இப்போது சிறிது மாறிப் போயிருந்தது. தலைக் கூந்தலை ஆண்டாள் விக்கிரகத்தைப்போல் முன்னால் மகுடமாகக் கட்டி அதில் பூமாலை சுற்றியிருந்தாள். கழுத்திலும் பூமாலை தரித்திருந்தாள். 'இது என்ன கோலம்?' என்று நான் கேட்டேன். அவள் என்னைப் பிரிந்து வந்த பிறகு மானிடர் யாரையும் மணப்பதில்லை என்றும், ஆண்டாளைப் போல் கண்ணனையே மணப்பது என்றும் சங்கல்பம் செய்து கொண்டதாகக் கூறினாள். இது வெறும் பைத்தியக்காரத்தனமாக எனக்குத் தோன்றியது. மானிடப் பெண்ணாவது கடவுளை மணப்பதாவது?—ஆயினும் அதைப் பற்றி அச்சமயம் விவகாரம் செய்ய நான் விரும்பவில்லை. 'யுத்தம் முடியட்டும்; பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று எண்ணினேன். அவளுக்கு ஏதேனும் உதவி வேண்டுமா என்று கேட்டேன். 'உங்கள் போர் வீரர்கள் யாரும் இங்கே வராதபடி செய்யுங்கள். இங்கே என் வயதான தாய் தந்தையர் மட்டும்தான் இருக்கிறார்கள்.



குழந்தை பிரிட்ஜைத் திறந்தாள். இரகசியம் வெளிப்பட்டது. உமாவின் விளையாட்டுச் சாமான்களும் துணிமணிகளும்தான் பிரிட்ஜில் வைக்கப்பட் டிருந்தன! உமாவின் பெரியப்பா சில ஆண்டுகளுக்குமுன் லண்டனிலிருந்து இந்தியாவுக்குக் கப்பலில் அனுப்பி இருந்த இந்த பிரிட்ஜ் வரும் வழியில் பழுதடைந்துவிட்டது. அதற்குத் தேவையான 'ஸ்பேர் பார்ட்' இந்தியாவில் கிடைக்காததால் சீராக்க முடியவில்லை.

பலகாலம் உபயோகமில்லாமல் கிடந்த இந்த பிரிட்ஜில் இப்பொழுது குழந்தையின் விளையாட்டுப் பொம்மைகளையும் துணிமணிகளையும் வைத்துள்ளனர்.

- ராஜா

அவர்கள் கண் தெரியாதவர்கள். திடகாத்திரமுள்ள என் தமையன் ஒருவன் உண்டு. அவன் இப்போது திருப்பதி யாத்திரை போயிருக்கிறான்' என்றாள். அவள் கேட்டபடி அங்கே நம் வீரர் யாரும் வராமல் பார்த்துக் கொள்வதாக நான் வாக்குறுதி கொடுத்துவிட்டுத் திரும்பினேன். அப்புறம் இரண்டு மூன்று தடவை அவளைப் போய்ப் பார்த்தேன். அவளிடத்தில் நான் கொண்ட பழைய மோகம் ஒன்றுக்குப் பத்து மடங்கு பெருகிக் கொழுந்து விட்டு எரிந்தது. எனினும் பொறுமையைக் கடைப்பிடித்தேன். வந்த காரியத்தை முதலில் முடிக்க வேண்டும்; வீர பாண்டியனுடைய தலையுடன் பழையாறைக்குப் போக வேண்டும்; அதற்குப் பிரதியாக நந்தினியை மணந்து கொள்ளத் தந்தையிடம் அனுமதி கேட்பது என்று முடிவு செய்திருந்தேன்.

"இப்படி நான் தீர்மானித்திருந்த நிலையில, ஒற்றைக் குதிரையின் குளம்படி அந்தச் சோலைக்குள்ளே போயிருப்பதைக் கண்டதும் அளவிலாத வியப்பும் ஆத்திரமும் கொண்டேன். மேலும் சென்று பார்த்தபோது, அடர்ந்த மரங்களின் மறைவில் குதிரை கட்டியிருப்பதைக் கண்டேன். எனவே, தப்பி வந்தவன் அந்தக் குடிசை வீடுகளில் ஒன்றில்தான் இருக்க வேண்டும். நந்தினியின் வீட்டுக்குச் சென்று பலகணி வழியாகப் பார்த்தேன். நண்பா! அங்கே நான் கண்ட காட்சி பழுக்கக் காய்ச்சிய இரும்பினால் என் நெஞ்சில் தீட்டியது போல் பதிந்திருந்தது. ஒரு பழைய கயிற்றுக் கட்டிலில் வீர பாண்டியன் படுத்துக் கிடந்தான். நந்தினி அவனுக்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொடுத்துக் குடிக்கச் செய்தாள். அவள் முகம் முன் எப்போதுமில்லாத காந்தியுடன் ஜொலித்தது. அவள் கண்களில் இரண்டு துளிக் கண்ணீர் ததும்பி நின்றது. என்னை மீறி வந்த ஆத்திரத்துடன் கதவைப் படார் என்று உதைத்துத் திறந்து கொண்டு உள்ளே சென்றேன். காயங்களைக் கட்டிக் கொண்டிருந்த நந்தினி என்னைக் கண்டதும் அதை நிறுத்திவிட்டு முன்னால் வந்தாள். சாஷ்டாங்கமாக என்னை நமஸ்கரித்து எழுந்தாள். கைகூப்பிய வண்ணம், 'ஐயா! நீங்கள் என்பேரில் ஒரு நாள் வைத்திருந்த அன்பின் பேரில் ஆணையிட்டு வேண்டுகிறேன். இவரை ஒன்றும் செய்யாதீர்கள்! படுகாயப்பட்டுக் கிடக்கும் இவரை உங்கள் கையால் கொல்ல வேண்டாம்!" என்றாள்.

"நான் தட்டுத் தடுமாறி, 'உனக்கும் இந்த மனிதனுக்கும் என்ன சம்பந்தம்? எதற்காக அவன் உயிரைக் காப்பாற்றும்படி கேட்கிறாய்?' என்றேன்.

'இவர் என் காதலன்; இவர் என் தெய்வம்; இவர் என்னை மணந்து கொள்ளச் சம்மதித்திருக்கும் தயாளன்!' என்றாள் நந்தினி.

"காயம் பட்டிருந்த வீர பாண்டியனைப் பார்த்துக் கொஞ்சம் உண்டாகியிருந்த இரக்கமும் என்னிடமிருந்து அகன்று விட்டது. இந்தப் பாதகன், சண்டாளன், — எப்படி என்னைப் பழி வாங்கிவிட்டான்! என் இராஜ்யத்தையே கைப்பற்றியிருந்தாலும் பாதகம் இல்லை; என் உள்ளத்தில் குடிகொண்டிருந்த பெண்ணரசியை யல்லவா அபகரித்து விட்டான்? இவனிடம் எப்படி இரக்கம் காட்ட முடியும்? முடியவே முடியாது!

"நந்தினியை உதைத்துத் தள்ளிவிட்டு அவனைத் தாண்டிக் கொண்டு சென்று வாளின் ஓரே வீச்சில் வீர பாண்டியனுடைய தலையை வெட்டி வீழ்த்தினேன். அந்த மூர்க்க பயங்கரச் செயலை இப்போது நினைத்துப் பார்த்தால் எனக்கு வெட்கமாயிருக்கிறது. ஆனால் அச்சமயம் யுத்த வெறியோடு கூடக் குரோத வெறியும் என்னைப் பிடித்திருந்தது. அந்த ஆவேசத்தில் வீர பாண்டியனைக் கொன்று விட்டு அந்த வீட்டின் வாசற்படியைத் தாண்டும்போது நந்தினியை ஒரு முறை திரும்பிப் பார்த்தேன். அவளும் என்னைக் கண் கொட்டாமல் பார்த்தாள். அதைப் போன்ற பார்வை இந்தப் பூவுலகில் நான் கண்டதில்லை. அதில் காமக் குரோத லோப மோக மத மாற்சரியம் என்னும் ஆறு வித உணர்ச்சிகளும் அத்தனை நெருப்பு ஜ்வாலைகளாகக் கொழுந்து விட்டு எரிந்தன. அதன் பொருள் என்னவென்று எத்தனையோ தடவை எண்ணி எண்ணிப் பார்த்தும் எனக்கு இன்றுவரை தெரியவில்லை!

"அதற்குள் என்னைத் தேடிக் கொண்டு நீயும் இன்னும் பலரும் வந்து விட்டீர்கள். வீர பாண்டியனுடைய தலையற்ற உடலையும் இரத்தம் சிந்தின தலையையும் பார்த்து விட்டு எல்லோரும் ஜயகோஷம் செய்தீர்கள். ஆனால் என்னுடைய நெஞ்சில் விந்திய பர்வதத்தை வைத்தது போல் ஒரு பெரும் பாரம் அமுக்கிக் கொண்டிருந்தது!..."

**(தொடரும்)**

# மகத்தான மௌன நாடகங்கள்



வாய் திறந்து பேசாமலே வெறும் சைகைகளின் மூலம் எந்தக் கதையையும் நாடகமாக நடித்துக் காட்டலாம். நாடகங்களுக்கு வசனம் தேவையில்லை; ஆவேசமாக வசனம் பேசும் ஆற்றல் மிக்க நடிகர்கள் தேவையில்லை; பின்னணித் திரைகள் தேவையில்லை; ஆரவாரம் மிக்க பாடல்கள் தேவையில்லை — இவற்றையெல்லாம் கேட்கச்சற்று அதிசயமாகத் தான் இருக்கும். ஆனால் சமீபத்தில், தமிழகத்துக்கு வந்திருந்த ஜெக் நாட்டு மௌன நாடகக் குழுவினர் மேற்கூறியவற்றை மேடையில் நிரூபித்துக் காட்டினர். இக்குழுவின் தலைவர் லாடிஸ்லாவ் ஃபியால்கா அசுக்கலே விநோதர்; சைகைகளின் மூலமும், மௌன நடிப்பின் மூலமும் எந்த நாடகத்தையும் தெளிவாக நடித்துக் காட்டும் ஆற்றல் மிக்கவர்; அவர் ஒரு சிறந்த நடிகர்; திறமை வாய்ந்த நாடகப் பயிற்சியாளர்; டைரக்டர்; நல்ல நாடக ஆசிரியர்.

ஃபியால்கா மௌன நாடகக் குழுவினர் சுமார் பன்னிரண்டு சிறுகதைகளைச் சின்னச் சின்ன மௌன நாடகங்களாக நடித்துக் காட்டினர். ஒவ்வொரு நாடகமும் சில நிமிஷங்களே நடந்தாலும் நிறைவைப் பார்த்தது போன்ற பிரமை கலந்த மன நிறைவு ஏற்பட்டது. ஒவ்வொரு நாடகம் தொடங்குவதற்கு முன்பும் அறிவிப்புப் பலகை காட்டிய அற்புதம் ஒன்று போதும், மௌன நாடகங்களின் சிறப்பை விளக்க. ஒளி விளக்குகள் அற்புதமாக ஒத்துழைத்தன. பின்னணிச் சங்கீதம் தான் இந் நாடகங்களின் ஜீவநாடி.



“பிரயாணி” என்னும் நாடகம் ஒரு துர்ப்பாக்கிய, மூன்றாம் வகுப்பு ரயில் பிரயாணியின் சோகங்கலந்த சுயானுபவம். மேடையில் ரயிலும் இல்லை; அதில் கூட்டமும் இல்லை; மூட்டை முடிச்சுகளும் இல்லை. ஒரே ஒரு நடிகர் மட்டும் மேடையில் தோன்றி, தாமே ஏறும் பிரயாணியாகவும், இறங்கும் பிரயாணியாகவும், பெட்டி, படுக்கைகளாகவும், ஆடி அசைந்து தூங்கி வழியும் பிரயாணியாகவும், ஓடும் ரயிலில் நின்று கொண்டு நடன அபிநயம் பிடிக்கும் பிரயாணியாகவும் நடித்து விண்ணைதிரக் கரகோஷம் பெற்றார்.

“சர்க்கஸ்” என்ற நாடகம் மிகவும் அற்புதம். ஒரு நடிகர் மேடையில் குதிரை சவாரி செய்வது போல் நடித்தார். ஆனால் குதிரையும் அவரே, சவாரி செய்தவரும் அவரே! பிறகு, சர்க்கஸ் அரங்கில் சுற்றிச் சுற்றி வரும் மூன்று குதிரைகளாக மூன்று பெண்கள் தோன்றி அபாரமாக நடித்தனர். இளமை எழில் பூத்துக் குலுங்கும் அவ்வனிதாமணிகளின் எடுப்பான நடையும், துடிப்பான ஓட்டமும் உயர் இனப் புரவிகளின் துரித கதியை நினைவூட்டின.

மற்றொரு நாடகத்தில் வரும் பியானோ வாசிப்பவரும், டைப் அடிக்கும் ஆரணங்கும் ஒருவரையொருவர் காதலித்து மணந்து கொள்ளும் காட்சி கண்கொள்ளாக் காட்சி!

எத்தனையோ விதங்களில், இந்த மௌன நாடகக் குழுவினருக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம். நம் படங்களில் பார்க்கும் அசடு வழியும் ஹாஸ்யக் காட்சிகளும், ஆபாசக் கருத்துக்கள் பொதிந்த பாடல்களும், மூச்சு விடாமல் பேசும் வசனங்களும் இல்லாமல் நல்ல நாடகங்களை நடத்திக் காட்டியதற்காக அவர்களை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம்.

நம் நடிக, நடிகையர்கள் இத்தகைய மௌன நாடகங்களைப் பார்த்தால் எத்தனையோ விதத்தில் லாபம் அடைவார்கள். அவ்வளவு சாரம் நிறைந்த நாடகங்கள். மேற்படி மௌன நாடகங்கள் சென்னை சங்கீத நாடக சங்கத்தின் ஆதரவில் நடைபெற்றன. ஆகவே அது, நல்லதொரு நாடக விருந்தை நாமெல்லாம் நுகரும்படி செய்த பெருமையைத் தட்டிக் கொண்டு போகிறது.

— காந்தன்




அருச்சுனன் போஜ சைன்யத்தில் நுழைந்து கிருதவர்மனையும் சுதட்சிணனையும் ஒரே சமயத்தில் தாக்கி அவர்களைத் தோல்வி அடையச் செய்து அதன் பேரில் தடுக்க வந்த சுருதாயுதனை எதிர்த்தான். பலமான போர் நடந்தது. சுருதாயுதன் குதிரைகளை இழந்தான். அதன் மேல் அவன் தன் கதாயுதத்தை எடுத்து வீசிக் கண்ணனை அடித்தான். போர் செய்யாதவன்பேரில் அவன் வீசிய கதாயுதம் அவனையே வந்து திருப்பித் தாக்கி அவனைக் கொன்றது. அதற்குக் காரணம் அவன் தாய் பெற்ற வரம்.

ஃஃஃ

சுருதாயுதனுடைய தாயாகிய பர்ணாசை என்பவள், வருணனைப் பார்த்து, "என் குமாரன் உலகத்தில் சத்துருக்களால் கொல்லப்படாதவனாக இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். அவள்பால் அன்பு கொண்ட வருணன், "உன் புத்திரனுக்கு நான் திவ்வியமான ஆயுதத்தைத் தருவேன். அந்த ஆயுதத்தைக் கொண்டு அவன் போர் செய்தால் அவனை யாரும் ஜெயிக்க முடியாது. ஆனால் யுத்தம் செய்யாதவன்மேல் அந்த ஆயுதத்தைப் பிரயோகிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் அது பிரயோகித்தவனையே திருப்பிக் கொல்லும்" என்று சொல்லித் திவ்விய கதாயுதத்தைத் தந்தான். யுத்த வேகத்தில் இந்த வாக்கியத்தை மறந்த சுருதாயுதன் கதாயுதத்தைக் கண்ணன் மேல் எறிந்தான். ஜனார்த்தனன் அதைத் தன் மார்பில் ஏற்றுக் கொண்டான். மந்திரத் தவறு ஏற்பட்டால் மந்திரவாதியின் வசத்திலிருந்த பிசாசு அவனையே கொல்வது போல் அந்தக் கதாயுதம் திரும்பிச் சென்று வீரனான சுருதாயுதனைக் கொன்றது. காற்றால் தள்ளப்பட்ட பெரிய மரத்தைப் போல் பூமியில் விழுந்தான்.

அதன் பிறகு காம்போஜ ராஜனான சுதக்ஷிணன் அருச்சுனனைக் கடுமையாக எதிர்த்தான். அவனும் தேரிழந்து கவசமுடைந்து மார்பில் அடிபட்டு உற்சவம் முடிந்த பின் கீழே தள்ளப்பட்ட இந்திர த்வஜத்தைப் போல் கைகளை விரித்துக் கொண்டு கீழே விழுந்தான்.

மிக்க வன்மை பொருந்திய வீரர்களான சுருதாயுதனும் காம்போஜனும் கொல்லப்பட்டதைக் கண்டு கௌரவ சேனை குழப்பம் அடைந்தது. இதைக் கண்ட சுருதாயு, அச்சுருதாயு என்ற இரு சகோதரர்களும் பார்த்தனை இரு புறமும் தாக்கினார்கள்.

இந்தக் கடும் போரில் அருச்சுனன் அதிகமாக அடிபட்டுக் கொடி மரத்தில் சாய்ந்தான். கண்ணனால் தேற்றப்பட்டு மறுபடியும் யுத்தம் தொடங்கி அந்த இரண்டு சகோதரர்களையும் வீழ்த்தினான். அவர்களுடைய இரண்டு குமாரர்களும் யுத்தத்தை விடாமல் தொடர்ந்தார்கள். அவர்களும் அருச்சுனனால் யமாலயம் அனுப்பப்பட்டார்கள்.

இவ்வாறு இன்னும் அநேக வீரர்களை மாய்த்து விட்டுக் காண்டீபம் ஏந்திய அருச்சுனன் சத்துரு சேனையில் வழியைச் செய்து கொண்டு ஜயத்ரதன் இருந்த இடத்துக்கு வேகமாகச் சென்றான்.

## 84. தான் பயிலாத கவச தாரணம்

அருச்சுனனுடைய வெற்றியைப் பற்றிச் சஞ்சயன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் புலம்பினான். "சூதனே! சமாதானத்தை விரும்பி ஜனார்த்தனன் ஹஸ்தினாபுரம் வந்தபோது, 'இதுவே நல்ல சந்தர்ப்பம். இதைக் கைவிடாதே. சகோதரர்களுடன் சமாதானம் செய்து கொள். நம்முடைய நன்மையின்

பொருட்டே கேசவன் வந்திருக்கிறான். அவன் பேச்சை உல்லங்கனம் செய்யாதே' என்றேன். துரியோதனன் என் யோசனையை நிராகரித்துவிட்டான். கர்ணன், துச்சாதனன் இவர்கள் சொன்னதே அவனுக்கு இதமாகத் தோன்றிற்று. காலபுருஷனால் தூண்டப்பட்டு நாசத்தைத் தேடிக்கொண்டான். துரோணரும் யுத்தம் வேண்டாம் என்றார். பீஷ்மரும் பூரிசிரவசும், இருவரும் இன்னும் மற்றவர்களும் யுத்தம் வேண்டாம் என்றார்கள். மூர்க்கனான என் மகன் கேட்கவில்லை. பேராசையால் தூண்டப்பட்டுக் கெட்ட எண்ணமும் கோபமும் நிறைந்த மனநிலையில் சிக்கிக்கொண்டு யுத்தத்தை வரவழைத்துக் கொண்டான்!''

சஞ்சயன், ''ஜலம் போனபின் அணை கட்டுவது போல் இப்போது நீர் புலம்புவதில் என்ன பயன்? சூதாட்டத்திலிருந்து குந்தி புத்திரனை நீர் முதலிலேயே ஏன் விலக்கவில்லை? அவ்வாறு செய்திருந்தால் இந்தப் பெரும் துக்கம் வந்திராது. பிறகும் யுத்தப் பேச்சு நேர்ந்த போதாவது உம்முடைய குமாரனைத் தடுத்திருந்தீராகில் இந்தத் துக்கம் வந்திராது. பிதாவானவன் செய்ய வேண்டிய கடமையைச் செய்து மகனை அடக்கியிருந்தீராகில் இந்தப் பெரும் துயரம் உம்மைப் பிடித்திருக்காது. புத்திமான்களில் சிறந்தவரான நீர், உம்முடைய அறிவைத் தள்ளிவிட்டுக் கர்ணன், சகுனி இவர்களுடைய மூர்க்கத்தனமான யோசனையை அனுசரித்தீர். கேசவனும் யுதிஷ்டிரனும் துரோணரும் இப்போது உம்மை முன் போல் மதிக்கவில்லை. பேராசை கொண்டவர் என்றும், வாயினால் மட்டும் தருமம் பேசுபவர் என்றும் வாசுதேவன் உம்மை அறிந்து கொண்டான். க்ஷத்திரிய தருமத்தின்படி சூரர்களால் எவ்வளவு செய்ய முடியுமோ அவ்வளவும் இப்போது கௌரவர்கள் செய்து வருகிறார்கள். நீர் அவர்களை நிந்திப்பது தகாது. உயிரை அலட்சியம் பண்ணிப் போர் செய்கிறார்கள். அருச்சுனனும், கிருஷ்ணனும், சாத்யகியும், பீமனும் நடத்தும் யுத்தத்தில் அவர்களை எதிர்த்து நிற்க இவர்களுக்குப் பலம் போதாது. ஆயினும் எவ்வளவு செய்வதற்குச் சாத்தியமோ அவ்வளவும் உம்முடைய மகன் துரியோதனன் செய்து வருகிறான். இப்போது அவனை நீர் நிந்திக்க வேண்டாம்'' என்றான்.

''அப்பனே சஞ்சயா! நீ சொல்வது சரியென்றே ஒப்புக் கொள்கிறேன். விதியை யாரும் விலக்க முடியாது. நடந்ததையெல்லாம் சொல்லு. நல்லதாயினும் சரி. துக்க சமாசாரமாயினும் சரி. எல்லாவற்றையும் நடந்தவாறு சொல்'' என்று துயரத்தில் மூழ்கித் துடித்துக் கொண்டிருந்த கிழ அரசன், சஞ்சயன் சொல்லுவதைக் கேட்கலானான்.

* * *

அருச்சுனனுடைய தேர் சிந்துராஜனை நோக்கிச் செல்வதைப் பார்த்துத் துரியோதனன் தாங்க முடியாத துயரமடைந்து துரோணரிடம் விரைவாகப் போனான்.

''பெரிய சேனையைப் பிளந்து கொண்டு அருச்சுனன் பிரவேசித்து விட்டான். நம்முடைய தோல்வியைப் பார்த்து ஜயத்ரதனுடைய காப்புக்காக நிற்கும் வீரர்களும் தைரியம் இழப்பார்கள். துரோணரைக் கடந்து அருச்சுனன் செல்ல முடியாது என்று அரசர்கள் எல்லோரும் எண்ணியது பொய்யாகி விட்டது. நீர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தேரை ஓட்டிக் கொண்டு உம்மைத் தாண்டிப் போய் விட்டான். நீர் பாண்டவர்களுக்கு நன்மை செய்வதிலேயே விருப்பம் கொண்டிருக்கிறீர். என்னுடைய மனம் மிகவும் குழப்பமடைந்திருக்கிறது. உமக்கு நான் என்ன பிழை அல்லது குறை செய்தேன்? என்னை ஏன் கை விடுகிறீர்? இது எனக்குத் தெரிந்திருந்தால் நான் ஜயத்ரதனை யுத்த பூமியில் நிறுத்தியிருக்கவேமாட்டேன். தன் தாய்நாட்டுக்குத் திரும்பிப் போய் விடுவதாகச் சொன்ன அவனை நான் நிறுத்தியது பெரும் பிழையாகி



விட்டது. அருச்சுனன் ஜயத்ரதனைத் தாக்கினால் அவன் மீள மாட்டான். துயரத்தினால் பிதற்றுகிறேன். என்னை மன்னிக்க வேண்டும். நீரே போய் சைந்தவனைக் காப்பாற்றும்'' என்று துரியோதனன் கதறினான்.

துரோணர், ''அரசனே! தகாத வார்த்தைகளை நீ சொல்லிய போதி லும் நான் உன் பேரில் கோபம் கொள்ளவில்லை. நீ எனக்குக் குமார னைப் போல்; அசுவத்தாமன் எப் படியோ அப்படியே எனக்கு நீயும். நான் சொல்லுவதைச் செய். இதோ இந்தக் கவசத்தைப் பெற்றுக் கொள். இதைப் போர்த்துக் கொண்டு நீயே அருச்சுனனைத் தடுப்பாயாக! இவ் விடத்தை விட்டு நான் போகக் கூடாது. அதோ பார், பாண சமூ கங்கள்! பாண்டவ சேனை நம்மைப் பலமாகத் தாக்கி வருகிறது. அருச்சு னன் இல்லாமல் யுதிஷ்டிரன் தனி யாக இருக்கிறான். இதற்காகவல்லவா இந்த ஏற்பாட்டை நாமே செய் தோம்? அவனை நான் பிடித்து உனக் குத் தர வேண்டியவனாக இருக்கிறேன். அதை விட்டுப் பல்குனனைத் துரத்திக் கொண்டு நான் இப்போது போக முடியாது. வியூகத்தின் முகத்தை விட்டு விட்டு நான் அருச்சுனனைக் குறித்துச் சென்றேனானால் அனர்த்தம் நேரிடும். நான் போர்த்த கவசத்தைத் தரித்துக் கொண்டு செல். பயப்படாதே! நீ சூரன், சமர்த்தன். இந்தக் கவசத் தின் மேல் படும் ஆயுதம் உன்னைப் பாதிக்காது. மந்திர சக்தி பொருந்திய இந்தக் கவசம் உன் தேகத்தைக் காப் பாற்றும். பிரம்மதேவனிடம் இந்திரன் கவசம் பெற்றுப் போருக்குச் சென் றது போல் திவ்விய மந்திரக் கவசம் என்னால் பூட்டப்பட்டு நீ செல்வா யாக. உனக்கு மங்களம்'' என்றார்.

திவ்விய கவசமணிந்த துரியோதன னும் ஆசார்யர் சொன்னபடியே பெருஞ் சேனையுடன் தைரியமாக அருச்சுனனை நோக்கிச் சென்றான்.

ஃஃஃ

அருச்சுனன் கௌரவ சேனையைத் தாண்டி வெகு தூரம் சென்றான். குதிரைகள் களைப்பு அடைந்திருப்பது கண்டு தேரை நிறுத்திக் குதிரைகளை அவிழ்த்து இளைப்பாறச் செய்யக் கருதி னான். அச்சமயம் விந்தானு விந்தர்கள் ஆகிய இரு சகோதரர்களையும் அருச்சு னன் வதம் செய்தான். பிறகு கண்ணன் குதிரைகளை அவிழ்த்து மண் ணில் புரளச் செய்து இளைப்பாற்றி னான். மறுபடியும் தேரைப் பூட்டி ஜயத்ரதனை நோக்கி விரைவாகச் சென்றான்.

''தனஞ்சய! அதோ பார்! பின் னால் துரியோதனன் வருகிறான். இதை விட உனக்கு வேறு நல்ல சமயம் கிடைக்காது. வெகு காலமாக அடக் கிய கோபத்தை இப்போது தீர்த்துக் கொள். அனர்த்தங்களுக்கெல்லாம் மூல காரணமான இவன் இப்போது உன் பாணங்களுக்கு இலக்காக வந்திருக் கிறான். இவன் நல்ல தேர் வீரன். தூரத்திலிருந்து தாக்கும் சாமர்த்தியம் கொண்டவன். பெரிய வில்லை வளைப்ப வன். அஸ்திரத் தேர்ச்சி பெற்றவன். யுத்தத்தில் மதம் கொண்டவன். உறுதியான தேகம் படைத்தவன். மிக்க பலசாலி நமது பகைவன்'' என்று கிருஷ்ணன் அருச்சுனனுக்குத் தூரத்தில் வந்து கொண்டிருக்கும் துரியோதனனைக் காட்டினான். அதன் மேல் தேரைத் திருப்பித் துரியோத னனை நோக்கிச் சென்று அவனை எதிர்த் தார்கள்.

துரியோதனன் பயப்படவில்லை. ''ஜனங்கள் நீ பெருங் காரியங் களைச் செய்திருப்பதாகச் சொல்லு கிறார்கள். நான் நேரில் பார்த்ததில்லை. உன்னுடைய புகழுக்குக் காரணமான பராக்கிரமத்தை இப்பொழுது பார்க்க லாம். காண்பிப்பாயாக'' என்று துரியோதனன் அருச்சுனனைப் பார்த் துச் சொன்னான். கடுமையான போர் நடந்தது.

''பார்த்தா! இதுவென்ன ஆச் சரியம்! உன்னால் விடப்பட்ட அம்புகள் ஏன் துரியோதனனைத் துன்புறுத்த வில்லை! காண்டீபத்திலிருந்து விடு பட்ட அம்புகள் வீணாகப் போவதை இன்றுதான் பார்க்கிறேன். இது என்றும் பாராத சம்பவமாக இருக் கிறது. உன்னுடைய கைப் பிடியும் தோள்வன்மையும் குறைந்துபோயிற்றா? காண்டீபம் தன் தன்மையை இழந் ததா? நீ துரியோதனனைக் குறித்து விடும் பாணங்கள் அவன்மேல் பட்டுப் பயனற்றவையாகக் கீழே விழுவதைக் கண்டு ஆச்சரியமாக இருக்கிறது'' என்றான் கிருஷ்ணன்.

''கிருஷ்ணா! இவன் துரோணரிட மிருந்து கவசம் பெற்று அதைப் போட்டுக் கொண்டு நிற்கிறான் என்று எண்ணுகிறேன். இந்தக் கவசதாரண ரகசியம் துரோணர் எனக்குச் சொல்லி யிருக்கிறார். இவன் மேல் அந்தக் கவசத்தை ஆசார்யர் போர்த்தியிருக் கிறார் என்றே எண்ணுகிறேன். மற் றொருவரால் பூட்டப்பட்ட இந்தக் கவசத்தை மாடு பாரத்தைச் சுமப்

பது போல் இவன் சும்மா சுமந்து நிற்கிறான். இப்போது என் சாமர்த்தியத்தைப் பார்'' என்று அருச்சுனன் பாணங்களை விட்டுத் துரியோதனன் குதிரைகளையும் சாரதியையும் தேரையும் இழக்கும்படி செய்தான். பிறகு வில்லையும் கையுறையையும் அறுத்தான். கவசம் எந்தப் பாகத்தில் உடலை மூடவில்லையோ அதைப் பார்த்து அருச்சுனன் துரியோதனனைத் துன்புறுத்தினான். கவசம் மூடாத உள்ளங்கைகளிலும் நகக்கண்களிலும் நுண்ணிய அம்புகளை விட்டுச் செலுத்தித் துன்புறுத்தினான். துரியோதனன் தோல்வி அடைந்தான்.

ஃஃஃ

துரியோதனன் புறங்காட்டியதும் கண்ணன் பாஞ்சஜன்யத்தை ஊதினான்.

ஜயத்ரதனுக்குக் காப்பாக இருந்த வீரர்கள் இதைக் கண்டதும் மிக்க கலக்கமுற்றார்கள். பூரிசிரவசு, சலன், கர்ணன், விருஷசேனன், கிருபர், சல்லியன், அசுவத்தாமன், ஜயத்ரதன் ஆகிய எண்மரும் தேர்களின் மீது ஏறிப் பார்த்தனை எதிர்த்தார்கள்.

# 85. தருமன் கவலை

அருச்சுனனைப் பின்தொடர்ந்து துரியோதனன் சென்றதைப் பார்த்து ஜயத்ரதனுக்கு உதவியாகத் துரோணரும் சென்றால் காரியம் கெட்டுப் போகும் என்று திருஷ்டத்யும்னன் அடுத்தடுத்து அவர் மேல் படையைச் செலுத்தித் தாக்கி வந்தான். துருபத புத்திரன் அவ்வாறு செய்ததன் பயனாக் கௌரவப் படை மூன்றாகப் பிளந்து போய்ப் பலம் குன்றி நின்றது.

திருஷ்டத்யும்னன் தன் தேரைத் துரோணர் தேரின் மேல் இடித்துத் தாக்கினான். அவனுடைய புறா வண்ணக் குதிரைகளும் துரோணருடைய சிவப்புக் குதிரைகளும் ஒன்றோடொன்று கலந்து சூரியாஸ்தமன மேகங்களைப் போல் சித்திரக் காட்சி தந்தன. திருஷ்டத்யும்னன் தன் வில்லை எறிந்து விட்டுக் கத்தியும் கேடயமும் எடுத்துக்கொண்டு துரோணருடைய தேரின்மேல் குதித்தேறினான். ரதத்தின் ஏர்க்காலின் மேலும் நுகத்தடியின் மேலும் குதிரைகளின் முதுகின் பேரிலும் நின்று துரோணரை அவன் தாக்கினான். செத்த மிருகத்தின் பேரில் பருந்து பாய்வதைப் போல் திருஷ்டத்யும்னன் குரூரமான திருஷ்டியுடன் இங்குமங்கும் பாய்ந்து தன் பிறவிப் பகைவனைத் தாக்கினான். வெகு நேரம் இவ்வாறு கழிந்தது. கோபம் மேலிட்ட துரோணர் எய்த ஒரு பாணம் பாஞ்சாலனுடைய உயிரைக் கவர்ந்திருக்கும். ஆனால் சாத்யகி அச்சமயம் எதிர்பாராதபடி அதைத் தன் பாணத்தால் தடுத்து விட்டான். இதைக் கண்டு துரோணர் சாத்யகியைத் தாக்க ஆரம்பித்ததும் பாஞ்சால ரதிகர்கள் திருஷ்டத்யும்னனை விலக்கி அழைத்துக் கொண்டு சென்றனர்.

கிருஷ்ண சர்ப்பம் போல் சீறிக்கொண்டும், கோபத்தினால் கண்கள் சிவந்தும் துரோணர் சாத்யகியை எதிர்த்துச் சென்றார். சாத்யகி பாண்டவப் படையில் முதல் ஸ்தானம் பெற்றவர்களில் ஒருவன். துரோணர் தன்னை எதிர்த்து வருவதைப் பார்த்து அவனும் அவரை நோக்கி முன் சென்றான்.

சாத்யகி தன் சாரதியைப் பார்த்து, ''இவர்தான் தம்முடைய குலத்துக்கு உரிய தொழிலை விட்டுவிட்டு க்ஷத்திரிய காரியத்தில் பிரவேசித்துப் பாண்டவர்களுக்குத் துன்பம் உண்டாக்குபவர். மகாசூரர் என்று எப்போதும் கர்வம் கொண்டவர். இவரை எதிர்த்து அடக்க வேண்டும். குதிரைகளை வேகமாகச் செலுத்து'' என்று சொன்னான்.

சாரதியும் அவ்வண்ணமே காற்று வேகம் கொண்ட வெள்ளி நிறக் குதிரைகளைச் செலுத்தினான். ஒருவர் மேல் ஒருவர் பாணங்களை விட்டார்கள். அவ்விருவர்களுடைய விற்களிலிருந்து வெளிப்பட்ட பாணங்கள் சூரியனை மறைத்து யுத்த பூமியை இருள்படச் செய்தன. சட்டை உரித்த பாம்புகள் போல் பிரகாசிக்கின்ற நாராசங்கள் இரு பக்கத்திலிருந்தும் பயங்கரமாகப் பாய்ந்தன. இருவருடைய தேர்க் குடைகளும் ஒடிந்து கீழே விழுந்தன. இருவருடைய உடல்களிலிருந்தும் இரத்தம் பெருகிற்று. அந்த யுத்தத்தைப் பார்த்து மற்ற வீரர்கள் தம் யுத்தத்தை நிறுத்தி விட்டுப் பேசாமல் நின்றார்கள். கர்ஜனைகளும் சிம்மநாதங்களும் சங்க துந்துபி கோஷங்களும் அடங்கிவிட்டன. சாத்யகியும் துரோணரும் பற்பல ஆயுதங்களைப் பிரயோகித்துச் செய்த துவந்த யுத்தத்தைப் பார்க்கத் தேவர்களும் வித்தியாதரர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ஆகாயத்தில் நின்றார்கள்.

(தொடரும்)



நேற்றும்...



நாளையும்...

# பட்டணத்தில் டாக்டர்

**டாக்டர்**
**என். வைத்தியநாதன்**

நான் திருச்சியில் பள்ளிக்கூடம் படிக்கும் போது ஸ்ரீரங்கத்து டாக்டர் ஒருவர் ரொம்பப் பிரபலமாக இருந்தார். காது கேளாதவர். அவர் ஒரு எல். எம்.பி. சைக்கிளில்தான் போவார். ஒரு ரூபாய் ஒன்றரை ரூபாய்க்கு மேல் வாங்கமாட்டார். அவர் மாதம் ஆயிரம் சம்பாதித்ததாகச் சொல்வார்கள். குழந்தையிடமும் கனிவாகப் பேசி, பொறுப்பாக நடந்து கொள்வார்.

பரந்த சென்னை மாகாணத்தில் அப்போது இருந்தது ஒரே மெடிகல் காலேஜ். அதிலும் வருஷத்துக்கு நூறு பேர்தான் சேர்த்துக் கொள்வார்கள். மாணவர்களைத் தேர்ந்தெடுப்பது காலேஜ் கவுன்சில். அதில் பிரின்ஸிபல் முக்கியமானவர். கடைசி நாளன்றுதான் நான் நேரில் வந்து விண்ணப்பித்தேன். அப்போதே 400 பேர் மனுப் போட்டிருந்தார்கள். அதற்கப்புறம் மேலும் 800 பேர் விண்ணப்பம் செய்தார்களாம். ஆனால் ஒன்று. இடம் இராதவர்களுக்கு, மனுவுடன் அனுப்பிய பதினைந்து ரூபாய் திருப்பித் தரப்படும்.

அப்பா இல்லாத குடும்பம். வருஷம் சுமார் எழுநூறு ரூபாய் எனக்காகச் செலவாயிற்று. காப்பிக்கு ஒன்றரையணா செலவு செய்யுமுன் அவசியம்தானா என்று கேட்டுக் கொள்வேன். படிப்பின் போதே கலியாணமும் ஆகிவிட்டது.

முன்பெல்லாம் ஆஸ்பத்திரி என்றாலே மக்களுக்கு ஒரு பயம். பிரசவத்துக்கும் அறுவைக்கும்தான் ஆஸ்பத்திரி. சில்லறைத் தொந்தரவுகளுக்குப் போகமாட்டார்கள். உள்ளூரிலேயே பார்த்துக் கொள்வார்கள். மன்னார்குடி சிக்காளி தஞ்சாவூர் போகமாட்டான். அறியாமை காரணமாக வியாதி முற்றிய பிறகுதான் சேர்ப்பார்கள். ஆஸ்பத்திரி வாசமே ஒரு கண்டம் என்ற நினைப்பு. ''ரொம்ப அதிகமாப் போச்சு. ஆக்ஸிஜன் வச்சுட்டாங்க. அப்படியும் பிழைச்சுட்டேன்'' என்று சொல்பவர்கள் இருந்தார்கள். ஜெனரல் ஆஸ்பத்திரியில் இருந்தது ஐந்நூறு படுக்கைகளே. அதிலும் சிலவற்றில் ஆள் இருக்காது. சண்டை வந்து, மருந்துகள் கிடைப்பது அரிதாகி, அதனால் ஆஸ்பத்திரியைத் தஞ்சம் அடையத் தொடங்கி, பிறகுதான் ஆஸ்பத்திரிப் பழக்கம் அதிகமாயிற்று.

மெடிகல் சர்வீஸில் சேர்ந்து நான் பல ஊர்களிலும் வேலை பார்த்தேன். பல் வைத்தியராகவும் ஐந்து வருஷம் இருந்தேன். மாணவர்களுக்குப் பாடம் எடுத்தேன். சர்ஜரியே செய்து வந்த எனக்கு மருத்துவத்தில் எம். டி. பட்டம் வாங்க வேண்டும் என்று ஆர்வம் திடீரென்று எழுந்தது. சிறு ஊர்களில் இருந்தவாறே படித்து, 1939ல் இந்தப் பட்டமும் பெற்றேன்.

''ஒரு டாக்டருக்கு முக்கியமான பன்னிரண்டு மருந்துகள் போதுமே. எந்த வியாதியையும் குணப்படுத்தி விடலாம்'' என்று அப்போது ஒரு டாக்டர் சொல்லுவார். இங்கிலீஷ் மருந்து 'ஓவர் டோஸ்' கொடுத்து ஒரு நோயாளி கஷ்டப்பட்டான் என்பதில்லை. மருந்துகளும் சைட்–எபக்ட் செய்யாது.

மருந்து முறைகள் மாறியபடி உள்ளன. கல்லூரி நாளிலேயே இதைப் பற்றி நாங்கள் சொல்லிக் கொள்வோம்: ''இங்கே சொல்லிக் கொடுப்பது கொஞ்சம். நாம்தான் ஆயுள் முழுவதும் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும்'' என்று.

தொழிலும் படிப்பும் எவ்வளவுதான் இருக்கட்டும். இசை நிகழ்ச்சி, கிரிக்கெட், குழந்தைகளுடன் விளையாட்டு என்றால் எப்படியும் நேரம் பண்ணிக் கொண்டு விடுவேன்.

நாங்கள் மாணவர்களாக இருந்தபோதே தேச பக்தி நிரம்பியிருந்தோம். டை உட்பட கதர் உடையிலேயே பலரும் இருந்தோம். தேசிய நிதிகளுக்கு உதவினோம். எங்கள் சீனியர்கள் உபதேசித்தபடி ஆக்க ரீதியில் எங்கள் தேசப் பற்றைச் செயலாக்கி வந்தோம்.

ஒரு டாக்டர் ரிடையர் ஆகலாமா? ஆகமுடியாது என்றுதான் பதிலளிப்பேன். இத்தனை வருஷ அனுபவம் வீணாக ஜனங்களும் விடமாட்டார்கள். அநுபவத்தால் பிறக்கும்



ஆலோசனைக்கு மதிப்பு அதிகம். வக்கீலுக்கும் இப்படித்தான். ஆனால் ஒன்று. சிரமப்பட்டு வேலை செய்ய வேண்டாம். மனத் திருப்திக்காகவே உழைக்கிறோம்.

இரவில் நோயாளிகள் அழைத்தால் கணங்காமல் போவதுண்டு. சில வருஷங்களாக இதை நிறுத்தியிருக்கிறேன். என் பிள்ளைகளில் ஒருவன் டாக்டர். அவசரமானால் இரவில் அவன் எனக்காகப் பார்ப்பதுண்டு. சிறு வயதிலேயே டாக்டராக வேண்டும் என்று தீவிரமாக இருந்த அவன் என்னைவிடக் கெட்டிக்காரன் என்பேன்.

## டாக்டர் எஸ். ஜகதீசன்

இப்போது வருடத்துக்குச் சுமார் அறுநூறு பேர் டாக்டர் பட்டம் பெறுகிறார்கள். அத்தனை பேருக்கும் தேவை இருக்கிறது. முன்காலத்தில் இருந்த வியாதிகள் வேறு இப்போது இருக்கும் வியாதிகள் வேறு என்பது இல்லை. இப்போது பல வியாதிகளையும் துல்லியமாக



ஆராய்ந்து பெயர் வைத்திருக்கிறார்கள். முன்பு குணப்படுத்த முடியாது என்று நினைத்த சில வியாதிகளைக்கூட குணமாக்கும் புதிய மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. பேடன்ட் மருந்துகள் அதிகம் இருக்கின்றன. விதவிதமாகச் சுமார் ஆயிரம் நினைவில் வைத்துக்கொண்டு நோயாளிக்குத் தகுந்ததைப் 'பிரிஸ்கிரைப்' செய்கிறோம். சக்தி வாய்ந்த மருந்துகளைத் தரும்போது நோயின் தன்மை, நோயாளியின் தன்மை இரண்டையும் கவனித்து அளவு நிர்ணயிக்கிறோம். குறிப்பிட்ட காலத்தில் நோயாளி குறிப்பிட்ட அளவைத் தவறாது சாப்பிட வேண்டும். இந்த ஒழுக்கம் பலரிடம் இல்லை.

பெரும்பாலும் யாரும் ஊசி குத்திக் கொள்ளத் தயங்குவதில்லை. பல ஆபரேஷன்களை 'மைனர்' என்று நோயாளிகளே கருதி விடுகின்றனர். நகரத்தில் தினம் பெரிதும் சிறிதுமாகச் சுமார் ஐந்நூறு ஆபரேஷன்கள் நடக்கின்றன.

முன்னைக்கு இப்போது இரவில் டாக்டரைக் கூப்பிடுவது அதிகமாக இருக்கிறது. டெலிபோன், கார் வசதிகள் இருப்பது காரணமாக இருக்கலாம். அதோடு இரவில் டாக்டர் நிச்சயம் வீட்டில் இருப்பார் என்பதும் ஒரு காரணமோ, என்னவோ? கூடியவரை 'இன்வெஸ்டிகேஷன்' விஷயங்களில் விஞ்ஞான பூர்வமாகச் செய்யப் பார்க்கிறோம். எக்ஸ்—ரே, ரத்தப் பரீட்சை, மல சோதனை என்று எல்லா விவரங்களையும் சேகரித்து ஒரு முடிவு எடுப்பதில், முதலில் கொஞ்சம் செலவுதான். ஆனால் பின்னர் நோய் குணமாகும்போதும் சரி, வேறு ஊருக்கோ வேறு வைத்தியரிடமோ சென்றாலும் சரி, இந்தக் குறிப்புகளிலிருந்து சிகிச்சையைச் சுலபமாகவும் சீராகவும் தொடர முடிகிறது. என்னிடம் வரும் ஒரு நண்பர் தம் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் ஒரு தனி மெடிகல் பைல் வைத்திருக்கிறார். இதுவரை வந்த நோய் விவரங்கள், எடுத்த எக்ஸ்ரே, டெஸ்ட் ரிசல்ட், சிகிச்சை விவரம் எல்லாம் இருக்கும். இந்த அக்கறையைப் பார்க்கச் சந்தோஷமாக இருக்கிறது.

அநேகர் 'குடும்ப டாக்டர்' என்று யாரையாவது மதிக்கிறார்கள். அப்படி மதிக்கப்படும் நாங்களும் அவர்களது குடும்பத்தில் அன்னியோன்னிய நண்பராக, குடும்பத்தில் ஒருவர் போலவே நடந்து கொள்ளுகிறோம். கடைசியில் எங்கள் சொந்தக் குடும்பத்தில் ஒருவராக இருப்பதுதான் கஷ்டமாக இருக்கிறது. என் குழந்தை எழுவதற்குள் காலையில் நான் வேலையில் இறங்கி விடுவேன். பகலில் நான் வீட்டிலிருக்கும்போது அவன் பள்ளிக்கூடம் போய் விடுவான். மீண்டும் மாலையில் அவன் வருவதற்குள் நான் வெளியே போய்த் திரும்பினால், குழந்தை தூங்கியிருப்பான்! இப்படி அடிக்கடி நேர்வதுண்டு.

பொழுது போக்குக்காகப் போகும் இடங்களிலும் தொழில் என்னைத் துரத்துவதுண்டு. சிட்டி பாபுவின் கச்சேரி கேட்க ஆசையாய்ப் போனேன். அங்கே வலிப்பு வந்த ஒரு ரசிகரைக் கவனிக்கப் போய் மருந்துக்கு ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்புவதற்கும் கச்சேரி முடிவதற்கும் சரியாக இருந்தது.

எத்தனை புதிய டாக்டர்கள் வந்தாலும் பட்டணங்களில் படித்து, அங்கேயே ஆஸ்பத்திரிகளில் வேலை பார்த்து, பெரிய டாக்டர்களுடன் அனுபவம்பெற்று, பட்டண வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டு விடுவதால் புது பிராக்டிஸ் பட்டணத்திலேயே ஆரம்பிக்கிறோம். கிராமத்துக்குப் போ என்று சுலபமாகச் சொல்லலாம். அங்கே எவ்வளவு பிராக்டிஸ் வரும் என்று சொல்ல முடியுமா? அதோடு ஒரு டாக்டர் தம் குழந்தைகள் நல்ல படிப்புப் பெற வேண்டும் என்று ஆசைப்பட்டால் அங்கே வசதி உண்டா?

என் மகன் பெரியவனாகி எல்லாம் கூடி வந்தால், அவன் ஒரு டாக்டர் ஆவதையே நான் வரவேற்பேன்.

பேட்டி: **அம்பி ஆசீர்வாதம்**

அடுத்த பேட்டி: **நாடக மேடை**



# ராசி தாசர்கள்!

## கொரிப்பதற்குக் கொஞ்சம்..

டாக்டர்களுக்கும் வக்கீல்களுக்கும் அத்தியாவசியமாகத் தேவைப்படுவது கைராசிதான். ''டாக்டர் ரங்கநாதனா?.... கைராசிக்காரரர் சார்.... எப்பேர்ப்பட்ட மோசமான கேஸாகத்தான் இருக்கட்டுமே, அவர் பார்க்கிறார் என்றால், எமன்கூடக் கிட்டே வருவதற்குப் பயப்படுவான்!'' என்று சொல்லி விட்டு, அந்த டாக்டரின் கைராசிப் புராணத்தை விரிவாக எடுத்துச் சொல்வார்கள் சிலர். அந்தப் புராணத்தின் ஒவ்வொரு 'கதை'யும் நம்மை மூக்கின் மேல் விரல் வைக்கச் சொல்லும்; 'அட, அப்படியா!' என்று வாய் பிளந்து அதிசயிக்கத் தூண்டும்; 'த்சொ' கொட்டச் சொல்லும்; கல்லுக் குண்டு மாதிரி இருப்பவர்களைக்கூட, ''ஆகா! இப்படிப்பட்டவர் கையால் ஒருவேளை மருந்து வாங்கிச் சாப்பிட்டால் தேவலையே!'' என்று சபலப்பட வைக்கும்.



இப்படிப்பட்ட கைராசிக்கார டாக்டர் ஒருவரின் பார்வைக்கு வந்து, ஆனால் அவரால் காப்பாற்றப்படாமல் போகிற கேஸ்களும் இருக்கும். அப்போதெல்லாம், ''ஹூம்! என்ன பிரயோசனம்?... அவன் தலையெழுத்து அப்படி!... இல்லா விட்டால் ரங்கநாதன் பார்த்தும் மண்டையைப் போடும்படி நேர்ந்திருக்குமா?....'' என்பார்கள் ரங்கநாத தாசர்கள். 'நோயாளி பிழைத்தால் டாக்டரின் கைராசி; பிழைக்காவிட்டால் அவன் தலையெழுத்து' என்கிற வாதம்!



வக்கீல்களுக்கும் இந்தக் கைராசி உண்டு. சிலர் தொட்ட வழக்குகளெல்லாம் பட்பட் என்று இவருடைய கட்சிக்காரருக்கே சாதகமாக முடிந்து போகும். இன்னும் சிலரது ராசி என்னவென்றால் சின்னஞ் சிறு வழக்குக்கூட இவர்களிடம் வந்தால் வருடக் கணக்கில் இழுத்துப் பறிக்கும். கடைசியில் கட்சிக்காரன் தன் சொத்து பத்துக்களையெல்லாம் விற்று விட்டு அரைத் துண்டோடு வந்து நிற்கிற

நிலையில் ஒரு வழியாக முடியும் — எதிர்க்கட்சிக்குச் சாதகமாக !

ராசிக்கார டாக்டர்கள், வக்கீல்கள் — இவர்கள் வீட்டில் கும்பல் நெரிபடும். அவர்கள் பேசுவது வேத வாக்காக மதிக்கப்படும். அவர்கள் துரும்பைக் கிள்ளிப் போட்டுவிட்டு வாய் கூசாமல் நூற்றுக்கணக்கில் 'பீஸ்' கேட்டாலும் முணுமுணுக்காமல் கொடுப்பார்கள். அவர்களது முன்கோபமும், சிடுமூஞ்சித்தனமும் 'சுபாவம்' என்று மதித்து ஒதுக்கப்படும். அவர்களது கைராசி பற்றிய கதைகள் தினந்தோறும் புதிது புதிதாக உருவாக்கப்படும்; மெருகேற்றப்படும்!

ராசிக்காரர்களிடம் சிலர் தம் வாழ்நாளில் ஒரு முறையே போய் விட்டு வந்தாலும், கடைசி வரையில் அதைப் பற்றியே அலுக்காமல் சலிக்காமல் சொல்லிக் கொண்டிருப்பார்கள். தங்களுக்குத் தெரிந்தவர்களை யெல்லாம் ராசிக்காரரிடம் போகும்படியே சிபாரிசு செய்வார்கள்; தம் சொந்த அநுபவத்தையும், செவி வழிச் செய்திகளையும் சுவைபடக் கூறித் தைரிய மூட்டுவார்கள்.

ராசிக்காரர் இருக்கும் தெருவிலேயே இன்னொரு டாக்டரோ வக்கீலோ இருப்பார். ராசிக்காரரை விட இவர் அதிகம் படித்தவராகவோ, குணவானாகவோ, வயிற்றில் அடித்துப் 'பீஸ்' வாங்காதவராகவோ இருக்கலாம். ஆனால் அவரிடம் கும்பல் சேராது. காரணம் என்னவென்றால் அவருடைய ராசி அப்படி !

அலுவலகங்களில் வேலை செய்கிறவர்களுக்குக்கூட ஒரு வகை ராசி உண்டு. உயிரைக் கொடுத்து உழைப்பான் ஒருத்தன். ஆபீசில் செய்வது போதாதென்று வீட்டுக்கும் 'வேலை' யைக் கட்டி எடுத்துக் கொண்டு போவான். ஞாயிற்றுக்கிழமை எண்ணெய் தேய்த்துத் தலை முழுகி விட்டு, ஈரம் காயாத தலையுடன் ஆபீசில் வந்து பழியாய்க் கிடப்பான். ஆனால் அவனுக்குப் பைசா பெயராது. ஒரு பதவி உயர்வோ அல்லது அதம்பட்சம் மேலிடத்திலிருந்து ஒரு ஷொட்டோகூடக் கிடைக்காது. அதே ஆபீசில் மாப்பிள்ளை மாதிரி டிரஸ் பண்ணிக் கொண்டும், கழுத்தை அடிக்கடி உயர்த்தி அநாவசிய 'ஸ்டைல்' பண்ணிக் கொண்டும், ''அவனுக்கு என்ன தெரியும், முட்டாள் !.... இவன் என்ன கிழித்தான் குப்பை!'' என்று எல்லோரையும் தூக்கிஎறிந்து பேசிக் கொண்டும், வெறும் கையெழுத்து மட்டுமே போட்டு விட்டுப் போகிற ஞான சூன்யத்துக்கு லட்டு லட்டாகப் 'பிரமோஷன்' கிடைக்கும். ''என்னைப் போல் எவனும் உண்டா ?....'' என்று அந்த வெற்றுத் துப்பாக்கி மார் தட்டிக் கொள்ளும் போது உழைத்துச் சலித்த செக்கு மாடு, ''உம் ! என் ராசி இப்படி!.... என் ஜாதகத்தில் நீசபங்க ராஜ யோகம் உண்டு என்று தாழையூர் ரங்காச்சாரி (ஜோசியர்) சொல்லியிருக்கிறாரே !....'' என்று சமாதானம் சொல்லித் திருப்திப்பட்டுக் கொள்ளும். வேறு வழி ?

கைராசி, முகராசி தவிர வேறு விதமான ராசிகளும் உண்டு. கிழமைகள், எண்கள் என்று ஒவ்வொன்றையும் சிலர் விடாப்பிடியாகப் பற்றிக் கொண் டிருப்பார்கள். இவற்றை வேறு யார் நம்புகிறார்களோ இல்லையோ, சினிமாக்காரர்கள் கண்மூடித்தனமாக நம்புகிறார்கள். சில வருடங்களுக்கு முன்னால் படத்தின் பெயரில் வரும் எழுத்துக்களை எண்ணினால் ஒற்றைப் படையாக வரவேண்டும் என்கிற நம்பிக்கை காரணமாக, சில படாதிபதிகள் 'க்', 'ச்', 'ப்' போன்ற ஒற்றெழுத்துக்களை விழுங்கி வைத்தார்கள். சிலரைப் பொறுத்தமட்டில் எழுத்தை விழுங்கியதுதான் மிச்சமாயிற்று! படம் 'கோவிந்தா' ஆகிவிட்டது. அவர்களுக்கு இரட்டைப் படை எண்கள்தான் ராசியோ என்னவோ!

அதிகம் அலைந்து சிரமப்படாமல் பெண்ணுக்கு மாப்பிள்ளையைத் தேடிப் பிடிப்பது, மூளையைச் செலவழிக்காமலே எழுதிப் பெயர் வாங்குவது, சொந்தப் பணத்தைப் போடாமல் பிறத்தியார் பணத்திலேயே 'பிஸினஸ்' செய்து பணம் பண்ணுவது, மற்றவர்களைக் குற்றம் சொல்லியே முன்னேறுவது, போட்டோ எடுக்கிறபோது சட்சட்டென்று தலையை நீட்டிப் படத்தில் இடம் பெறுவது, கடைசி நிமிடத்தில் புறப்பட்டுப் போய் ரயிலில் இடம் பிடிப்பது முதலிய வற்றுக்கும் ஓசியில் சினிமா, நாடகம் பார்க்கவும் நாசமாய்ப் போன அந்த 'ராசி' தேவை சுவாமி!

— எஸ். வி. ஆர்.



# கதாநாயகர்களான சபாநாயகர்கள்!

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் உட்புறத் தோற்றம்

**தமிழக சட்டசபை சபாநாயகர் தேர்தல் சீக்கிரமே நடைபெறவிருக்கிறது. இச்சந்தர்ப்பத்தில் ஜனநாயகத்தின் உயிர்நாடியாகத் திகழ்ந்து உலக சரித்திரத்தில் முக்கிய இடம் பெற்றுள்ள சில சபாநாயகர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமே!**

ஒரு ஜனநாயக நாட்டின் முதுகெலும்பு பாராளுமன்றம் என்றால் அதன் உயிர்நாடி அம்மன்றத்தின் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கும் சபாநாயகர்கள்தான்.

சமன் செய்து சீர்தூக்கும் துலாக்கோல் போல விளங்கும் சபாநாயகர் பதவி தோன்றிய விதமே ஒரு விசித்திரமான வரலாறு ஆகும். 1377ம் ஆண்டில் இங்கிலாந்து நாட்டில் மக்கள் சபை உறுப்பினர்கள் அனைவரும் தங்கள் கருத்துக்களைத் தொகுத்துப் பிரபுக்கள் சபையிடமும் பின்னர் மன்னரிடமும் கூற ஒரு பேச்சாளர் தேவை எனக் கருதி ஸர் தாமஸ் ஹங்கர்போர்ட் என்பவரைப் பேச்சாளராக அதாவது, ஸ்பீக்கராக (Speaker) நியமித்தனர். அவ்வாண்டு முதல் இங்கிலாந்து நாட்டின் அரசியல் வரலாற்றில் சபாநாயகருக்குத் தனி இடம் கிடைத்தது. அதுமட்டுமின்றி நாளுக்கு நாள் சபாநாயகரின் தனித் தன்மையும் பெருமையும் அதிகாரமும் வளரத் தொடங்கின.



இருபத்தேழு ஆண்டுகள் அமெரிக்க சட்ட சபையில் சபாநாயகராகப் பணியாற்றி ஓர் அரிய சாதனையை நிகழ்த்திக் காட்டிய ஸாம் ரேபர்ன்

இங்கிலாந்து நாட்டில் மக்கள் சபைக்கும் மன்னனுக்கும் இடையில் ஒரு தொடர்பாக இயங்கிய சபாநாயகரைப் பற்றி அக்காலத்தி லேயே சர்ச்சைகள் அவ்வப்போது எழுந்தன. மன்னனின் செல்வாக்கு, பலம், பெருமை முதலிய காரணங்களால் பெரும்பாலும் சபா நாயகர்கள் மன்னர் பக்கமே சார்ந்திருந் தனர். இந்த நிலை பல ஆண்டுகள் நீடித்தது.

சபாநாயகர்களின் வரலாற்றில் ஒரு புரட் சியை ஏற்படுத்தியவர் 1629ம் ஆண்டில் சபாநாயகராக இருந்த பிஞ்ச் என்பவர். ''நான் மன்னனுக்கு மட்டுமல்ல; இந்த மன் றத்துக்கும் சேவகன்'' என மக்கள் சபையிலே அவர் முழங்கினார்.



ஜனாதிபதியான சபாநாயகர் ஜேம்ஸ் நாக்ஸ் போல்க்

1642ம் ஆண்டில் சபாநாயகராக இருந்த லென்தால் என்பவர் தமது உரிமைகளை நிலைநாட்டுவதில் பிஞ்ச்சையும் விஞ்சி விட்டார்.

அவ்வாண்டில் இங்கிலாந்து நாட்டு மன்னன் முதலாம் சார்லஸ் ஐந்து சட்ட மன்ற உறுப்பினர்களைத் தாமே நேரடியாகக் கைது செய்ய முனைந்தபோது சபையில் வீற் றிருந்த லென்தால் மன்னனைப் பார்த்துக் கம்பீரமாக, ''இம்மன்றத்தின் சேவகனுகிய என்னைப் பேசும்படி இம்மன்றம் எனக்கு ஆணையிடுகிறது; அதனால் பேசுகிறேன்'' என்றார், அஞ்சா நெஞ்சத்துடன்.

சபாநாயகரை நியமிப்பதில் அந்தக் காலத் தில் மன்னனுக்குப் பெரும் பங்கு இருந்தது. 1679ம் ஆண்டில் இரண்டாம் சார்லஸ் மன்னன் தனக்கு வேண்டிய நபர் ஒருவரைச் சபாநாயகராக நியமிக்க முற்பட்டபோது இங்கிலாந்து மக்கள் சபை கொதித்தெழுந் தது. அதன் விளைவாகச் சபாநாயகரை நியமிப்பதில் மன்னரின் செல்வாக்கு அன்றோடு செல்லாக் காசாயிற்று.

அரசாங்கத்தில் சபாநாயகரின் முக்கிய பங்கு என்ன? அவர் அந்தப் பதவியிலிருந்து கொண்டே வேறு பதவிகளையும் ஏற்கலாமா? என்றெல்லாம் அந்த நாட்களிலேயே கேள் விகள் எழுப்பப்பட்டன.

அன்னி இராணியார் காலத்தில் சபா நாயகராக இருந்த ஹார்லே மாநிலக் காரிய தரிசியாகவும் பணியாற்றியுள்ளார். 1825ம் ஆண்டில் சபாநாயகராக இருந்த மேனர்ஸ் ஸட்டன் சட்டசபை நடவடிக்கைகளிலும் பங்கெடுத்துக் கொண்டார்.

சபாநாயகர் பதவி வகிப்பவர் வேறு எந்த அலுவலிலும் ஈடுபடக் கூடாது என்ற சம்பிர தாயத்தை முதன் முதலாக ஏற்படுத்தியவர் 1839ம் ஆண்டில் சபாநாயகராக இருந்த ஷா லேபீவர் என்பவர். அவர் தம்மைத் தேடி வந்த பதவிகளை உதறித் தள்ளியது மல்லாமல் சபையின் அலுவல்களில் எந்தக் கட்சியிலும் சேராமல் நடுநிலைமை வகித்து வழிகாட்டினார். அவர் காண்பித்த பாதையில் தான் இன்று எல்லா ஜனநாயக நாடுகளிலும் சட்டசபைகளில் சபாநாயகர்கள் இயங்கு கின்றனர்.

இங்கிலாந்து நாட்டில் சபாநாயகர் பல தடவைகளில் போட்டியின்றியே தேர்ந் தெடுக்கப்படுகிறார். அது மட்டுமின்றி ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்ட அவர் ஓய்வு பெறும்வரை சபாநாயகராகத் தொடர்ந்து பதவி வகிக்க முடியும். இந்த ஏற்பாட்டால் நன்மைகளும் உண்டு. சில தவிர்க்க முடியாத தீமைகளும் உண்டு.

மற்ற வேட்பாளர்களைப் போல் தமது தொகுதியில் சபாநாயகர் பொதுத் தேர் தலின்போது சொற்பொழிவுகள் நிகழ்த்த வேண்டியதில்லை; தேர்தலுக்காகப் பணம் செலவழிக்க வேண்டியதில்லை. அத்தொகுதி மக்களுக்கு அவரால் — அவர் அத்தொகுதி மக்களின் சட்ட பூர்வமான பிரதிநிதியாக இருந்த போதிலும் — எந்த விதமான பிர யோஜனமும் இல்லை. அதனால் அவருக்கு அவரது தொகுதியைப் பொறுத்த வரையில் அரசியல் ரீதியில் செல்வாக்குக் குறைந்து கொண்டே வருவதில் ஆச்சரியம் ஏதுமில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சபாநாயக ருக்கும் உலகில் உள்ள பிற ஜனநாயக நாடு களின் சபாநாயகர்களுக்கும் ஒரு முக்கியமான வேற்றுமை உண்டு.

அமெரிக்க ஜனாதிபதியும் உப ஜனாதிபதியும் பதவியை யாது காரணத்தினாலோ ஏற்கா விடில் அல்லது இருவருமே இறந்துபோக நேரிடில் சபாநாயகரே ஜனாதிபதியாகலாம் எனச் சட்டம் உள்ளது. இந்த விசித்திரமான சட்டத்தின்படி 1845ம் ஆண்டில் ஜேம்ஸ் நாக்ஸ் போல்க் என்பவர் தேர்தலுக்கு நிற் காமலேயே அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஜனாதிபதியானார். — அ. இராமதுரை

# 007 பாலு

கதை: குமரன்

படம்: விஜயா

15



















மீட்டர் மூன்று ரூபாய் காட்டியது. சட்டைப் பையில் பாக்கி இருந்த எட்டு ரூபாயில் ஐந்து ரூபாயை சிங்கின் சட்டைப் பையில் திணித்து விட்டுச் சாலையோடு ஓடினான்.
தேவை ஒரு யுக்தி! மூளையே, வேலை செய்!


சாலை ஓரமாக ஒரு கார் நின்றது. சாவி அதிலேயே இருந்தது. வெகு தொலைவில் சந்திரன் சென்ற கார் தெரிந்தது.
ஆபத்துக்குக் குற்றமில்லை; இந்தக் காரைத் தாற்காலிகமாக என்னுடையதாக்கிக் கொள்ள வேண்டியதுதான்!


வினாடிப் பொழுதும் தாமதியாமல் பாலு காரைக் கிளப்பினான். பம்பாய்ச் சாலைகள் அதுவரை கண்டிராத வேகத்தை அனுபவித்தன.
அப்பாவுக்குத் தெரியாமல் அவர் காரை அண்ணனின் உதவியோடு ஓட்டக் கற்றுக் கொண்டதும் இந்தச் சமயத்துக்குக் கை கொடுத்து உதவுகிறது!


பக்கத்துக் கடையில் சோடா குடித்துக் கொண்டிருந்தவர் பதறி ஓடி வருமுன் அவருக்குச் சொந்தமான கார் ஒரு சிறு புள்ளியாகி விட்டது, வெகு தூரத்தில்.
ஏய்! பதமாஷ்! சோர்! பக்கடோ! போலீஸ்!


பாலு வெகு சீக்கிரம் சந்திரன் சென்ற காரை நெருங்கி விட்டான். அவன் இவ்வளவு திறமையுடன் செயலாற்றுவான் என்று நினைக்காத அவ்விருவரும் ஒரு தடவை கூட திரும்பிப் பார்க்கவில்லை.


பெடர் ரோடு தாண்டி மலபார் ஹில் பகுதியில் உயரே ஏறியது கார்.


ஒரு பெரிய பங்களாவின் வாசலில் கப்பல் மாடல் கார் நின்றது. இருவரும் இறங்கி உள்ளே சென்றனர். பாலு எட்டவே காரை நிறுத்திக் கொண்டான்.
மேற் கொண்டு ஆக வேண்டியது என்ன? நானும் இறங்கி உள்ளே போவதா? அல்லது இங்கிருந்த படியே கவனிப்பதா?

தொடரும்.....

# இதோ ஆல்விமில்க்

## வைட்டமின்கள் நிறைந்த உணவு பானம்

ஆரோக்கியம் அதிகரிக்கச் செய்யும் வைட்டமின்கள், ஆடைச்சத்து நிறைந்த பால், பார்லிமால்ட், கோதுமை மாவு மற்றும் மால்ட்கள் செறிந்த உணவு பானம் இது. ருசி மிகுந்தது. எளிதில் ஜீரணமாவது. எல்லா வயதினருக்கும் டாக்டர்கள் ஆல்விமில்க்கை சிபாரிசு செய்கின்றனர். நோயுற்றிருக்கும் பொழுதும், நோய் குணமாகி உடல் தேறுவதற்கும் சிறந்த முறையில் உதவுவது. கர்ப்ப ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்குப் பாலூட்டும் தாய்மார்களுக்கும் ஏற்ற பானம். இன்றே ஆல்விமில்க் கேட்டு வாங்குங்கள், வேறு எந்த உணவு பானத்தையும் விட இதை மிகவும் விரும்புவீர்கள்.




*தயாரிப்பவர்கள்:*

**ஆல்விடோன்**
**லாபாரடரீஸ்**
மதராஸ்-43.



26




தயாரிப்பு:
வாண்டுமாமா

## கிளிக்குத் தகுந்த பாடம்!

ஒரு தோட்டத்து மரத்தில் கொய்யாப் பழத்தைக் கொத்தித் தின்று கொண்டிருந்தது ஒரு சின்னஞ்சிறு கிளி.

அந்த மரத்தில் வந்து அமர்ந்தது அந்தச் சமயம் பார்த்து ஒரு காகம். அதுவும் வயதில் இளைய காகம் தான். காகத்தைப் பார்த்ததும், சின்னக் கிளிக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

''ஏ, காகமே! நீ இங்கே ஏன் வந்து சேர்ந்தாய்? இது என் போன்ற அழகான கிளிகள் வந்து அமரும் மரம். அழகில்லாத பறவையாகிய நீ எங்களுடன் வந்து அமரக் கூடாது. வேறு எங்கேயாவது போய்த் தொலை!'' என்று சின்னக் கிளி, காகத்தை நோக்கி எரிந்து விழுந்தது! இதைக் கேட்ட காகத்துக்கு மிகவும் அவமானமாகப் போய் விட்டது. ''நான் அழகில்லையா? இந்த மரத்தில் உட்காரக் கூடாதா? கிளிகள்தான் உட்கார வேண்டுமா? இது என்ன நியாயம்?'' என்று மனத்தினுள் புலம்பிக் கொண்டு அங்கிருந்து நாரையின் வீட்டுக்குச் சென்றது. ஏனெனில் அந்தச் சுற்று வட்டாரத்தில் நியாயம் கூறுவதில் நாரைக்கு ஒரு நல்ல பெயர் ஏற்பட்டிருந்தது. நாரையார் அப்போதுதான் வீட்டை விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். கண்களில் நீர் முத்துக்கள் உருண்ட கோலத்தில் காகத்தைப் பார்த்ததும் அவருக்குப் புரிந்து விட்டது. ''எங்கேயோ யாருடனோ சண்டை. அதுதானே இந்த முகவாட்டம்?'' என்று காகத்தை நோக்கிச் சிறிதே சிரித்து விட்டுக் கேட்டார் நாரையார்.

''சண்டை ஒன்றுமில்லை. ஆனால்...'' என்று காகம் கூறி முடிப்பதற்குள், நாரை இடைமறித்து, ''காகமே! அதெல்லாம் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். இப்போது நான் கோழியார் வீட்டுக் கல்யாணத்துக்குப் போகிறேன். அங்கு விருந்து. உனக்குத் தடை எதுவும் இல்லையானால், என்னுடன் நீயும் வா! நேரமாகி விட்டது. சீக்கிரம் போக வேண்டும். அங்கு விருந்தெல்லாம் முடிந்த பிறகு உன்னுடைய துயரத்துக்கு என்ன காரணம் என்பதைச் சொல்லு, கேட்கிறேன். இப்போது சீக்கிரம் புறப்பட வேண்டும். என்ன சொல்கிறாய்? வருகிறாயா?'' என்று கேட்டது நாரை.



''ஓ! வருகிறேன். விருந்து என்றால், நான் வேண்டாம் என்று சொல்லுவேனா!'' என்று சொல்லிக் கொண்டே, நாரையுடன் சேர்ந்து கிளம்பிற்று காகமும்.

கல்யாணத்துக்குப் பலவிதமான பறவைகளும் வந்திருந்தன. காகத்தைப் பரிகசித்துப் பேசிய அந்தக் கிளி கூட, இன்னும் சில கிளிகளுடன் அங்கு வந்திருந்தது. விருந்துச் சாப்பாடு எல்லாம் முடிந்தபின் மண மக்களுக்கு வாழ்த்துரை கூறும் வைபவம் ஒரு மேடையில் நடந்தது. அங்கு பேசிய நாரையார் விருந்துச் சாப்பாட்டினை மிகவும் புகழ்ந்துரைத்தார். ஒவ்வொரு பறவையும் எப்படி விருந்து சாப்பிட்டதென்பதைக் குறித்தும் அவர் நகைச்சுவையுடன் சுட்டிக் காட்டாமல் விடவில்லை. அப்போது அவர் கிளிகளின் அழகைப் பற்றியும் கூறினார்.

''அன்பர்களே! இந்த விருந்து வைபவத்தில் காகங்களிடம் நான் முக்கியமான ஒரு வழக்கத்தைக் கண்டு மகிழ்ந்தேன். சாப்பாடு முடிந்ததும் காகங்கள் ஒவ்வொன்றும் தங்களுடைய மூக்கைத் துடைத்துக்கொண்ட நேர்மையைத்தான் குறிப்பிடுகிறேன். எதையாவது சாப்பிடுவோமானால் மனிதர்களைப்போல் வாயைத் துடைத்துக் கொள்வதுதான் நல்ல பழக்கம். சுத்தமான காரியமும் ஆகும். காகங்கள் எதைப் புசித்தாலும் மூக்கைத் தீட்டிச் சுத்தம் செய்து கொள்கின்றன. இத்தனைக்கும் இந்தக் காகங்கள் 'அழகில்லாத அசுத்தமான பறவைகள்' என்று பெயர் பெற்றிருக்கின்றன. கிளிகள் மிக அழகானவை என்று பெயர் எடுத்திருக்கின்றன. ஆனால் கிளிகள் கோபித்துக் கொள்ளக் கூடாது. பயன் என்ன? கிளிகளைப் போல் அழகாக இருந்து அசுத்தமாக விளங்குவதைவிட, அழகில்லாத காகங்களாக இருந்து சுத்தமாக விளங்குவதே நல்லதென்று கூறலாம். ஆகவே, உண்மையான அழகு காகங்களிடம் இருக்கிறதென்றால் யாரும் மறுக்க மாட்டார்கள். கிளிகளும் இனி இம்முறையில் உண்மையான அழகு பெற முயல வேண்டுகிறேன்!'' என்று சொல்லி முடித்து விட்டுக் காகத்தைத் திரும்பிப் பார்த்தார் நாரையார். காகம் தனது துயர் நீங்கிய பெருமிதத்தில் இன்னும் சற்று அதிக அழகுடன் விளங்குவதை நாரை அறிந்தது! - **கொக்கி**

செய்து பார்:

## கோழி முட்டை எக்ஸ்ரே



நிழல்களுக்குள்ள சில இயல்புகளைக் கொண்டு வேடிக்கையான தந்திரம் ஒன்றைச் செய்து காட்டலாம். அட்டை ஒன்றின் நடுவில் சதுரமான ஓட்டையைச் செய்து கொள்ளவும். எண்ணெய் தடவிய காகிதம் ஒன்றை எடுத்து அதை அந்த ஓட்டையின் மீது ஒட்டி, திரை ஒன்று தயார் செய்யுங்கள். இந்தத் திரைக்குப் பின்புறத்தில் இரண்டு மின் விளக்குகளை நிறுத்தவும். முன் புறத்தில் உங்கள் நண்பர்களை உட்காரச் சொல்லவும். முட்டை வடிவத்தில் வெட்டப்பட்ட அட்டை ஒன்றை ஒரு கம்பியின் மேல் பொருத்தி அதை இடது பக்கத்தில் உள்ள எரியும் விளக்குக்கும் திரைக்கும் இடையே வைக்கவும். இரண்டாவது விளக்கை எடுத்துக் கொண்டு அதை வலது பக்கம் (முன்பிருந்த விளக்கின் பக்கமே) வைக்கவும். ஒரு காகித அட்டையில் முட்டையின் உருவத்துக்குள் பொருந்துமாறு, ஒரு கோழிக் குஞ்சு உருவம் ஒன்றை வெட்டி எடுத்துக் கொள்ளவும். படத்தில் காட்டியுள்ளபடி இரண்டாவது விளக்குக்கும், திரைக்கும் இடையே அதை வைக்கவும். இரண்டாவது விளக்கை இப்போது எரிய விடவேண்டாம்.

உங்கள் நண்பர்களிடம் முட்டைக்குள் இருக்கும் குஞ்சைக் காட்டக்கூடிய 'எக்ஸ்ரே' இயந்திரம் ஒன்று இருப்பதாகக் கூறவும். ''சூ, மந்திரக்காளி!'' என்று கூறி இரண்டாவது விளக்கை எரிய விடவும். இப்போது திரையில் முட்டையின் மங்கலான நிழலையும், அதன் நடுவில் சற்றுத் தெளிவான கோழிக் குஞ்சையும் காணலாம்.

— அ. நடராசன்

---



பாட்டி: உன்னிடம் இரண்டு பிஸ்கோத்துகள் இருக்கின்றன. அதில் ஒன்று பெரியது; மற்றது சிறியது. உன் சகோதரனுக்கு நீ எதைக் கொடுப்பாய்?

பையன்: சகோதரன் என் அண்ணாவா தம்பியா? அதைச் சொல்லுங்கள்.

---

இருடன்: நீ இப்போது இழக்க விரும்புவது உயிரையா? அல்லது பணத்தையா?

பிரயாணி: சந்தேகமென்ன? உயிரைத்தான். வயசான காலத்துக்கு எனக்குப் பணம் தேவையாயிற்றே!



---

## பம்பர வித்தை

உங்களிடம் மரத்தாலான பம்பரமும் கயிறும் இருக்கின்றனவா? அப்படியானால் ஒரு வித்தை செய்யலாம்! பம்பரத்தின் தலையில் குறுக்காகக் கால் அங்குல அகலமுள்ள ஒரு வெள்ளைக் காகிதத்தை (படத்தில் காட்டியுள்ளது போல்) ஒட்டி விடுங்கள். இரவு நேரத்தில் அறையின் 'ட்யூப் லைட்'டைத் தட்டி விடுங்கள். மற்ற விளக்குகள் எரிந்தால் அணைத்துவிடுங்கள். அறையின் ஜன்னல் கதவுகளையும் மற்ற கதவுகளையும் மூடி விடுங்கள். நீங்கள் முன்பே அறைக்குள் அழைத்து வந்த நண்பர்கள் முன்னிலையில் பம்பரத்தைக் கயிற்றின் உதவியால் தரையில் சுழல விடுங்கள். நண்பர்கள் பம்பரம்



சுழலுவதையே கவனிக்கட்டும். பம்பரம் சுழலும். சிறிது நேரத்தில் வலப்பக்கமாகச் சுற்றிய பம்பரம் தன் சுழலும் திசையை மாற்றிக் கொண்டு இடப்புறமாகச் சுழல ஆரம்பிக்கும். இப்படிச் சிறிது நேரம் சுழன்ற பின் இது மறுபடி தன் திசையை மாற்றிக் கொள்ளும். (பிரதட்சணம், அப்பிரதட்சணமாக) இருவிதமாகச் சுழலும் இந்த வித்தையைக் கண்டு உன் நண்பர்கள் திகைப்பார்கள். ஆனால் நீங்கள் திகைக்க வேண்டாம். இப்படிச் சுழலும் இதன் ரகசியத்தை உங்களுக்கு நான் சொல்லி விடுகிறேன். இப்படிப் பம்பரம் மாறி மாறிச் சுற்றுவது நீங்கள் ஒட்டிய வெள்ளைக் காகிதத்தினால் அல்ல. ஆனால் திசை மாற்றிச் சுழலுவதுபோல் காணும்படி செய்ய உதவுகிறது வெள்ளைக் காகிதம் அவ்வளவுதான்.

-சுதாகரன்

# கிளிஞ்சல் கோபுரம்



ஜெகசிற்பியன்

## அத்தியாயம் பதினைந்து

## கூட்டறுந்த காளை!

முத்துசிவன் மெல்லச் சிரித்தான். வந்தனாவைப் பெண் என்று தான் அனுமானித்தது சரியாகி விட்டதே என்பதால் ஏற்பட்ட மகிழ்ச்சிச் சிரிப்பு அது!

''போங்க அண்ணாச்சி! நீங்க எப்பவுமே இப்படித் தான். 'பிய்ச்சு உதறிப் பிடும், பிய்ச்சு உதறிப் பிடும்'னு சொல்றீங்களே, எனக்கு அது கொஞ்சமும் பிடிக்கலை. ஏன்னா, அப்படி நீங்க சொல்றது மற்றவங்க காதிலே 'கடிச்சுக் குதறிப்பிடும்'னுதான் விழும்'' என்று முத்துசிவனைக் கடைக்கண்ணால் பார்த்தபடி ரட்சகனிடம் கடிந்து கொண்டு, சிணுங்கிச் சிரித்தாள் வந்தனா என்ற அந்தப் பெண். அடடா, அப்படி அவள் சிணுங்கிச் சிரித்ததில்தான் என்ன அழகு! என்ன ஒய்யாரம்!

''கோபிச்சுக்காதே, தங்கச்சி! உனக்குப் பிடிக்கலேன்னா அந்த டயலாக்கை மாத்திப்பிடறேன்!'' என்றான் ரட்சகன் சிரித்துக் கொண்டே.

முத்துசிவனால் சிரிப்பை அடக்க முடியவில்லை. ஆனாலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு இளநகை பூத்தான். அடுத்தபடி அவனுடைய பார்வை அந்த முதியவளின் பக்கம் திரும்பியது. அவள் இன்னமும் வெற்றிலை போடுவதிலேயே கவனமாக இருந்தாள். ஒருகால் அது வெறும் நடிப்பாகவும் இருக்கலாம். இந்த நாடகத்தில் அவள் கதாநாயகனின், அல்லது கதாநாயகியின் தாயாராக நடிப்பாள் போலும் என்று அவன் எண்ணிக் கொண்டான். அவளுக்குச் செய்திருந்த ஒப்பனை மிகவும் இயற்கையாக, தத்ரூபமாக—இருக்கிறதென்றாலும் முன் அநுபவத்தினால் ஒரு சந்தேகமும் தோன்றி அவனது மனத்தை மிரள வைத்தது. அதாவது, அந்த அம்மையார் நிஜப் பெண்மணியா? அல்லது பெண் வேடம் போட்டிருக்கும் ஆணா?

ரட்சகன் இந்தச் சந்தேகத்தைத் தீர்த்து வைக்கும் விதத்தில் சொன்னான். ''இவங்க பெயர் கோகிலாம்பாள்! இவங்களுடைய அருமை மகள் தான் வந்தனா!''

கோகிலாம்பாள் எழுந்து போய்ச் சன்னல் வழியாக வெற்றிலைக் குழம்பை உமிழ்ந்து விட்டுக் கை விரலில் இருந்த சுண்ணாம்பைச் சன்னல் கம்பியில் துடைத்துவிட்டு வந்து முத்துசிவனை நன்றாக மேலும் கீழும் பார்த்து, ''ஐயாவை நான் எங்கோ, எப்பவோ பார்த்திருக்கிறதாக ஞாபகம்!'' என்றாள் புன்சிரிப்புடன்.

அவள் அப்படிச் சொன்னது முத்துசிவனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் ரட்சகனை ஒரு தினுசாகப் பார்த்துச் சிரித்தான்.

அதை உடனே புரிந்து கொண்ட ரட்சகன், ''ஐயையோ! சாரை நீங்க பார்த்திருக்க மாட்டீங்கம்மா! இவர் மாதிரி ஜாடையில் வேறே யாரையாச்சும் உங்க ஃபீல்டிலே பார்த்திருப்பீங்க! இவர் இருக்கிற ஃபீல்ட் தனி. அதுக்கும் இதுக்கும் ரொம்பத் தூரம்!'' என்றான் விஷமச் சிரிப்புடன்.

''இருக்கும், இருக்கும்!'' என்று நிஜமாகவே தலையாட்டிக் கொண்ட கோகிலாம்பாள், ''அது சரி, தம்பி! டாக்சிக்கு ஏற்பாடு பண்ணிட்டீங்களா?'' என்று கேட்டாள்.

''இப்ப எதுக்கம்மா டாக்சி?'' என்று சற்றே வியப்புடன் வினவினன் ரட்சகன்.

''நாடகம் முடிஞ்சதும் நாங்க வீட்டுக்குப் போகவேண்டாமா?''

ரட்சகன் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தான். ''இன்னும் நாடகமே ஆரம்பமாகலே, இதுக்குள்ளாற நாடகம் முடிஞ்சு வீட்டுக்குப் போறதுக்கு டாக்சி ஏற்பாடு பண்ணச் சொல்றீங்களே!''

''சும்மா ஒரு ஞாபகத்துக்குச் சொல்லி வைச்சேன் தம்பி! ஏன்னு, நாடகம் முடிஞ்சதும் உங்களைத் தேடிக் கண்டுபிடிக்கிறது ரொம்பக் கஷ்டம்னு எனக்குத் தெரியும்.''



ரட்சகனின் முகத்தில் அசடு வழிந்தது. அதை ஒரு புன்னகையால் பூசி மெழுகி மறைத்துக் கொண்டான்.

''அது போகட்டும். இப்ப எனக்கு ஒரு வாசனைப் புகையிலைப் பொட்டலமும், ஜின்டான் பொட்டலம் ஒண்ணும் வேணுமே? அதோடுகூட ஐஸ் போட்ட மோரும் வாங்கி வரச் சொல்லுங்க!''

''ஐஸ் மோரு யாருக்கு? வந்தனவுக்கா?''

''இல்லே; எனக்குத்தான்.''

''இந்த நேரத்திலே ஐஸ் மோருக்கு எங்கேம்மா போறது? அதுவும் இப்ப அதைக் குடிச்சா தொண்டை கட்டிக்கும்...''

''நான் என்ன மேடையிலே நடிக்கவா போறேன்? எங்கணுச்சும் ஆளை விட்டு வாங்கிவரச் சொல்லுங்க, தம்பி!''

''இங்கே மேக்—கப் மேன் இருந்தாரே அவர் எங்கேம்மா?''

''ரெண்டு வாழைப் பழம் சாப்பிட்டுட்டுச் சோடாக் குடிச்சுட்டு வரப்போயிருக்கிறுர்!''

''ஓகோ!....சரிதான்.....'' என்று உள்ளார்ந்த சங்கடத்துடன் தலையைச் சொறிந்து கொண்ட ரட்சகன், 'போகலாமா?' என்பதுபோல் முத்துசிவனைப் பரிதாபமாகப் பார்த்தான்.

''சரி; போகலாமே!'' என்றவாறு வந்தனவைத் திரும்பிப் பார்த்துவிட்டு ரட்சகனின் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டு, அவ்வறையை விட்டு வெளியே நடந்தான் முத்துசிவன்.

நாடக ஆரம்பத்துக்கான வாத்திய இசை பிரமாதமாக முழங்கலாயிற்று.

**பெ**ரியதொரு மரத்தின் உச்சிக்கிளையில் தொங்கும் கனியொன்றைக் குறி வைத்து எறியப்படும் கல்லானது அந்தக் கனியைத் தாக்கி வீழ்த்தும் தொலைவு வரையில்தான் நேரே செல்லும்; கனியைத் தாக்கியபின் கல்லின் போக்கு எத்திசையிலும் மாறிவிடலாம். அந்நிலையில் அக்கல்லின் போக்கைக் கட்டுப்படுத்த அதை எறிந்தவனுலும் இயலுவதில்லை.

முத்துசிவனின் போக்கும் இப்போது அப்படித்தான் ஆகியது.

'எத்தனை பெரிய இலட்சியத்தை எவ்வளவு தீரத்தோடு ஏற்று நிறைவேற்றி முடித்து விட்டேன்! நான் வெறும் இலட்சியவாதி மட்டுமல்ல, காரியசித்தனும் கூட என்பதை நிரூபித்துக் காட்டி விட்டேன்!'

பெருமித உணர்வு பொங்கப் பொங்க இவ்வாறு எண்ணி மனம் பூரித்துத் தன்மீதேதான் வியப்பும், பிரமிப்பும் அடைந்து கொண்டிருந்தான் அவன். பற்றுக்குறைக்கு அவனுடைய அன்புக்கும், மதிப்புக்கும், நம்பிக்கைக்கும் உரியவர்களாயிருந்த சிலர் அவனைச் சந்திக்கும் போதெல்லாம் இவ்விதமாகவே புகழ்ந்து பேசி அவனுள் அகண்டாகாரமாகக் கிளர்ந்திருந்த அப்பெருமித உணர்வை மேலும் உலுக்கிக் குலுக்கி வழியச் செய்தனர்.

''என்ன மிஸ்டர் முத்துசிவன்! உங்கள் கடைசித் தங்கைக்கும் சிறப்பாகக் கல்யாணம் பண்ணி முடித்து விட்டீர்களாமே? கேள்விப்பட்டேன். நான் ஊரில் இல்லை. அதனுல் கல்யாணத்துக்கு வர முடியவில்லை. ஆனுலும் என் அம்மாவை அனுப்பி வைத்திருந்தேன். உங்களை அவள் ஒரேயடியாகப் புகழ்கிறுள். என் அண்ணவும் உங்களை நேரில் பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறுர். நீங்க



ளெல்லாம் ஆயிரத்தில் ஒருவர், இலட்சத்தில் ஒருவர் என்று பிறக்கிறவர் என்கிறார் என் அப்பா. ஒய்வு கிடைக்கும் போது ஒரு நாளைக்கு எங்கள் வீட்டுக்கு வாருங்களேன்! அவசியம் வாருங்கள். வருவதற்குமுன் ஃபோன் செய்தீர்களானால் கார் அனுப்பி வைக்கிறேன்.''

அவனுடைய கம்பெனி டைரக்டர்களில் ஒருவரின் புகழ்மொழி இது.

''சும்மா உதட்டளவு உபசாரத்துக்காக இதைச் சொல்லவில்லை, முத்துசிவன்! உண்மையிலேயே நீங்கள் ஒரு பெரிய ஹீரோதான்! கடமை வீரர் என்ற சொல்லுக்கு முற்றிலும் தகுதியானவர். உங்களிடமிருந்து நான் எவ்வளவோ கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. கற்றுக் கொண்டால் மட்டும் போதுமா? கற்றவற்றைக் காரியத்தில் காட்ட வேண்டுமே! உங்களைப் பார்க்கும் போதெல்லாம் ஓர் உயரமான மலையைப் பார்ப்பது போன்ற பிரமையே எனக்கு ஏற்படுகிறது மிஸ்டர்!''

இது அவன் கணக்கு வைத்துக் கொண்டுள்ள பாங்கின் ஏஜண்ட் ஒருவருடைய பிரமிப்பு கலந்த அன்புப் பாராட்டு.

''சார்! உங்களை முகஸ்துதி பண்ணறதாக நினைக்காதீங்க. என் மனசிலே பொங்கி வழியற சந்தோஷத்தை உங்களோடு பகிர்ந்து கொள்கிறதுக்காகவே இதைச் சொல்றேன். யாரும் எதையும் நினைச்சிடலாம்; நினைக்கிறதைச் சாதிப்பேன்னு சபதமும் ஏற்றுவிடலாம். ஆனால் அப்படி ஏற்கிற சபதத்தைச் சாதித்து முடிக்கிறதுங்கிறது அத்தனை இலேசில்லேன்னு எனக்கு நல்லா தெரியும் சார்! ஏன்னா, நானே அது மாதிரி எத்தனையோ சபதங்கள் போட்டு ஒண்ணைக்கூட இதுவரை சாதிச்சதில்லை. உங்க கடைசித் தங்கையோட கல்யாணத்துக்கு நானும் வந்திருந்தேன். நல்ல விருந்துச் சாப்பாடு சாப்பிட்டேன். ஆனால் அழுதுகிட்டே சாப்பிட்டு முடிச்சேன். தப்பா நினைக்காதீங்க சார்! உங்க சபதத்தின் கடைசிச் சாதனையான அந்தச்

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.

சாப்பிடும் அளவு:

வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி






புதிய

மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிகோலஸ் (N) தயாரிப்பு

சுப காரியத்தையும்; அதை அர்த்தமிக்கமாய்ச் சாதிச்சு முடிக்கிறதுக்காக நீங்க இது வரையில் பட்டிருக்கிற பாடுகளையும், செய்திருக்கிற தியாகங்களையும் நினைச்சே அப்படி அழுதுட்டேன் சார்!''

இது அவனுடைய கம்பெனியின் 'டெலிவரி வேன்' டிரைவர் உணர்ச்சி ததும்பச் சொன்னது.

இப்படி இன்னும் பலரும் ஒருமுகமாகப் பாராட்டிப் புகழ்ந்ததைக் கேட்டுக் கேட்டு — ஏற்கனவே தன் இலட்சிய சாதனைகளை எண்ணித் தன்னைத் தானே வியப்பும் பிரமிப்புமாகப் பார்த்து மகிழ்ச்சிப் பெருக்கில் திளைத்துக் கொண்டிருந்த அவனுக்கு ஒருவிதக் கிறுகிறுப்பே ஏற்பட்டுப் போயிற்று. அந்தப் போதை மயக்கத்தில், இதுகாறும் அவனிடம் குடி கொண்டிருந்த அடக்கம், பெருந்தன்மை ஆகிய நற்பண்புகளெல்லாம் கட்டுவிட்டுத் தளர, அதனால் அவன் கொஞ்சம் 'ஜாஸ்' போலவும் நடந்து கொள்ள ஆரம்பித்தான். அதாவது, தன் இலட்சிய சாதனைகளைப் பற்றித் தானே சிலரிடம் வலியப் போய்ச் சொல்லிப் பெருமையடித்துக் கொள்ளத் தொடங்கினான்.

''உங்களுக்கு விஷயம் தெரியுமா சார்? என் கடைக்குட்டித் தங்கைக்கும் கல்யாணம் பண்ணி முடிச்சுட்டேனே! பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் செலவு. ஆனால் கல்யாணத்துக்கு வந்தவர்கள் பதினையாயிரத்துக்குச் செலவு மதிப்புப் போட்டார்கள். அவ்வளவு சிறப்பாக நடத்தினேன். ஏதோ, கடவுள் கிருபையாலும், உங்களைப் போன்ற பெரியவர்களின் ஆசியாலும் நான் ஏற்றுக்கிட்ட இலட்சியத்தை வெற்றிகரமாகவே நிறைவேற்றி, என் அப்பாவின் ஆத்மாவைச் சாந்தியடைய வைச்சுட்டேன். இதோடு என் கடமையெல்லாம் முடிஞ்சு போச்சு.''

தன் தந்தையின் நெருங்கிய நண்பராயிருந்த போஸ்ட்மாஸ்டர் ஒருவரை அவனே வீடு தேடிப் போய்ப் பார்த்துப் பெருமையுடன் சொல்லிக் கொண்டது இது.

''ஏன் மிஸ்டர் கல்யாணத்துக்கு வரலே? அழைப்புப் பத்திரிகை அனுப்பி வைச்சேனே! குடும்ப சமேதராக வருவீங்கன்னு எதிர்பார்த்தேன்; நீங்க வராமல் போனது எனக்கு ரொம்ப வருத்தம் போங்க! எதற்கு இவ்வளவு குறிப்பா உங்களைக் கேட்கிறேன்னு, ஆதியிலிருந்தே எனது குடும்ப நிலவரங்களையும், என் தம்பி தங்கைகளுக்காக நான் ஏற்றுக்கிட்ட விரத



''அடா! உங்க நாதஸ்வரத்தில் ஏகப்பட்ட மெடல்களைத் தொங்க விட்டிருக்கீங்களே! ஏது? யார் எப்ப கொடுத்தது?''

''ரொம்ப ஆசையாக இருந்துச்சு. உன்னுடைய காசு மாலையை எடுத்துக் கட்டிக்கிட்டேன்.''

சபதங்களையும் நீங்க நல்லா அறிஞ்சவர்; அப்படி அறிஞ்ச ஒருவர் என்னோட சபத சாதனைகளில் கடைசி சுப நிகழ்ச்சியான அந்தக் கல்யாணத்தை நேரில் வந்து கண் குளிரப் பார்க்கிறது ஒரு விசேஷம் இல்லையா? பார்த்திருந்தால் என்னைப் புகழறதுக்கு வார்த்தைகளே உங்களுக்குக் கிடைச்சிருக்காது. அந்த அளவுக்குப் பிரமிச்சுப் போயிருப்பீங்க.''

தன் வீட்டின் பேரில் கடன் கொடுத்திருந்த ஓர் அச்சகச் சொந்தக்காரருடைய மகனை வழியில் பார்த்து நிறுத்தி வைத்துப் பெருமை பொங்க அவன் பொரிந்து தள்ளியது இது.

இப்படி இன்னும் தன் அந்தஸ்து, கௌரவம் ஆகியவற்றுக்குச் சமதையில்லாதவர்களிடம்கூடத் தனது இலட்சிய வெற்றி குறித்துச் சாங்கோபாங்கமாகச் சொல்லி அவர்களின் பிரமிப்பான புகழ்மொழிகளையும், வியப்பார்ந்த பாராட்டுரைகளையும் கேட்டு மனக் கிளுகிளுப்பு அடைந்தான்.

சில சமயம் சில பேர்மீது அவனுக்குக் கோபம் கோபமாக வரும். அதாவது, அவனைச் சந்திக்கும் சிலர் இவ்விஷயமாய் அவனிடம் ஏதும் கேட்கா விட்டால்தான் அப்படி உள்ளூறச் சினந்து பொங்குவான். பிறகு அவனே அவர்களிடம் சாமர்த்தியமாகப் பேச்சுக் கொடுத்துத் தனது இலட்சிய வெற்றி பற்றி வெகு நாசூக்காகத் தெரிவித்துவிட்டு, அவர்களாகவே அவ்விஷயமாய் அவனிடம் கேள்வி கேட்கும்படி வைத்துவிடுவான். அப்படியும் அவர்கள் அதைப் புரிந்து கொள்ளாமலோ, அல்லது

புரிந்து கொண்டும் கேட்க விரும்பாமலோ இருந்து விட்டால், 'சே, என்ன மனிதர்கள் இவர்கள்! இங்கிதம் தெரியாத ஜடங்கள்! பொருமைப் பிண்டங்கள்!' என்று மனத்துள் கறுவியபடி அவர்களிடம் மேற்கொண்டு முகம் கொடுத்துப் பேசாமல் அலட்சியப்படுத்தி விட்டுப் போய் விடுவான்.

இத்தகையதொரு விசித்திர மனோபாவம் அவனுள் வளர வளர, அவ்வளர்ச்சியானது பட்டுப் பூச்சியின் மெல்லிய சிறகுகளிலுள்ள அழகு வண்ணப் பொட்டுக்கள் சரத் காலத்திலே ஒளி மங்கிக் கலைந்து போவது போல் அவனிடத்தே இதுகாறும் அமைந்திருந்த நல்ல பல குணங்களையும் நடத்தைகளையும் வெகு வேகமாக மாற்றத் தொடங்கியது.

முன்னெல்லாம் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்தானானல் தன் தம்பி தங்கைகளின் படிப்பு, உத்தியோகம் சம்பந்தமாக யாரேனும் பெரிய மனிதர்களைப் பார்க்கவோ, அல்லது வீட்டுக்குத் தேவைப்படும் முக்கியமான பொருள்களைத் தானே நேரில் பார்த்து வாங்க வேண்டியிருந்தாலோ தான் வெளியே செல்வான். மற்றபடி அவன் எங்கும் போவதில்லை. போவதற்கு அவனுக்கென்று தனி விஷயம், தனித்தேவை, தனி விருப்பம் இருந்தால்தானே?

தினமும் காலையில் ஆபீசுக்குப் புறப்படும் போது அன்று மாலை வீடு திரும்பியதும் என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டும் என்பதற்குத் தன் மனத்துக்குள்ளாகவே ஓர் 'அட்டவணை' தயாரித்துக் கொள்வான். அதன்படி ஆபீஸிலிருந்து வந்ததும் அந்தக் காரியங்களையெல்லாம் அவன் செய்து முடிப்பதற்கும், இரவுச் சாப்பாட்டுக்கான நேரம் வருவதற்கும் சரியாக இருக்கும். சாப்பிட்டு விட்டுப் படுக்கப் போய் விடுவான்.

ஆனால் மைதிலிக்குத் திருமணமாகி அவள் கணவன் வீட்டுக்குப் போன மூன்றும் நாளிலிருந்து, காலையில் ஆபீசுக்குப் புறப்படும்போது அன்றைய மாலைப் பொழுதுக்கான வேலைத் திட்டம் எதையும் அவனால் தீர்மானிக்க முடியவில்லை. வேலைகள் இருந்தால்தானே தீர்மானிப்பதற்கு? அதனால் மாலைப் பொழுதை எப்படிக் கழிப்பதென்பது அவனுக்கு ஒரு பெரிய பிரச்னையாகியது.

மைதிலி ஊருக்குப் போன மறு நாள் மாலை சுகுணவைப் பார்க்க அவளுடைய வீட்டுக்குப் போய் வந்தான்; அடுத்த நாள் மாலை ரட்சகனின் 'பகல் கொள்ளை'யைப் பார்க்கப் போனான். மூன்றும் நாள் மாலையிலிருந்துதான் இந்தப் 'பொழுது போகாப் பிரச்னை' தலைதூக்கியது.

ஆபீஸிலிருந்து வந்ததும் முகம் கைகால்களைக் கழுவிக் கொண்டு காப்பி — டிபன் சாப்பிட உட்காரும் போதே, 'இனி இரவு படுக்கப் போகும் வரையில் என்ன செய்வது? நேரத்தை எப்படிக் கடத்துவது?' என்று கவலைப்படலானான்.

ஓரிரு தினங்கள் வீட்டினுள்ளும், வீட்டைச் சுற்றியும் உலாவி உலாவியே நேரத்தைப் போக்கினான். அப்புறம் இரண்டு தினங்கள் தோட்டத்திலுள்ள புல் பூண்டுகளைச் செதுக்கிச் சுத்தப் படுத்துவதில் இறங்கினான். அந்தக் கடினமான வேலை அவனுடைய உடம்புக்கு ஒத்து வரவில்லை. அதிகக் களைப்பும் சோர்வும் ஏற்பட்டதோடு, அடுத்த நாள் ஆபீஸில் சுறுசுறுப்பாக வேலைகளைக் கவனிக்க முடியாமல் சிரமப் பட வேண்டியதாயிற்று. அதனால் தோட்ட வேலை செய்வதை விட்டு விட்டு வீட்டில் ஒட்டடை அடிப்பதிலும், மரச் சாமான்களைத் தூசு தட்டித் துடைத்து ஒழுங்குபடுத்தி வைப்பதிலும் ஒரு மாலை நேரத்தைக் கழித்தான். இன்னொரு நாள் அன்றைய செய்திப் பத்திரிகையின் பன்னிரண்டு பக்கங்களையும் ஒரு வரி விடாமல் படித்துப் பொழுதை ஓட்டினான். மற்றொரு நாள் வெறுமே கட்டிலில் படுத்துப் புரண்டு கொண்டிருந்து ஒரு சின்னத் தூக்கமும் போட்டு எழுந்தான். அப்படி அகாலத்தில் தூங்கியதால் அன்றிரவு சரியாகத் தூக்கம் பிடிக்கவில்லை. நடு ஜாமம் வரையில் கண் விழித்திருந்து அவஸ்தைப்பட வேண்டியதாகியது.

இந்நிலைக்குப் பிறகே மாலைப் போது அவனுக்கு ஒரு பிரச்னைக்குரியதாகியது. இன்னும் சனி, ஞாயிறு வந்து விட்டால் அந்த ஒன்றரை நாள் பொழுதை ஒரு கொடிய தண்டனைக் காலமாகவே வெறுக்கத் தலைப்பட்டான்.

அவனுக்கு நண்பர்கள் நிறையப் பேர் இருந்தனர். ஆனால் தோழர்கள் மிகக் குறைவு. அந்தத் தோழர்களிலும் வயது அந்தஸ்து கௌரவம் பாராமல் மனம் விட்டு நெருங்கிப் பழகக்கூடிய சகாக்கள் மிக மிகக் குறைவு. அவர்களில் சிலர் தொலைதூரங்களில் — புறநகர்ப் பகுதிகளில் — குடியிருந்தார்கள். அவர்களைப் பார்க்கப் போவதென்றால் ஒரு பிரயாணத்தையே மேற்கொண்டாக வேண்டும். அப்படிப் போனாலும் போகிற

நேரத்தில் அவர்கள் வீட்டில் இல்லையானால் அதுவே ஒரு வருத்தமாகிச் சலிப்புடன் திரும்பி வர நேரிடும். இதில் இன்னொரு சங்கடம் என்னவென்றால், பொழுதைப் போக்குவதற்காக இவன்தான் அவர்களைத் தினமும் தேடிப் போக வேண்டுமே தவிர அவர்கள் இவனை நாடி வருவார்கள் என்று சொல்ல முடியாது. காரணம், அவர்களெல்லாம் மனைவி, மக்களோடு குடும்பச் சிக்கல் பிடுங்கலில் உழன்று கொண்டிருப்பவர்கள். இவன் ஒருவன் தான் கட்டைப் பிரம்மச்சாரி. அதிலும் இப்போது தன் வாழ்க்கையில், எந்தவித நோக்கமோ, இலட்சியமோ, கடமையோ, பொறுப்போ இல்லாமல் கட்டறுந்து நிற்பவன். எனவே இவன் தான் அவர்களைத் தினமும் பார்க்கப் போக வேண்டும். அப்படிப் போவது இவனுக்குச் சலிப்பாயிருக்கலாம்; ஆனால் அவர்களுக்கு இவன் அடிக்கடி வருவது நாளாவட்டத்தில் ஒரு தர்மசங்கடமாகி விடலாம் அல்லவா?

கூட்டிலிருந்து முதன் முதலாக வெளிப்படும் சிட்டுக் குஞ்சு தன் புதிய சிறகுகளை எவ்விதம் அசைத்து எத்திசையில் பறந்து செல்வது என்று தெரியாமல் துறுதுறுப்பு கலந்த பிரமிப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தபடி பரிதாபமாக உட்கார்ந்திருப்பது போல் முத்துசிவனும் அன்று மாலை ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்து காப்பி சாப்பிட்டு விட்டு வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு தெருவில் போவோர் வருவோரையெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். நேரமாக ஆக அப்படிப் பார்த்துக் கொண்டிருப்பதிலும் அவனுக்குச் சலிப்பு ஏற்பட்டது.

'சே! ஏன் இப்படி இங்கே அடைந்து கிடக்க வேண்டும்? எங்காவது போய்க் காலாற உலாவிவிட்டு வரலாமே?' என்று முணுமுணுத்துக் கொண்டே விருட்டென்று எழுந்த அவன் தன் அம்மாவிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளியே புறப்பட்டு விட்டான்.

கால் போன போக்கில் — தான் இதற்குமுன் போயிராத பல வீதிகளிலும் சாலைகளிலும் — உல்லாசமாக நடந்து சென்ற முத்துசிவன், இரவு எட்டுமணிவாக்கில் ஏதோ ஒரு தெருவிலே திரும்பி நடக்க, அந்தத் தெரு அவனை அவனுடைய வீட்டு எதிரில் கொண்டு வந்து விட்டு விட்டது.

அவனுக்கு ஒரே களைப்பு, சோர்வு! ஆனால் மனத்தில் இனம் புரியாததோர் உற்சாகம் ஊற்றெடுப்பதை உணர்ந்து













அவனே வியப்படைந்து கொண்டான். அன்றிரவு நல்ல தூக்கம்.

அடுத்த நாளும் மறுநாளும்கூட அவன் இதே 'யுக்தி'யைக் கடைப்பிடித்துப் 'போகாத பொழுதை'ப் போக்கினான். மூன்றாம் நாள் அதில் அலுப்பு ஏற்பட்டு விட்டது. ஒரு காரியமும் இல்லாமல் சும்மா தெருக்களைச் சுற்றி வருவது அவனுக்கு அசிங்கமாகவும் பட்டது. அதனால் அன்று ஒரு 'பார்க்'

இல் போய்ப் பேசாமல் உட்கார்ந்து விட்டான். பொழுதைப் போக்க இது முன்னதைக் காட்டிலும் சற்று சுகமாகவும் இலகுவாகவும் தோன்றியது. ஆனால் நாலைந்து தினங்களுக்குள் அதுவும் சலிப்பாகியது.

அப்புறம் ஒரு ஞாயிற்றுக்கிழமை பீச்சுக்குச் சென்றான். அன்றையப் பொழுது வெகு புதுமையாகவும் ரஸமாகவும் கழிந்தது. அன்றிலிருந்து தினமும் பீச்சுக்குச் செல்லத்தொடங்கினான். ஆனால் அதுவும் பத்துப் பன்னிரண்டு தினங்களுக்குள் புளிப்புத் தட்டி விட்டது. அதன்பின் ஒரு நாள் 'துணிந்து' ஓர் ஆங்கிலச் சினிமாப் படம் பார்க்கப் போனான். அன்று அவனுக்கு ஒரே குதூகலம்! பொழுது எப்படிப் போயிற்று என்றே தெரியாத மயக்கம்! அடுத்து ஓர் இந்திப் படம்; அப்புறம் ஒரு தமிழ்ப் படம். இப்படித் தினமும் தவறாமல் ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போகத் தொடங்கினான். நாளாவட்டத்தில் தமிழ்ப் படங்களே அவனுக்கு மிகவும் பிடித்தமாயின. அதன் காரணத்தைத் தனக்குத் தானே அந்தரங்கமாக எண்ணிப் பார்த்துக் கொள்ளவும் அவன் வெட்கப்பட்டான்!

'அடடா! பொழுது போகவில்லை என்று இத்தனை நாட்களும் வீட்டில் அடைந்து கிடந்த என் அறியாமையை என்னென்பது! இனி, பொழுது போதவில்லை என்றுதான் நான் கவலைப் பட வேண்டும்!'

இப்போதெல்லாம் அவன் மாலை நேரக் காப்பி டிபனை வீட்டில் பண்ணுவதில்லை. ஹோட்டல்களில் முடித்துக் கொண்டான். தினமும் ஒரு ஹோட்டல் பலகாரங்களை ருசி பார்ப்பது அவனுக்குப் பரமானந்தமாயிருந்தது.

சினிமாவோடு நில்லாமல் நாடகங்களுக்கும் போகத் தொடங்கினான். ஆனால் ரட்சகனின் 'பகல் கொள்ளை' பார்த்த போது ஏற்பட்ட மகிழ்ச்சிக் கிளுகிளுப்பை இந்த நாடகங்களைப் பார்த்ததில் அவனால் பெற முடியவில்லை. அதன் காரணம், இந்த நாடகங்களைவிட அந்த நாடகம் சிறப்பாயிருந்தது என்பதல்ல; அன்றைய தினம் அவனுக்கு அங்கே கிடைத்த பிரமாதமான வரவேற்பும், அளிக்கப்பட்ட கௌரவமுமே அவனை அவ்வாறு சொக்க வைத்து விட்டிருந்தது. அது என்ன நாடகம் என்பதோ, அதில் என்ன கதை இருந்தது என்பதோ, அதிலே நடித்தவர்கள் எப்படி நடித்தார்கள் என்பதோ அவனுக்கு இப்போது ஒன்றும் நினைவில்லை. நினைவிலே வைத்துக் கொள்ளும்படியாக அந்நாடகத்தில் எதுவும் இருந்ததாகவும் தோன்றவில்லை. ஒருகால் அவையெல்லாம் தன் புத்திக்கு எட்டாத பெரிய விஷயங்களாயிருக்கும் என்று எண்ணி விட்டு விட்டான். ஆனால் அந்த நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போது நடந்த சில சுவையான சம்பவங்களை மட்டும் அவனால் இன்னமும் மறக்க முடியவில்லை. அவற்றை அடிக்கடி நினைத்துத் தனக்குள் சிரித்துக் கொள்வான்.

ஆமாம்; அன்று ரட்சகன் தன் நடிக சகாக்களை முத்துசிவனுக்கு அறிமுகம் செய்து வைத்ததோடு முத்துசிவனை அழைத்து வந்து மேடைக்கு முன் வரிசையில் உட்கார வைத்து விட்டும் போனான்.

நாடகத்தில் ஒவ்வொரு காட்சி முடிந்து திரை விழும்போதெல்லாம் ரட்சகன் ஓடி வந்து, ''என்ன சார், சாப்பிடறீங்க? ஹாட் டிரிங்ஸ், ஆர் கூல் டிரிங்ஸ்?'' என்று பவ்யமாகக் குனிந்து கேட்பதும், அதற்கு இவன், ''ஒன்றும் வேண்டாம்!'' என்று சொல்வதும், அதை அவன் காதில் வாங்கிக் கொள்ளாமல் ஓடிப் போய் ஒரு தடவை காப்பி, இன்னொரு தடவை டீ, அடுத்த காட்சி முடிவில் ஃப்ரூட்ஸலிக், இன்னொரு காட்சி முடிவில் ஐஸ் க்ரீம் என்று கொண்டு வந்து கொடுப்பதுமாக நடத்திய உபசாரத்தால் திக்கித் திணறிப் போனான். இதோடு விட்டானா ரட்சகன்?

நாடகத்தின் கடைசிக் காட்சிக்கு முந்தைய காட்சி முடிந்ததும் கொட்டகையில் விளக்குப் போடப்பட்டன. நாடகத்தில் பங்கு பெற்ற அத்தனை நடிகர்களும் மேடையில் தோன்றி வரிசையாக நின்றார்கள். ரட்சகன் ஒரு ரோஜாப்பூ மாலையைக் கையில் வைத்துக் கொண்டு மைக்கின் முன் வந்து நின்று பேசினான்:

''மதிப்புக்குரிய ரசிகப் பெருமக்களே! கலாபிமானிகளே! இப்போது உங்கள் முன் நடைபெற்று உங்களின் அமோக பாராட்டுக்களைப் பெற்றுக் கொண்டிருக்கும் இந்தப் 'பகல் கொள்ளை' நாடகத்துக்குத் தலைமை தாங்க அன்புடன் இசைந்து வந்து இங்கே வீற்றிருக்கும் கலாரசிகர் உயர்திரு முத்துசிவனார் அவர்களுக்கு, ரசிகப் பெருமக்களாகிய உங்கள் சார்பிலும், எங்கள் நாகரத்தினம் நாடக மன்றத்தின் சார்பிலும் இந்த மலர் மாலையைப் பொன் மாலையாகச் சூட்டுகிறேன்!''

---

இந்த நவீனத்தில் வரும் வந்தனா என்னும் பாத்திரத்தையே இவ்விதழ் அட்டைப்படமாக்கித் தருகிறார் நமது ஓவியர் கல்பனா.

மேடையில் நின்ற நடிகர்களின் பலத்த கைதட்டலுடன், தபேலாக் காரரும் சேர்ந்து 'டம டமா' என்று ஒலியெழுப்ப, ரட்சகன் மேடையை விட்டுக் கம்பீரமாக இறங்கி வந்து முத்துசிவனுக்கு மாலை போட்டான்.

அதிர்ச்சியடைந்த நிலையில் வேர்த்து விறுவிறுத்துப் போன முத்துசிவனுக்கு ஒருகணம் ஒன்றுமே புரியவில்லை. வெட்கம் அவனைப் பிடுங்கித் தின்றது. 'என்ன, இந்தப் பயல் இப்படிப் பண்ணி விட்டானே!' என்று திகிலுடன் எண்ணியவாறு எழுந்து நிற்கவும் முடியாமல் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான். நாடகத்துக்குத் தலைமை தாங்குகிறவன் என்ற முறையில் தன்னை எங்கே மேடைக்கு வந்து இரண்டு வார்த்தை பேசும்படி கேட்டுத் தன் மானத்தை வாங்கி விடுவானோ என்ற பயம் வேறு அவனைப் பிடித்து உலுக்கியது. நல்ல வேளையாக அப்படி ஒன்றும் சொல்லாமல் மேடைக்கு ஓடி மறைந்து விட்டான் ரட்சகன்.

தியேட்டரில் விளக்குகள் அணைந்து நாடகத்தின் கடைசிக் காட்சி ஆரம்பமாகியது. முத்துசிவன் தன் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு மெல்லப் பின்னால் திரும்பிப் பார்த்தான். அவனுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகி விட்டன.

காரணம், அப்போது நாடகக் கொட்டகையில் ஒரு பத்துப் பன்னிரண்டு பேர்களே உட்கார்ந்திருந்தார்கள்!.... இவை தவிர இன்னொரு சம்பவமும் முத்துசிவனின் மனத்தில் பசுமையாய்ப் பதிந்து போயிருந்தது. அது ரட்சகனின் நாடக ஹீரோயினியான வந்தனாவை அறிமுகப்படுத்திக் கொண்ட சம்பவம்!

அவளை அவனால் மறக்கவே முடியவில்லை. அவளுடைய நினைவு வரும்போதெல்லாம் அவன் தன்னை மறந்த ஓர் இன்பச் சலசலப்பை அடையலானான்.

ஒரு விஷயத்தில் அவனுக்கு ரட்சகனின் மீது கொஞ்சம் கோபம் உண்டு. மற்ற நடிகர்களை யெல்லாம் பெயர், தொழில், குடும்ப அந்தஸ்து ஆகிய விவரங்களோடு அறிமுகப்படுத்திய ரட்சகன், அந்த வந்தனாவைப் பற்றி மட்டும் அவளது பெயரையும் நடிப்புத் திறமையையும் சொன்னதோடு நிறுத்திக் கொண்டானே என்ற கோபம்தான்!

'அவன் சொல்லாமல் விட்ட மற்ற விவரங்களை நானாவது அவனிடம் தனிமையில் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கலாமே!' என்று எண்ணி வருத்தப்பட்டான்.

'அவள் நன்கு படித்தவளாகவும், வசதியான குடும்பத்தில் பிறந்தவளாகவும், ஏதேனும் ஒரு பெரிய காரியாலயத்தில் கௌரவமான உத்தியோகம் பார்க்கிறவளாகவும்தான் இருப்பாள்! நாடகத்தில் நடிப்பது அவளுக்கு ஒரு 'ஹாபி'யாக இருக்கலாம்!' இப்படி அவனே ஊகித்துக் கொண்டதாலோ என்னவோ, அவளைப் பற்றிய நினைவு அடிக்கடி எழுந்து புதுமையானதொரு சீதள சுகத்தை அவனது நெஞ்சில் பூசியது. **(தொடரும்)**

---

## ஒரு டிக்கட்!



நான் கள்ளக்குறிச்சியிலிருந்து உளுந்தூர்ப்பேட்டை செல்லும் பஸ்ஸில் ஏறினேன். டிரைவர் பிரயாணிகள் கைகாட்டும் இடத்தையே 'ஸ்டாப்பிங்'காகக் கொண்டு ஒவ்வோர் இடத்திலும் நிறுத்தி பஸ்ஸில் உள்ளோரின் எரிச்சலைப் பெற்றுக் கொண்டிருந்தார். அதிலுள்ள சிலர் உளுந்தூர்ப்பேட்டைக்குச் சென்று அங்கிருந்து திருச்சி, மதுரை, தஞ்சாவூர் செல்லும் துரித வண்டிகளைப் பிடித்தாக வேண்டும்.

"டிரைவர் சார்! கொஞ்சம் சீக்கிரம் போனால் தேவலை.... நான் திருச்சி எக்ஸ்பிரஸைப் பிடித்தாக வேண்டும்."

"டிரைவர், எனக்குத் தஞ்சாவூர் வண்டியில் இடம் கிடைக்குமா?"

ஆளுக்கொருவராக அவ்வப்போது டிரைவரைக் குடைந்து கொண்டே வந்தார்கள்.

டிரைவர் அசைவதாகக் காணோம்.

"அதோ, ரெண்டு டிக்கெட் வருதப்பா....!" என்று பிரேக்கை அழுத்தி எல்லார் இதயங்களிலும் எரிச்சலை மூட்டிக் கொண்டிருந்தார்.

சுமார் பத்து மைல் தூரம் பஸ் சென்றிருக்கும். திடீரென்று ஒரு குலுக்கலுடன் நின்றது. உடனே டிரைவர், "அதோ, ஒரு டிக்கெட் வருதப்பா! ஏற்றிக் கொள்!" என்று கண்டக்டருக்கு ஜாடை காட்டினார் பெருமையாக.

ஆசாமி ஒருவன் ஓடி வருவது எனக்குத் தெரிந்தது. சரிதான், மறுபடியும் பஸ் கிளம்பப் பத்து நிமிஷமாவது ஆகும் என்று அலுப்புடன் கீழே இறங்க நினைத்தேன். நல்லபாகை ஆசாமி பஸ்ஸை நெருங்கிவிட்டான். டிரைவர் முகத்தில் அழகாகக் களையைப் பூசிவிட்டு அவன் சாலையைக் கடந்து எதிர்த் திசையில் ஓடத் தொடங்கினான். அவன் டிரைவர் எதிர்பார்த்தது போல் ஒரு 'டிக்கெட்' இல்லை என்பது தெளிவாகிவிட்டது. பஸ்ஸை அநாவசியமாக 'ஒரு டிக்கெட் வருது' என்று கூறி நிற்க வைத்த டிரைவரை எல்லோரும் சிரித்தபடியே நோக்கினார்கள்.

அப்புறம் கேட்பானேன்? காலதாமதமின்றி பஸ் குறித்த நேரத்தில் உளுந்தூர்ப்பேட்டையைச் சென்றடைந்தது.

- ஆர். ராஜகோபாலன்

# துணைக்கு வந்தவன்





'பூரணி'

"ஆங்" என்று கத்திய நளினா அப்படியே மயங்கிக் கீழே விழுந்து விட்டாள். துடித்து விட்டார் நாதன். பின்னே இருக்காதா? ஒரே பெண். அதுவும் அழகுப் போட்டியில் முதற்பரிசு பெற்று 'மிஸ்உலக'மாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவள் முடிவைக் கேட்டதும் மயங்கிவிழுந்தால் பொறுப்பாரா?

"தண்ணீர்! தண்ணீர்!" என்று பதறினார்.

"தண்ணீர் இல்லே. கோகோ கோலாவைத் தவிர வேறு எதுவும் கிடையாது" என்றார் ஒருவர்.

"கொண்டா ஐயா!" என்று வெடுக்கென்று பிடுங்கிய நாதன் 'பக்'கென்று மூடியை எடுத்து நளினாவின் முகத்தில் கொட்டப் போனார்.

"வேண்டாம்'பா. நானே குடித்து விடுகிறேன்" என்று கூறியபடி எழுந்து தந்தையின் கையில் இருந்த கோகோ கோலாவைக் குடிக்க ஆரம்பித்தாள் நளினா.

'முகத்தில் நீர் பட்டதும் மேக்கப் கலேயும், உண்மையான நிறத்தைக் காணலாம்' என்று நின்றவர்களின் முகத்தில் அசடு வழிந்தது. நாசூக்காக முகத்தைத் துடைத்தபடி, "அப்பா, நிஜமாகவா? நானா மிஸ் உலகம்?" என்று கேட்டாள் நளினா.

"நான்கூட அதாம்மா ஆச்சரியப்படறேன். உன்னைப் போய்த் தேர்ந்தெடுத்தார்களே? நம்ம கண் டாக்டர் சேஷனை கன்ஸல்ட் பண்ணச் சொல்லப் போகிறேன். அதுக்காகத்தான் ஜட்ஜுகளோட அட்ரெஸைக்கூட வாங்கிக் கொண்டிருக்கிறேன்" என்று நாதன் கூறியவுடன் 'ஆங்' என்று சிணுங்க ஆரம்பித்தாள் நளினா. "இல்லேம்மா! இல்லேம்மா. விளையாட்டுக்குச் சொன்னேம்மா" என்று கெஞ்ச ஆரம்பித்தார் நாதன்.

விமான நிலையத்துக்குள் தோழிகளும், பெற்றோரும் புடைசூழ நுழைந்த நளினாவுக்கு அப்போதுதான் உஷாவின் நினைவு வந்தது. அவளிடம் சொல்லிக் கொள்ளவேயில்லேயே தான் அமெரிக்காவும், பாரிசும் சுற்றப் போவதை!

பொது டெலிபோன் பூத்தை நோக்கி ஓடினாள் நளினா. அவள் அதனருகில் வரவும் அதன் கதவு திறந்து, ஒரு வாலிபன் வெளியே வரவும் சரியாக இருந்தது. அவளுக்கு வழி விடாமல் நின்றுகொண்டு அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் அவன். கோபத்துடன் நளினா முறைக்கவும் "ஸாரி" என்று சொல்லி விட்டு நகர்ந்தான்.

மீண்டும் தன்னை வழியனுப்ப வந்தவர்களுடன் கலந்து கொண்ட நளினாவை விமானடிக்கட்டைப் பரிசோதித்துக் கொள்ளும்படி அவசரப்படுத்தினார் நாதன். உடனே நளினா தகவல் நிலயத்தை அடைந்தாள். அப்போதுதான் ஏதோ விசாரித்து விட்டுத் திரும்பிய ஒரு வாலிபன் நளினாவைக் கண்டதும், "ரியலி. நீங்கள் மிகவும் அழகுதான்!" என்றான் ஆங்கிலத்தில். கோபத்துடன் நிமிர்ந்தாள் நளினா. அவனேதான்! டெலிபோன் பூத்தை மறைத்துக் கொண்டிருந்த ஆள்தான்!

அதன்பின் அவள் திரும்பும் இடமெல்லாம் அவன் நின்று கொண்டிருந்தான். கோபமான கோபம் நளினாவுக்கு.

தைரியமாகக் கிளம்பி விட்டாளே தவிர கிளம்பும் நேரம் நெருங்க நெருங்க மிகவும் பயமாகத்தான் இருந்தது. அப்பாவுக்கு லீவு கிடைத்திருந்தால் நிச்சயம் வந்திருப்பார்.

தைரியத்தைச் சேர்த்துக் கொண்டு சள சளவென்று பேச ஆரம்பித்தாள் நளினா. பல நாட்டு உடைகளில் தோழிமார் காட்சியளித்தார்கள்.

"ஏண்டி நளின்! ஃபாரின் போகும் போதுகூட இந்த 'சாரி'தானா? நல்ல சல்வார் கம்மீஸ் போடக் கூடாது?" என்று முகத்தைச் சுளித்தாள் அருணா.

தன்னையே ஒரு முறை பார்த்துக் கொண்டாள் நளினா. ராசிப் பட்டுப் புடவை காற்றில் சலசலத்தது.

"இல்லேயடி! இந்த அம்மாதான் இங்கிருந்து போகும் போதாவது புடவையே கட்டிக் கொள் என்று கழுத்தறுத்தாள். அவள் ஆசைக்காகத்தான் இது. இரண்டு டஜன் சல்வார் கம்மீஸ் தைத்து விட்டேன்" என்றாள் நளினா.

"தட் இஸ் குட்!" என்று சர்டிபிகேட் கொடுத்த விஜய், "ஏய்! பாரிசுக்குப் போகிறாய். தனியாகப் போகிறாயே என்றுதான் வருத்தமாக இருக்கிறது" என்று கவலையைக் காட்டினான்.

''ஆமாம், உன் பாரிஸ் விசிட்டை ஏன் நீ ஹனிமூனாக மாற்றிக் கொள்ளக் கூடாது?'' என்று 'ஐடியா' கொடுத்தான் சரோஜ்.

குபீரென்று சிரிப்பொலி கிளம்பியது.

விமானத்தில் ஏறும்படி அழைப்பு வந்துவிட்டது ஒலிபெருக்கியில்.

அவசரமாகத் தன் கையில் கோட்டை மடித்துப் போட்டபடி விமானத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தாள் நளினா.

ஜன்னலோர சீட்டில் அமர்ந்து வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த நளினா திரும்பிப் பார்த்தாள். பார்த்தவள் பார்த்துக் கொண்டே இருந்தாள்!

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? நான் அவ்வளவு அழகாகவா இருக்கிறேன்?'' என்ற குரலைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது நளினாவுக்கு.

அந்தக் குரல்! ஆ! நினைவுக்கு வந்து விட்டது. பம்பாய் விமான நிலையத்தில் காண்டீன், வெயிட்டிங் ரூம் என்று எங்கு போனாலும் விமான நிலையத்தைச் சுற்றும் விமானம் போலத் தன்னையே சுற்றியவன் அல்லவா? இங்கே எப்படி?

அவள் எண்ணத்தை அறிந்தவன் போல் ''ரியலி ஸ்பீக்கிங்! கோபத்திலும் நீங்கள் அழகாகத்தான் இருக்கிறீர்கள்!'' என்றான் அவன்.

''ஷட்டப் யுவர் மௌத்'' என்று எரிந்து விழுந்தாள் நளினா.

''ஹலோ ராஜ்! நல்ல கம்பெனி கிடைத்து விட்டது போலிருக்கிறது'' என்று குறும்பாகச் சிரித்துக் கொண்டு கேட்டபடியே நடந்தாள் விமானப் பணிப் பெண்! இங்கே எரிந்தது நளினாவுக்கு.

அமெரிக்க விமான நிலையத்தில் இறங்கும்போது 'அப்பாடா!' என்று இருந்தது நளினா



வுக்கு. அந்த 'ராஜ்' அழகன்தான். அதற்காக அவனைப் பிடிக்கிறது என்று சொல்லிவிட முடியுமா, என்ன?

அரை மணி நேரம் கண்களே தெரியவில்லை. அத்தனை பிளாஷ்! 'மிஸ் உலகம், மிஸ் உலகம்' என்று ஒரே முணுமுணுப்பு. யாரோ கையைப் பற்றி அழைத்துச் சென்றார்கள். ஐந்து நிமிடங்கள் கழித்துப் பார்த்தால் 'ராஜ்'! சட்டென்று உதறித் தன்னை விடுவித்துக் கொண்டாள் நளினா.

தனக்காக ஏற்பாடு செய்திருந்த ஹோட்டலுக்குச் சென்றதும் முதல் வேலையாகக் குளியலறையைத் தேடிச் சென்றாள் நளினா! அரை மணி ஆனந்தமாகக் குளித்த பின், எடுத்து வைத்திருந்த பிங்க் நிற சல்வார் கம்மீஸை எடுத்து அணிந்து கொண்டாள். அவளுக்குத்தான் எவ்வளவு அழகாக இருந்தது அந்த உடை! அப்பாடி! இங்காவது 'கருமம் கருமம்' என்று தலையில் அடித்துக் கொள்ளும் அம்மாவின் தொல்லை இல்லாமல் நிம்மதியாக இந்த உடையை அணியலாம். புடவையைத் தூக்கி அழுக்குப் பெட்டியில் போட்டாள் நளினா. இனி ஊருக்குப் போகும்போது புடவை கட்டிக் கொண்டால் போதும்.

டிபனை முடித்துக்கொண்டு அமர்ந்திருந்த நளினாவுக்குப் பத்திரிகை நிருபர்கள் பேட்டிக்காக இன்னும் அரை மணியில் வருகிறார்கள் என்ற செய்தி கிடைத்ததும் தூக்கிவாரிப் போட்டது.

''நிருபர்கள் என்றால் என்னவெல்லாமோ கேட்பார்களாமே! எப்படிப் பதில் சொல்லுவது?'' பயத்துடன் காத்திருந்தாள்.

சுமார் இருபதுக்கு மேல் காமிராக்கள் தன்மீது பளிச்சிட வரவேற்பறையை அடைந்த நளினா பேட்டிக்குத் தயாரானாள். அப்பாடி! எப்படிக் கேட்கிறார்கள்? 'நீங்கள் எப்படி அழகுப் போட்டியில் கலந்து கொண்டீர்கள்? இந்தியப் பெண்கள் என்றாலே அதுவும் தென்னிந்தியப் பெண்கள் பிற ஆண்களின் எதிரிலேயே வரமாட்டார்களாமே!' என்று கேள்விக் கணைகள் சரமாரியாக வந்தன. எதை எதையோ சொல்லிச் சமாளித்தாள் நளினா.

அப்போது ஒருவர் எழுந்து, ''உங்கள் காதலர் உங்களை வெளிநாடு செல்ல எப்படி அனுமதித்தார்?'' என்று கேட்டார்.

முகம் சிவந்துவிட்டது நளினாவுக்கு. ''எனக்குக் காதலரே கிடையாது'' என்று கூறுவதற்குள் திணறிவிட்டாள் திணறி.

''அது சரி. இந்தியாவிலிருந்து, அதுவும் தென்னிந்தியாவிலிருந்து வரும் நீங்கள், உங்கள் மரபுப்படி புடவை கட்டாமல், ஏன் இப்படி சல்வார் கம்மீஸ் போட்டுக் கொண்டுள்ளீர்கள்?'' என்ற கேள்வி எழுந்தது ஒரு மூலையிலிருந்து. குரலும் பழக்கப்பட்டதாக இருக்கவே, சட்டென்று பார்த்தாள். ராஜ்தான். கழுத்தில் காமிரா மாலையாகத் தொங்க, கையில் பென்சிலும், சிறு குறிப்புப் புத்தகமுமாக அவனைப் பார்த்ததும் என்ன செய்வதென்றே புரியவில்லை நளினாவுக்கு.

''யு மைண்ட் யுவர் ஓன் பிஸினஸ்'' என்று எரிந்து விழுந்தாள் நளினா.

''திஸ் இஸ் மை பிஸினஸ்'' என்ற ராஜ், தன் பாண்ட் பாக்கெட்டிலிருந்து ஒரு கார்டை எடுத்து நீட்டினான். இந்தியப் பத்திரிகை ஒன்றின் வெளிநாட்டு நிருபர் என்ற அந்த அத்

நாட்டியைக் கண்டதும் என்ன செய்வதென்றே புரியவில்லை நளினாவுக்கு.

''ஆமாம்! இவர்தான் எங்களுக்குக் கூட உங்கள் படத்தைத் தந்தார். எங்கள் நாட்டில் எல்லோரும் புடவையுடன் காணவே விரும்புகிறோம். இதோ பாருங்கள்'' என்று ஒரு பத்திரிகையை நீட்டினார் ஒரு நிருபர்.

முதல் நாள் பத்திரிகை அது. நளினாவின் முழு உருவப் படம் ஒன்று காட்சியளித்தது. பட்டுப் புடவையுடன், தலை நிறையப் பூ வைத்துக் குஞ்சலத்துடன் காணப்பட்டாள் அவள்! தூக்கி வாரிப் போட்டது. பி. யு. சி. சேரும்போது எடுத்த படம். சீ! எத்தனை கர்நாடகமான உடை! முகத்தைச் சுளித்தபடி தலைப்பைப் படித்தாள் நளினா. 'ஆறு கஜம் புடவை அணியும் இந்தியப் பெண்மணி உலக அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்' என்ற தலைப்பைக் கண்டாள்.

''நாங்கள் உங்களை இந்த உடையில் காணவே விரும்புகிறோம்'' என்றார் ஒருவர்.

'அப்பாடா!' என்று விடுபட்டு வரும்போது சாப்பாட்டு நேரம் வந்து விட்டது. டைனிங் ஹாலுக்கே போய்விட்டாள். 'மெனு'வைப் பார்த்ததும் குமட்டிக் கொண்டு வந்தது. சாண்ட்விச்சை மட்டும் ஆர்டர் செய்து விட்டு ஏதோ யோசனையுடன் மென்று கொண்டிருந்தாள். பக்கத்தில் யாரோ வரும் உணர்வு ஏற்படத் திரும்பிப் பார்த்தாள். ராஜு! 'ஹலோ!' என்று அழைக்கப் போனவள் பல்லைக் கடித்துக் கொண்டு திரும்பி விட்டாள். வேண்டுமென்றே உடையைப் பற்றிய கேள்வியை எழுப்பித் தன்னை அவமானப்படுத்தியவனாயிற்றே? டிபன் காரியரைப் பிரித்துக் கத்தரிக்காய் கறி, காலிபிளவர் சாம்பார், ரசம் என்று எடுத்து வைத்தவன் ''நீங்களும் வேண்டுமானால் சாப்பிடலாம். என் இந்திய நண்பர் வீட்டிலிருந்து வந்த சாப்பாடு'' என்றான். ''தேவையில்லை'' என்று முகத்தில் அடித்தாற் போல் பதில் சொன்னாள் நளினா. தோளைக் குலுக்கியபடி சாப்பிட ஆரம்பித்தான் அவன். வேண்டுமென்றே ரசத்தை உறிஞ்சி உறிஞ்சிக் குடித்தான். ஆத்திரமாக எழுந்தாள் நளினா. ''பக்கத்து அறைதான். உதவி தேவையானால் வரலாம்'' என்றான் அவன்.

அறைக்குள் நுழைந்ததும் செய்தி காத்திருந்தது நளினாவுக்கு. இரவு டெலிவிஷன் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதாம். அரை மணி நேரம் தூங்கி எழுந்தவளுக்குத் திடீரென நினைவு வந்தது. புடவை? சல்வார் கம்மீசுடன் போனால் கேள்வியாலேயே துளைத்து விடுவார்களே! அப்போதுதான் அம்மா சொன்னதைக் கேட்காத தவறு புரிந்தது. கொண்டு வந்த ஒரு புடவையும் அழுக்கு மூட்டையில் இருந்தது.

ராஜுவின் நினைவு வந்தது. 'தென்னிந்திய உணவு! யாரோ இந்தியர்கள் இருக்கிறார்கள். ஆபத்துக்குப் பாபமில்லை' என்று அவன் அறையை நாடி நடந்தாள். அறைக் கதவைத் திறந்ததுடனேயே ''எனக்கு நாலு புடவைகள் வேண்டும்!'' என்று கேட்டுவிட்டாள். அதற்கு மேல் அங்கே நிற்கவும் இல்லை. அரை மணியில் எங்கே சென்றானோ, எப்படிக் கிடைத்ததோ, ஆறு புடவைகளுடன் வந்துவிட்டான். ராஜுக்கு நன்றி கூறக்கூட இயலாமல் தொண்டை அடைத்தது. அவன் உள்ளத்தின் அழகால் உருவம் இன்னும் அழகானது போல் தோன்றியது.

மாலைப் பத்திரிகையைப் பார்த்த நளினா திடுக்கிட்டாள். விமானத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கிறாள் நளினா. அவளருகில் இடிப்பது போல் சிரித்துக் கொண்டு நிற்கிறான் ராஜு. கோபத்தில் பத்திரிகையைக் கிழித்துவிட்டாள்.

பிறகு அலங்காரம் செய்து கொள்ள ஆரம்பித்தாள். உடலைப் பிணிக்கும் கறுப்பு ஜாக்கெட், தங்க நிறப் புடவை, தலையைக்கூடக் கொண்டை போடாமல் சவுரி வைத்து நீளமாகப் பின்னியிருந்தாள். நிஜமாகவே அழகாகத்தான் இருந்தது!

வெளியே வந்ததும், ''நிஜமாகவே நீ இப்போது அழகாக இருக்கிறாய்'' என்ற குரலைக் கேட்டும், காதில் விழாததுபோல் நடந்தாள். ராஜுதான் கூறினான் என்றாலும் திரும்பினால் சிரித்துவிடுவோமோ என்ற பயம்தான் காரணம்.

டெலிவிஷன் அறைக்குள் நுழைந்தாள் நளினா. ''என் நெருங்கிய நண்பர். உங்கள் நாட்டைச் சேர்ந்தவர், பெயர் 'ராஜு' '' என்று அறிமுகப்படுத்தினார்கள் ராஜுவை. பேட்டியின்போதும் ராஜு கூடவே இருந்தான். அனுமதி பெற்றுள்ளான் என்று கூறி அவனை வெளியேற்ற மறுத்து விட்டார்கள்.

என்னென்னவோ கேள்வி கேட்டார்கள். அப்போதுதான் தன் நாட்டைப் பற்றித் தான் அறிந்தது கடுகளவுதான் என்ற உண்மை புலப்பட்டது நளினாவுக்கு.

''இந்தப் புடவையைக் கட்டுவது எப்படி? இதை அணிந்து காட்டுவீர்களா?'' என்ற கேள்வி எழுந்ததும் கூனிக் குறுகிவிட்டாள். ''ஓ! நோ...'' என்று அலறி விட்டாள். ராஜுதான் குறுக்கிட்டு ''தயவு செய்து வேறு கேள்வி கேளுங்கள்'' என்றதும் 'ஓ! சாரி' என்று மன்னிப்புக் கேட்டவர், ஒரு நிமிடம் யோசனை செய்து விட்டு, ''எவ்வளவு அழகான கூந்தல் உங்களுக்கு!'' என்று பாராட்டினார். தொடர்ந்துபின், ''எத்தனை நாட்களுக்கு ஒரு முறை நீங்கள் தலையலங்காரம் செய்வீர்கள்?'' என்று கேட்டார். குபீரென்று சிரித்துவிட்டாள் நளினா.

''நாள்தோறும்'' என்று சமாளித்துக் கொண்டு கூறியதும், ''உண்மையாகவா? அப்படியானால் குறைந்தது ஐந்து மணி நேரம் இதிலேயே போய்விடுமே!'' என்று வியப்புடன் கேட்டார்.

''இல்லை. பத்து நிமிஷம்தான் தேவை'' என்று நளினா கூறியும், ''எங்கள் நாட்டுப் பெண்களுக்கு 'பாப்' கூந்தலாக இருப்பதை அலங்கரிக்கவே ஐந்து மணி நேரமாகிறது. அப்படியிருக்க இவ்வளவு நீளமான கூந்தலுக்குப் பத்து நிமிடம்தானா ஆகும்?'' என்று ஒப்புக் கொள்ள மறுத்தார்.

''ஏன் மிஸ் நளினா, அவிழ்த்துப் பின்னியே காட்டி விடுங்களேன்!'' என்று குறுக்கே பாய்ந்தான் ராஜு. அவன் கண்களில் குறும்பு பளிச்சிட்டது. என்ன என்று புரியாமல் தன் தலைப் பின்னலை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள் நளினா. அப்போதுதான் புரிந்

தது. சவுரி! அவிழ்ந்தால் குட்டு வெளியாகி விடுமே! ஒரு நிமிடம் அழுகையே வந்து விட்டது. அதைக் கண்டுதானோ என்னவோ, ''முழுவதும்கூட அவிழ்க்க வேண்டாம். பாதிப் பின்னலிலிருந்து பின்னிக் காட்டினால் போதும்'' என்று அவனே பேசினான்.

அம்மாவின் நினைவு வந்தது நளினாவுக்கு. 'பாப்' செய்து கொள்ள வேண்டும் என்று துடித்தாள் நளினா. ஏனோ நாதன் அதற்கு மட்டும் சம்மதிக்கவில்லை. இப்போதுகூட வெளி நாடு கிளம்பும்போது அம்மா 'நளினா, எனக்கு ஒரே ஒரு வரம் தருகிறாயா?' என்று கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டாள். 'என்னம்மா?' என்று கொஞ்சினாள் நளினா. 'தலை முடியை வெட்டிக் கொள்வதில்லை என்று சத்தியம் செய்' என்றாள் அம்மா.

அப்பா கடகடவென்று சிரித்தார். ''நளினா! இப்படித்தான் நான் வேலை பார்க்க என்று கும்பகோணத்துக்குக் கிளம்பியபோது என் அப்பா, 'டேய், குடுமியை வெட்டிக் கிராப்பு வைத்துக் கொள்வதில்லை என்று சத்தியம் செய்து கொடடா' என்று சத்தியம் கேட்டார். இப்போது காலம் மாறி விட்டது. அம்மா பெண்ணைப் பின்னலை வெட்டி விட்டு 'பாப்' வைத்துக் கொள்ளாதே' என்று சத்தியம் கேட்கிறாள்!' என்று வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரித்தார். கூடவே சேர்ந்து நளினாவும் எப்படிச் சிரித்தாள்!

இன்று என்னடா என்றால் பின்னலை அப்படிப் புகழுகிறார்கள். கண்களில் பெருமையால் நீர்வடிந்து விட்டது நளினாவுக்கு.

அதன் பிறகு எங்கு போனாலும் அவள் கண் படும் தூரத்தில் ராஜ் இருந்தான். அவளும் அவனைப் பொருட்படுத்த வில்லை.




நயாகராவைக் காணக் கிளம்பிவிட்டான் நளினா. ஏனோ மனம் வேதனைப்பட்டது. 'ராஜை விட்டுப் பிரியும் வருத்தம்' என்பதை ஒப்புக்கொள்ள அவள் தயாராக இல்லை. சமாளித்துக் கொண்டு கிளம்பி விட்டாள்.

அம்மாடி! எத்தனை பெரிய நீர் வீழ்ச்சி! இமயத்தின் காலடியில் நிற்பது போன்றிருந்தது அவளுக்கு. அந்த வெண்மை ஒரு நிம்மதியை மனத்தில் உண்டாக்கியது. திடீரென்று ஒரு பயமும் வந்தது அவளுக்கு. அதிகமான அந்த வெண்மை ஏதோ ஒரு பக்தியை, பயத்தை அவள் உள்ளத்தில் ஏற்படுத்தி விட்டது! 'ராஜ்'கூட இப்படித்தான். எத்தனை தூய உள்ளம் அவருக்கு!' பார்த்துக் கொண்டு இருக்கும்போதே தலையைச் சுற்றியது அவளுக்கு. 'அம்மா!' என்று அலறிக் கீழே சாய்ந்தாள்;

அரை மணி நேரம் கழித்து விழிப்பு வந்த போது அவள் கண்களில் முதலில் பட்டது ராஜின் முகம்தான். ஒருவேளை நினைத்துக் கொண்டே மயக்கம் அடைந்ததால் இப்போதும் அப்படிப் பிரமை ஏற்படுகிறதோ என்று எண்ணத்தில் பார்த்தபடியே இருந்தாள். இல்லை. உண்மைதான். அவனேதான். அப்பா! அந்தக் கண்களில்தான் எத்தனை ஆசை! அன்பு! கவலை!

மெல்ல மெல்ல இதழ்கள் பிரிந்தன: முகம் மலரச் சிரித்தாள் நளினா. அவன் மடியில் படுத்துக் கொண்டு, அவனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருப்பது வெட்கமாக இருந்தது நளினாவுக்கு. முகத்தைத் திருப்பிக்கொண்டாள். 'சுரீர்' என்று நெற்றியை வலித்தது. ''மெள்ள, மெள்ள'' என்று தலையைப் பிடித்துக்கொண்டான் ராஜ். ''கீழே விழுந்த போது உங்கள் காமிராக் கண்ணாடி உடைந்து நெற்றியில் காயம் பட்டு விட்டது. நான்தான் கிழித்துத் துணியால் கட்டுப் போட்டேன் — உங்கள் புடவையால்!'' என்றான் ராஜ். காமிரா உடைந்து காயம் வருமா? வந்திருக்கிறதே!

அவன் தோளை ஆதரவாகப்பிடித்துக்கொண்டு தன் அறையை அடைந்தாள் நளினா. அன்று பகல் முழுதும் அவன் செய்த உபசாரங்கள் அனைத்தையும் ஏற்றுக் கொண்டாள். அவளுக்குத்தான் வலி பொறுக்க முடியவில்லையே! அவன் அருகில் இருக்கவேண்டும் என்பதற்காகவே வலி உள்ளதுபோல் பாவனை செய்கிறோமோ என்ற பயமும் அவள் உள்ளத்தில் இருக்கத்தான் இருந்தது.

ஆனால் மாலைப் பத்திரிகையைப் பார்த்ததும் நிலைமை அப்படியே மாறி விட்டது. வாங்கும் போதும், பிரிக்கும்போதும் ஆசையுடன்தான் இருந்தாள். அந்தப் படத்தைப் பார்த்த பின்பும் கோபமே வரவில்லை. நீர்வீழ்ச்சியின் பின்னணியில் ராஜ் உட்கார்ந்திருக்கிறான். அவன் மடியில் தலை வைத்துப் படுத்திருக்கிறாள் நளினா. அவன் கண்களில் தான் என்ன ஆசை! எத்தனை கவலை! வெட்கத்துடன் பார்த்தபடியே இருந்த நளினாவின் கண்களில் படத்தின் தலைப்புப் பட்டதோ இல்லையோ, காளியாகி விட்டாள். ''மிஸ் உலகம் நளினாவும், காதலரும் நயாகராவில்' என்று எழுதியிருந்ததைக் கண்டதும் ஒரே கோபம். பத்திரிகையை ராஜின் முகத்தில் விசிறி அடித்தாள். கண்டபடி கத்தினாள். 'உண்மையாகவே எனக்கு எதுவும் தெரியாது' என்று கெஞ்சினான் ராஜ். நம்பவேயில்லை நளினா; அவனே கொடுத்த படம் என்று சாடி






விட்டாள் சாடி? கடைசியில் ''என் கண் முன் நிற்காதீர்கள்... இல்லை.. நான் இந்த நாட்டை விட்டுப் போய் விடுகிறேன்'' என்று அழுது விட்டாள். அவன்தான் ''நானே போகிறேன்'' என்று போய்விட்டான்.

வெறிச்சென்று இருந்தது நளினாவுக்கு. எதிலும் உற்சாகமே இல்லை. எல்லாம் வழக்கப்படிதானே நடக்கின்றன. ராஜ் இல்லாததனாலே இந்த வெறுமை. அவள் கவலையை அப்பாவின் கடிதம் அதிகமாக்கிவிட்டது. 'ஏய் குட்டி, எப்படி இருக்கிறது நயாகரா! இனி எனக்கு உன்னைப் பற்றிப் பயமில்லை. இப்போதுதான் எனக்கே விஷயம் தெரியும். உன்னை உலகம் சுற்ற அனுப்பிய கம்பெனியே துணைக்கும் ஒருவரை அனுப்பியிருக்கிறதாமே? அவர்கள்தான் பத்துக் கம்பெனி நடத்துகிறார்களே! அதில் ஒன்றான பத்திரிகையின் நிருபர் என்ற முறையில் உன் நிழலாக அவன் இருப்பானாம். நீ பட்டத்தை வேண்டாம் என்று உதறாமல் காக்கவே இந்த ஏற்பாடாம்! முன்பு அப்படி ஏதோ நடந்ததாமே. தவிர, அவன் யார் தெரியுமா? உன் அம்மாவின் மாமா பையன் கணேச சுந்தரராஜன்தானாம். எல்லாம் தெரிந்தும் ஊமையாக இருந்திருக்கிறாள் உன் அம்மா! அதனால் தைரியமாக இரு. அவனை உனக்குப் பிடித்திருந்தால் இங்கு வந்ததும் — ஆமாம் வந்ததும்தான் அங்கேயே அல்ல — திருமணம்தானாம்! அம்மா சொல்லி விட்டாள்.' என்று கடிதத்தைப் படித்ததும் ஆகாயத்தில் பறப்பது போலிருந்தது நளினாவுக்கு.

அதே சமயத்தில் டெலிபோன் அடித்தது. எழக்கூட எண்ணமின்றி உட்கார்ந்திருந்தவள் விடாது டெலிபோன் அடிக்கவே போய் எடுத்தாள். ''ஹலோ! நான்தான் ராஜ்! இப்போது சுகமாக இருக்கிறீர்களல்லவா? உங்கள் வேண்டுகோளுக்காக நாட்டை விட்டுப் போய்விட்டேன். ஆனால் உங்களைப் பற்றிக் கவலையை விட முடியவில்லை'' என்றான்.

தொண்டையை அடைத்துக் கொண்டது நளினாவுக்கு. அழுகை அழுகையாக வந்தது. ''என்மீது உண்மையான அன்பிருந்தால் நான் சொன்னதும் என்னை விட்டு விட்டுப் போவீர்களா?'' என்று அழ ஆரம்பித்தாள்.

''ஏய்! என்ன சொல்கிறாய்?''

''ஆமாம். உங்களைப் பற்றி 'எல்லாம்' தெரிந்து விட்டது. அப்பா கடிதம் போட்டிருக்கிறார்.''

'' 'எல்லாமா?' உண்மையாகவா?''

''ஆமாம். எல்லாம் தான். உடனே வாருங்கள்.''

''இதோ வருகிறேன்'' என்றான் ராஜ்.

''என்ன 'இதோ?' எப்படி இப்போதே வர முடியும்?''

''நயாகரா பாதி அமெரிக்காவிலும் பாதி கனடாவிலும் இருக்கிறது தெரியுமா? நான் கனடா பகுதியில்தான் இருக்கிறேன். உன்னைக் கண்ணால் பார்த்துக் கொண்டே தான் இருக்கிறேன்'' என்று சிரித்தான் ராஜ்.

''என்ன குறும்பு!'' என்று சிரித்தாள் நளினாவும்.

அதன் பின் இருவருமாக பாரிஸுக்குப் போனதும், அந்த இரவு கிளப்பில் நளினாவைப் பரத நாட்டியம் ஆடும்படி கேட்டதும், அவள் 'ஙே' என்று விழி விழி என்று விழித்ததும் பின் ராஜ் டேப் செய்து கொண்டு வந்திருந்த சிவாஜி — சாவித்திரியின் 'சத்தியவான் சாவித்திரி' தெருக்கூத்தைப் போட்டு 'பரதத்தை விடப் பழைமையான தென்னகக் கலை' என்று கூறி ஆடியதும், அம்மக்களுக்கு அது பிடித்துப் போய்த் திருப்பித் திருப்பி 'ஒன்ஸ்மோர்' கேட்டு ஏழு எட்டு முறை நடித்ததும் தனிக் கதை.

ஃ ஃ ஃ

இப்போது நாதன் இந்தியாவில் பத்திரிகை அடித்து, பந்தலும் போட்டு அவர்கள் வரவுக்காகக் காத்திருக்கிறார். எனக்கு அழைப்பு உண்டு. நான் கண்டிப்பாகப் போவேன். நீங்கள்? ■

# எவராலும் நெருங்கமுடியாத முதலிடம்




- ★ கச்சிதமான நயம்
- ★ ஒப்பற்ற சுவை
- ★ முரமுரப்பான புதுமை
- ★ ஈடிணையற்ற போஷாக்கு




## க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

# அண்ணலின் வாழ்விலே

சேவாகிராமம் என்ற சின்னஞ்சிறு கிராமம் இப்போது உலகப் புகழ்பெற்ற புனிதத் தலமாக விளங்குகிறது. வர்தாவிலிருந்து பதினொரு மைலுக்கு அப்பால் இருக்கிறது இது. 1935ஆம் ஆண்டு காந்தி இங்கு புகுந்தார். அப்போது அவருடன் ஹரிஜன இளைஞன் ஒருவனும் இருந்தான்.

ஒரு நாள் உள்ளூர்ப் பிரமுகர் ஒருவர் காந்தியைக் காண வந்தார். காந்தி அவரைப் பார்த்ததும், "ஆ, பயல், நான் இங்கு வந்து மூன்று மாதங்களாகி விட்டன. நாவிதருடைய உதவி இன்னும் எனக்குக் கிடைக்கவில்லை. கிடைக்கவே கிடைக்காதா?" என்று கேட்டார்.

"பாபு! தங்களுக்கு வேலை செய்ய அவன் எப்போதும் சித்தமாகவே இருக்கிறான்; அனுப்பட்டுமா?" என்றார் பிரமுகர்.



# ஏழு கோடிப் புதல்வர்கள்

"ஆனால், என் ஹரிஜன மைந்தன் விஷயம் என்ன ஆவது? நாவிதர் அவனுக்கு வேலை செய்ய மறுக்கும் போது நான் மட்டும் எப்படி அவரிடம் வேலை செய்து கொள்வது என்னுடைய நிலைமையில் தாங்கள் இருந்தால் என்ன செய்வீர்கள்? சொல்லுங்கள்."

வந்தவர் பதில் சொல்ல முடியாமல் திண்டாடிப் போனார். அவரை வழிக்குக் கொண்டு வந்தார் காந்தி. அவரை மட்டுமா? பாரத நாடு முழுவதையும் தம் வழிக்குக் கொண்டு வந்தார் அவர். தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஏழு கோடி மக்களையும் இந்து சமூகம் உடன் பிறந்தவர்களாய் ஏற்றுக் கொள்ளும்படி செய்தார்.

தீண்டாமை எத்தனையோ பல ஆண்டுகளாய் இந்து மதத்துக்கு ஒரு பெரும் களங்கமாக இருந்து வந்தது. அவ்வப்போது ஒரு சிலர் இதை ஒழிக்க முயன்றார்கள். ஆனால் காந்தியின் காலத்தில்தான் இதன் ஆணிவேர் ஆட்டம் கண்டு, மரமும் உலரத் தொடங்கிற்று. அவர் பெயர் நிலைநிற்பதற்கு இந்த அரும் பணி ஒன்றே போதும். "மனித நினைவுக்குத் தெரிந்த வரை, வேறு எந்த முனிவராவது, அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களின் துயரைக் குறைத்து அவர்கள் மறுபடியும் தங்கள் சுயமதிப்பைப் பெறுவதற்கு இதைவிட அதிகமாய்ச் செய்ததுண்டா?" என்று கேட்கிறார் ஹெச்.என். பிரெய்ல்ஸ்போர்ட் என்னும் புகழ் பெற்ற எழுத்தாளர்.

தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்ற எண்ணம் காந்திக்கு எப்போது உண்டாயிற்று? எப்படி அதை ஒழித்தார்? சற்று ஆராய்வோம்.

காந்தி சிறுவனாயிருந்த போது, தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த ஒரு சிறுவனுடன் அடிக்கடி விளையாடி வந்தார். ஒருநாள் அவருடைய அன்னை அதைக் கண்டார். "நீ அவனைத் தொட்டாயா?" என்று கேட்டார். "ஆம்" என்றார் காந்தி. "அப்படியானால், இப்போதே போய்க் குளித்துவிட்டு வா" என்றார் தாயார். புதல்வர் குளித்து விட்டு வந்தார். "இனிமேல் அவனை நீ தொடக் கூடாது" என்றார் அன்னை. காந்தி சிரித்தார். தாயின் சொல்லை ஒரு போதும் மீறாதவர் அவர். ஆனால் இதை மட்டும் ஏற்றுக் கொள்ள அவர் உள்ளம் தயங்கிற்று. "ஏன் தொடக் கூடாது?" என்று எதிர்த்துக் கேட்டார். இதைப் பற்றிப் பிற்காலத்தில் அவர் எழுதும்போது, "அன்று முதல் தீண்டாமை எதிர்ப்பு உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று" என்று கூறியுள்ளார். நாளுக்கு நாள் அது வளர்ந்து உறுதியடைந்தது.



தீண்டாமையை ஒழிப்பதற்குக் காந்தி அனுபவித்த கஷ்டங்கள் கொஞ்சமா?

அன்பின் மூலம் மக்களைத் தம் வழிக்குத் திருப்ப அவர் உறுதி பூண்டார். மூடநம்பிக்கை மிகுதியாயிருந்த காலம் அது. வைதிக எதிர்ப்பும் கடுமையாயிருந்தது.

ஒரு ஹரிஜனக் குடும்பம் அவருடன் சபர்மதி ஆசிரமத்தில் வாழ விரும்பிற்று. காந்தி அதற்கு இசைந்தார். ஆனால், ஆசிரமத்துக்குப் பண உதவி செய்து வந்த செல்வர்கள் இதை எதிர்த்தார்கள். பண உதவியையும் நிறுத்தி விட்டார்கள். இதனால் நிலைமை கஷ்டமாயிற்று. ஆனால் காந்தி கலங்கவில்லை. ஒரு நாள் எதிர்பாராத விதமாய் முன்பின் தெரியாத ஓர் அன்பர் தாமே வலிய அங்கு சென்று, ஒரு பெருந்தொகையைக் காந்தியிடம் கொடுத்து விட்டுப் போனார். பணக் கஷ்டம் நீங்கிற்று.

மற்றொரு முறை, ஒரு ஹரிஜன இளைஞனுக்குத் தொண்டு செய்ய மறுத்ததற்காகத் தம் அருமை மனைவியை நள்ளிரவில் வீட்டை விட்டுத் துரத்தவும் அவர் தயங்கவில்லை.

'சபரிராஜன்'

காந்திஜி புனாவில் எரவாடா சிறையில் இருந்த சமயம். ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதியளித்து, அவர்களை இந்து சமூகத்திலிருந்து பிரித்து ஒதுக்கும் வகுப்புத் தீர்ப்பு (Communal Award) என்னும் முடிவை பிரிட்டிஷ் அரசினர் அப்போது வெளியிட்டார்கள். காந்திக்கு இது தெரிந்தது. பிரிட்டிஷ் அரசினரின் சூழ்ச்சியால் இந்து சமூகம் சிதறுண்டு போய்விடுமென்று அவர் அஞ்சினார். ஆகவே, அம்முடிவை எதிர்த்துச் சாகும் வரை உண்ணா நோன்பு தொடங்கினார் காந்தி. தீண்டாமை என்னும் மாசை இந்து சமூகத் தலைவர்கள் அகற்ற வேண்டுமென்பதற்காகவும், அவர் இவ்விரதம் பூண்டார். இச்செய்தி, செய்தித் தாள்களில் பெரிய எழுத்தில் வெளியாயிற்று. மக்கள் திடுக்கிட்டார்கள். பலர் திகில் அடைந்தார்கள். நாடெங்கும் ஊர்வலங்களும், பொதுக் கூட்டங்களும் நடந்தன. பிரிட்டிஷ் அரசினருக்குத் தந்தி மேல் தந்தி பறந்தது.

ஹரிஜனத் தலைவர் டாக்டர் அம்பேத்கருடன் இந்துத் தலைவர்கள் பலர் கலந்து பேசினார்கள். அம்பேத்கருடைய உள்ளத்தில் வெறுப்பும் பகைமையும் நிறைந்திருந்தன. அவர் எளிதில் வழிக்கு வரவில்லை. ஒன்றன் பின்னொன்றாய் ஐந்து நாட்கள் கழிந்தன.

காந்தியின் உடல் நிலைமை கவலைக்கு இடமாயிற்று. டாக்டர் கில்டர் என்னும் புகழ்பெற்ற டாக்டர் பம்பாயிலிருந்து வந்தார். காந்தியின் உடல் நிலைமையைப் பரிசோதித்துவிட்டு, ''எந்த வினாடியும் உயிர் போகலாம்; நிலைமை அபாயம்'' என்றார்.

என்ன செய்வது? யாருக்கும் புரியவில்லை.

இந்தச் சமயத்தில் இராஜாஜிக்கு ஒரு யோசனை புலப்பட்டது. அவர் காந்தியிடம் எதுவும் கூறாமல் டாக்டர் அம்பேத்கருடன் கலந்து பேசினார். இருவரும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதை காந்தியிடம் விளக்கிக் கூறினார் இராஜாஜி. ''மெத்த நன்றாயிருக்கிறது'' என்றார் காந்திஜி. அப்போது அவருக்கு அரை மயக்கம்.

இந்துத் தலைவர்களும் ஹரிஜனத் தலைவர்களும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்கள். இதுவே புகழ்பெற்ற புனா ஒப்பந்தமாகும். இதன் முக்கிய அம்சங்களாவன: 1. ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதி இராது. ஆனால் மக்கட் தொகைக்கேற்ப, அவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்படும். 2. அவர்கள் தங்களுக்குள் பூர்வாங்கத் தேர்தல் நடத்தி நான்கு பேரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பிறகு, அந்த நான்கு பேருக்குள் ஒருவரை ஹரிஜனங்கள், சாதி இந்துக்கள் எல்லோருமே சேர்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஒப்பந்தம் ஏற்பட்ட பிறகாவது காந்தி உண்ணா நோன்பை நிறுத்தினாரா? இல்லை. ''பிரிட்டிஷ் அரசினர் இதை ஏற்க வேண்டாமா? வகுப்புத் தீர்ப்பை மாற்றிவிட்டதாக அவர்கள் அறிவிக்கட்டும்'' என்றார்.

உடனே ஒப்பந்தத்தின் வாசகம் இலண்டனுக்குத் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. அன்று ஞாயிற்றுக்கிழமை. விடுமுறை நாள். மந்திரிகள் யாரும் தலைநகரில் இல்லை. பிரதம மந்திரி மாக்டனால்ட் ஓர் சமச் சடங்குக்காக வெளியூர் போயிருந்தார். ஆனால் ஒப்பந்தம் ஏற்பட்ட செய்தி அறிந்ததும் தலைநகருக்கு வந்தார். மற்ற மந்திரிகள் சிலரும் வந்தார்கள். இரவு நெடு நேரம் வரை ஒப்பந்தத்தை ஊன்றி ஊன்றிப் படித்தார்கள். முடிவில் அதை ஏற்றுக் கொண்டதாய் அறிவித்தார்கள். தலைவர்களுக்கு அப்போதுதான் உயிர் வந்தது.

தாகூர், படேல், மகாதேவ தேசாய், சரோஜினி தேவி முதலியோர் காந்தியைச் சூழ்ந்திருந்தார்கள். கஸ்தூரி அன்னை ஒரு தம்ளர் ஆரஞ்சுச் சாற்றை காந்தியிடம் அளித்தார். காந்தி அதை வாங்கிப் பருகினார்.

இவ்விதமாய், வரலாற்றில் என்றென்றும் இடம் பெற்று விளங்கத்தக்க ஒரு நிகழ்ச்சி முடிந்தது.

எலும்பும் தோலுமாயிருந்த ஒரு மனிதர், சிறையில் இருந்தபடியே, சத்தியாக்கிரக வலிமை மூலம், ஒரு மாபெரும் அரசு செய்த முடிவை மாற்றும்படி செய்தார். இதற்கு ஈடு இணை எங்காவது உண்டா?

அம்மட்டோ?

காந்தி தம் உண்ணா நோன்பின் மூலம் இந்துக்களுடைய உள்ளங்களில் ஒரு பெரும் புயலையும் கொந்தளிப்பையும் உண்டாக்கினார். முதன் முதலாய் அவர்கள் சிந்தித்தார்கள். முதன் முதலாய் அவர்கள் கண்கள் திறந்தன. மனித குலத்தவரில் ஒரு பகுதியினருக்குப் பல்லாயிரம் ஆண்டுகளாய் இழைக்கப்பட்டு வந்த அநீதியையும், கொடுமையையும் கண்டார்கள். இது மற்றொரு வெற்றியாகும்.

இதன்பின் காந்தி தாழ்த்தப்பட்டவர்களின் தொண்டில் மிகுதியாய் ஈடுபட்டார்.

நாடு முழுதும் சுற்றினார். தீண்டாமையை ஏன் ஒழிக்க வேண்டும் என்பதை மக்களிடம் கூறினார். 'மக்கள் தாழ்த்தப்பட்டவர்களாய் வாழ்வதை விட இந்து மதம் அழிந்து போவதை நான் விரும்புவேன்' என்றார். ''நான் மறுபடியும் பிறக்க விரும்பவில்லை. ஆனால் அவ்விதம் பிறக்கும்படி நேர்ந்தால், தாழ்த்தப்பட்ட மக்களுள் ஒருவராய்ப் பிறக்கவே விரும்புவேன். இதனால் அவர்களுடைய இன்னல்களில் நான் பங்கு கொள்ள முடியும்'' என்று உருக்கமாய்க் கூறினார். ஹரிஜன சேவா சங்கம் ஏற்படுத்தி, நன்கொடைகள் மூலம் ஹரிஜனங்களுக்கு ஆங்காங்கே பல பள்ளிகள் வைக்கப்பட்டன. வேறு பல நல்ல பணிகளையும் அச்சங்கம் செய்து வந்தது.

ஒரு முறை தொழிலதிபர் பிர்லா, காந்தியிடம் ஒரு கேள்வி கேட்டார்: ''தாங்கள் நாட்டுக்காக எத்தனையோ தொண்டாற்றியிருக்கிறீர்கள். அவற்றுள் எதை மேலானதென்று நினைக்கிறீர்கள்?''

கேள்வியைக் கேட்ட அவருக்கு உடனே ஓர் ஐயமும் உண்டாயிற்று. கடலைப் பார்த்து, ''எந்த நீர்த் துளி உன்னை இவ்வடிவமாக்கிற்று?'' என்று கேட்டால் அது என்ன பதில் சொல்ல முடியும்? அதைப் போலத்தானே இதுவும். ஆனால், காந்தி தயங்கவில்லை. பதில் சொன்னார்: ''கதரும் தீண்டாமை ஒழிப்பும்தான்.''







# ஷாலிமார்
# க்ளுகோஸ்
# பிஸ்கட்டுகள்

புதுமை குன்றாமல்
இருக்க இப்பொழுது
அலுமினியம்
ரேக்குகளில் பேக்
செய்யப்படுகிறது



ஷாலிமாரின் புஷ்டிமிக்க
புதிய க்ளுகோஸ் பிஸ்கட்டுகளை
உண்டு இன்புறுங்கள்.
அவை புரதங்களும், வைட்ட
மின்களும் நிரம்பியவை; என்றும்
புதுமை குன்றாமல்
இருப்பதற்கென, அலுமினியம்
ரேக்குகளில் பேக்
செய்யப்படுகின்றன.

இரண்டு சைஸ்களில்
கிடைக்கின்றன.

ஷாலிமாரின் ஐதராபாத்
தொழிற்சாலையின் தயாரிப்பு

ஷாலிமார் பிஸ்கட்ஸ் ப்ரை. லிட்.,
பம்பாய்-ஐதராபாத்



SB 87T

டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சென்னை : பிரமேஷ் குமார் ஏஜன்ஸீஸ், சென்னை-6 ○ கோயமுத்தூர் & நீலகிரிக்கு: ஆர். சந்திரசேகரன் & சன்., கோயமுத்தூர்-2 ○ மதுரை : எஸ்ரா. ஏ. பாலகிருஷ்ண செட்டி & கோ., மதுரை-1 ○ திருநெல்வேலி & கன்யாகுமரி: தாஜ் ஹோட்டல் & ஸ்டோர்ஸ், திருநெல்வேலி ○ திருச்சிராப்பள்ளி: ராஜன் ஸ்டோர்ஸ், திருச்சிராப்பள்ளி-2 ○ சேலம்: வி. எஸ். ராமநாதன் செட்டியார், சேலம்

# தொழில் தொழில் தொழில் தொழில்

**மந்த நிலையைச் சமாளிக்க தொழில் நுட்பம் தேவைப்படுகிறது**

எமது தொழிலிலும் மந்த நிலை கடுமையாகத்தான் இருக்கிறது. நாங்களும் மந்த நிலையை எப்படி சமாளித்து நிலைபெறச் செய்கிறது என்று கவலைப்படலாம். ஆனால் இண்டியன் ஆக்ஸிஜன் ஸ்தாபனத்தில் அப்படி ஓய்ந்துவிடுவது பழக்கமில்லை. தொழிலில் மந்த நிலை என்றாலே அதை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு விடுவோம். நாங்கள் இந்நிலையை சமாளிக்கும் முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுவோம்.

உதாரணமாக எமது மார்கெடிங் பிரிவில் தென் கிழக்கு மற்றும் மேற்கு ஆசிய நாடுகளிலும் ஆப்பிரிகாவிலும் ஏற்றுமதி செய்வதை மேன்மேலும் அதிகரிக்க ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்தி வருகிறோம்.

எமது என்ஜினியர்களும் விஞ்ஞானிகளும் விரிவான ஆராய்ச்சியின் மூலம் சிறப்பு மிக்க அநேக புதிய தயாரிப்புகளை உருவாக்கி அந்நிய செலாவணியை நிறைய சேமிக்க முயற்சித்து வருகிறார்கள். சென்ற ஆண்டில் மட்டுமே இறக்குமதி செய்யப்படவேண்டிய அநேக பொருள்களை இங்கேயே உற்பத்தி செய்து ரு. 36 லட்சத்திற்கு அதிகமான அந்நிய செலாவணியை மிச்சமாக்கியிருக்கிறோம். தொழில் துறைகளுக்காக இந்நாட்டு மூலப் பொருள்களைக் கொண்டே இண்டியன் ஆக்ஸிஜன் முதன் முறையாகத் தயாரித்து வழங்கிய புத்தம் புதிய தயாரிப்பு வெல்டிங் வேலைக்காகவுள்ள இண்டார்க ஐஎம்ஆர் 300 செலேனியம் ரெக்டிபையர் செட், இண்டார்க் ஸப்மர்ஜ்ட் ஆர்க் வெல்டிங் வயர் மற்றும் ப்ளூனார்க்/ஸிஓ2 ஆடொமாடிக் ஆர்க் வெல்டிங் வேலைக்கான தொடர்பான கவச முன்ன எலக்டிரோடு முதலியவை.

இந்தியத் தொழில்களில் உற்பத்தியை அதிகரிக்கவும், தயாரிப்பு நுட்பங்களை அபிவிருத்தி செய்யவும் சிறப்பாக உதவும் வகையில் ஆக்ஸிஜன், நைட்ரோஜன் மற்றும் இதர வாயுக்களுக்கு புதிய உபயோக முறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இன்னும் அநேக துறைகளில் புதிய சிருஷ்டிகள் தொழில் திறமையை விருத்தி செய்து, தொழில் மந்தத்தின் விளைவுகளை ஜயிக்க உதவுகின்றன.

இந்தியப் பொருளாதாரத்திற்கு சேவை புரிவதில் அநேக மார்க்கங்கள் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. இண்டியன் ஆக்ஸிஜன் தன்னுடைய எதிர்கால வளர்ச்சியில் மட்டுமின்றி நாட்டின் எதிர்கால மேன்மையிலும் நம்பிக்கை வைத்திருக்கின்றது.

**IOL இண்டியன் ஆக்ஸிஜன் லிமிடெட்**

IOC-149 TAM

## ஒரு சிக்கலான கதை!

சிக்கல் சிங்கார வேலரை அறிவோம். ஆனால் இதில் சிக்கல் என்ன? இது பற்றி ஒரு புராணக் கதை. இறைவனின் கடுஞ் சாபத்தால் அழகு பொலிவும் நல்லைத் திருமகத்தை இழந்து புலியின் கோர முகம் கொண்டு துயருற்ற தெய்வப் பசுவான காமதேனு தன்னுடைய சாபம் நீங்க நாளில் பெருகும் சுற்றித் திரிந்து ஒரு தலத்துக்கு வந்தது. இங்கு சாப விமோசனம் கிடைக்கும் என அறிந்து



வறண்டு கிடந்த குளத்தைத் தன்னுடைய தெய்வீகப் பாலால் நிரப்பியது. வசிட்ட முனிவர் இப்பாலாவியில் திரண்ட வெண்ணெயை லிங்கமாக அமைத்துப் பூஜித்துப் பின்னர் அதனை மீண்டும் பாலாவியில் சேர்த்துவிட எண்ணிய போது சிவபெருமான் வராது இங்கேயே சிக்கிக்கொண்ட காரணத்தால் சிக்கல் என்று இத்தலத்துக்கும் பெயர் வந்தது.

- சி. சௌந்தரராஜன்



முக்கால் அங்குலம் நீளமும் கால் அங்குலம் பருமனும் உள்ள, சாவி வளையங்களில் எளிதாக மாட்டி எடுத்துச் செல்லக்கூடிய சிறிய டார்ச்சுகள் பம்பாயில் கிடைக்கின்றன. இதற்கும் பாட்டரியே தேவையில்லை. மிகவும் எளிதாகத் திறக்கக்கூடிய இந்தச் சிறிய டார்ச்சின் உள்ளே ஒரு 'செல்' இருக்கிறது. இந்த 'செல்லை' சூரிய வெளிச்சத்தில் வைத்தால் சில நிமிடங்களில், 'சார்ஜ்' ஆகிவிடுகிறது. பார்க்கச் சிறிதாக இருப்பினும் நல்ல வெளிச்சத்தை அளிக்கிறது இந்த 'மினி டார்ச்'. இரவு வீடு திரும்பும்போது அல்லது இருட்டில் காரைக் கிளப்பும் போது சாவி வளையத்தில் உள்ள இந்தச் சிறு 'டார்ச்' மிகவும் பயன்படும். —ராஜா



பம்பாயிலுள்ள மகாலக்ஷ்மி கோயிலின் வாயிலில் சுதாமன் என்பவர் பிரதி தினமும் காலையிலும் மாலையிலும் ஊதுவத்தி விற்று வருகிறார். அவரிடம் ஒரு கட்டு வாங்கியதும்தான் அவருக்குக் கண் தெரியாது என்பதை அறிந்தேன். ஒரு பெரிய பையில் ஊதுவத்திக் கட்டுக்களைக் கொண்டு வந்து விற்கிறார். அரை ரூபாயிலிருந்து ஒன்றேகால் ரூபாய் வரை மதிப்புள்ள பாக்கெட்டுகளை, கட்டுகளின் பருமன்களிலிருந்தும், அமைப்புகளிலிருந்தும் அறிந்து விற்கிறார். கோவிலுக்கு வருபவர்களும் போகிறவர்களும் இவரிடம் ஊதுவத்திக் கட்டுகள் வாங்கச் சுமாரான வியாபாரம் ஆகிறது. அந்தக ராஜனும் கௌரவமாக வேலை செய்து பிழைக்கும் திரு சுதாமனும் இவரைப் போன்று ஊக்கமுள்ள பிற குருடர்களும் பாராட்டுக்குரியவர்கள்தானே ?

படமும் தகவலும்: ராஜா.



## அவமதிப்பதில் நிபுணர்கள்!

பிரபல எழுத்தாளர் மார்க்டுவெய்ன் ஒரு சமயம் இந்தியாவுக்கு வந்து இந்திய ரயில்களில் பிரயாணம் செய்தார். பிறகு அவர் திரும்பியபோது:

"இந்திய ரயில்களின் முதல் வகுப்பிலே ரயில்வே கார்டைப் பிரயாணிகள் அவமதிப்பாய் நடத்துகிறார்கள்; மூன்றும் வகுப்பிலே பிரயாணிகளை கார்டு அவமதிப்பாய் நடத்துகிறார்; இரண்டாம் வகுப்பு வண்டியிலே பிரயாணிகள் ஒருவரையொருவர் அவமதிப்பாய் நடத்துகிறார்கள்" என்று கூறினார்.

ஆதாரம்: "டைம் அவுட்"

தகவல்: "ரமண்"



# அம்மா, ஒரு கல்

பாமா கோபாலன்

அன்னபூரணியின் முகத்தில் புன்னகை அரும்பிற்று. மின்விசிறியின் காற்றால் அவளுடைய கையில் இருந்த கவர் படபடத்தது. ஒரு முறை படித்து முடித்துவிட்ட அந்தக் கடிதத்தின் மேல் அவள் கண்கள் லயித்தன.

'நல்ல பைத்தியக்காரப் பிள்ளை' என்று முணுமுணுத்தது அன்னபூரணியின் வாய். கடிதத்தை மடித்துக் கவருக்குள் செருகி விட்டு நிமிர்ந்தபொழுது, ஹாலில் கடிகாரத்துக்குப் பக்கத்தில் பெரிய அளவில் மாட்டப்பட்டிருந்த சுந்தரேசனின் வசீகரப் புன்னகை அவள் மனத்தில் பலத்த போராட்டத்தையே எழுப்பியது.

'இன்னும் எத்தனை நாட்கள்தான் இப்படி இருக்கப் போகிறாயோ?' என்று தன்னுடன் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்து வழிகாட்டிச் சென்ற கணவன் கேட்பது போன்ற பிரமை!

விழிகள் நீரால் நனைந்தபொழுது, அன்னபூரணி ஒரு விநாடிக்குத் தன்னை மறந்தாள். உடனே தன்னைச் சுதாரித்துக் கொண்டாள். விழிநீரைத் துடைத்துக் கொண்டாள்.

''அம்மா...பால்...'' என்ற குரல் கேட்டு, சுயநிலைக்கு வந்துவிட்ட அன்னபூரணி, பால் வாங்க ஒரு பாத்திரத்தை எடுத்து வரச் சமையலறைக்குச் சென்றாள். பால்காரி, 'அம்மா...பால்' என்று கூப்பிட்ட பொழுது, 'அம்மா ஒரு கல்' என்று மகன் முரளி அடிக்கடி சொல்வது அவள் நினைவுக்கு வந்தது. அன்னபூரணி சிரித்துக் கொண்டாள்.

''ஏதோ என் பலவீனத்தாலோ அல்லது வேளை வினாலோ ஏற்பட்டுவிட்ட அந்த நிகழ்ச்சியினால் உன் மனம் மட்டும் இப்படியொரு தீர்மானத்துக்கு வருமென்று நான் நினைக்கவேயில்லை. உன் மருமகள் — ஓ! அப்படி சொன்னால் உனக்குக் கோபம் வந்துவிடுமே! — என் மனைவி சரளாகூட ஆச்சரியப்பட்டுப் போகிறாள், உன் தீர்மானத்தைக் கண்டு. ஏனம்மா, எல்லோரும் 'தாய் மனம்தான் மிகவும் மென்மையானது; படிக்கப் பட்டம் பெற்றுப் பதவியில் இருக்கிற பிள்ளையைவிட, தவறு செய்யும் பிள்ளை மேல்தான் அதிக பாசம் தாய்க்கு இருக்கும்' என்று சொல்கிறார்களே! பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லுன்னு சின்ன வயசிலே என்னிடம் நீ அடிக்கடி சொல்லியே! என்னுடைய இந்தத் திருமணத்தினால் அந்த வாக்கியத்தையே மாற்றலாம்போல் இருக்கிறதே! என் மனம் பித்தாக மாறவில்லையோ என்னவோ, உன் மனம் கல்தானம்மா!''

அன்னபூரணியின் மனத்தில் அச்சாகப் பதிந்துவிட்ட வாக்கியங்கள் இவை! இவற்றில் ஓர் எழுத்துகூட மறக்காது அவளுக்கு. அதுவும் அந்தக் கடைசி வரி...

பால் பொங்கிவிடப் போகிறதே என்று மிக்க கவனத்துடன் அடுப்பில், பாத்திரத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் பாலைப் பார்த்தாள். பாத்திரத்தின் மேல் விளிம்பைத் தாண்டி, பால் வெளியே சிதறிவிட்டால் அந்தப் பாலுக்கு மதிப்பேது? அப்படியே பொங்கும்படி விட்டுவிட்ட பெண்மணிக்கு — என்ன வயதாக இருந்த போதிலும் — 'அப்படியென்ன கவனம் இல்லாமல்?' என்ற பேச்சு இல்லாமல் இருக்குமா?

அன்னபூரணியின் கவனப் பிசகால், ஒரு முறை பால் பொங்கி விட்டதுதான். வெளியே பொங்கி விழுந்துவிட்ட நிலைதான் முரளியின் திருமணச்சடங்கு!

பகலும், இரவும் 'சந்தி'க்கும் அந்த நேரத்தில் பூஜையறையில் குத்து விளக்கை ஏற்றினாள் அவள். வீட்டுக்கு விளக்கு ஏற்ற வரவேண்டியவள், ஏதாவது 'சர்ச்'சில் பிரார்த்தனை செலுத்திக் கொண்டிருப்



பான்! அன்னபூரணிக்கு அந்தக் கற்பனையே பிடிக்கவில்லை.

'சரளாவாம் சரளா-ஸ்டெல்லா என்ற பெயரை மாற்றி விட்டால் போதுமா?.....'

கவலைகப் புன்தகங்களில் மனம் லயிக்கவில்லை. 'மன்னித்து விடு, முருகா' என்று கண்களை மூடிக் கொண்டு வேண்டியவளின் செவிகளில், ஹாலில் மாட்டப்பட்டிருக்கும் ஊஞ்சல் சங்கிலிகளின் ஒலி விழுந்தது.

'கல்யாணி வந்து விட்டாளா?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே, அவசரம் அவசரமாக அடுப்பை மூட்டி, சில நிமிடங்களில் காப்பி தம்ளருடன் ஹாலுக்கு வந்தாள்.

''என்னடி, ரொம்பக் களைச்சுப் போய் வந்திருக்கே... ரொம்ப வேலையோ...?'' என்று அன்புடன் கேட்டுக் கொண்டே ஆதரவாக அவள் கூந்தலை வருடினாள் அன்னபூரணி.

''அதெல்லாம் ஒண்ணுமில்லேம்மா. இலேசா தலைவலி. அவ்வளவுதான் .....'' என்று சமாதானம் சொல்லிவிட்டு, மேஜையின் மேல் இருந்த கவரைப் பார்த்தாள் கல்யாணி.

'ஓ! நீலக் கவரா? அண்ணாதான் எழுதி யிருப்பான்' என்று எண்ணிக் கொண்டே அதை எடுத்துப் பிரித்துப் படித்தாள் கல்யாணி.

அன்னபூரணியின் முகத்தில் சலனமே யில்லை.

''சுத்தப் பைத்தியக்கார அண்ணன்....'' என்று வழக்கம் போல் சொல்லி விட்டு, ''அம்மா! நீ கவலைப்பட்டுக்காதே. தான் பண்ணினது தப்புன்னு உணராமல், நீ பண்ணினது சரின்னு புரிஞ்சுக்காமல், சமாதானம் பேச வரானாம்...ம்... உன்னைச் சரியா புரிஞ்சுக்காமல் 'உன் மனசு கல்தானம்மா'ன்னு எழுதியிருக்கானே.....'' என்று அழ ஆரம்பித்து விட்டாள் கல்யாணி. தன்னையும், அண்ணனையும் ஆளாக்கிவிட எப்படியெல்லாம் அம்மா கஷ்டப்பட்டாள் என்பதை நன்கு உணர்ந்தவள் கல்யாணி.

அன்னபூரணி சமையலறைக்குச் சென்று விட்டாள்.

கல்யாணியோ சிந்தனை வயப்பட்டாள். சீராக ஆட ஆரம்பித்தது ஊஞ்சல். அதாவது ஆட்டுவிக்கப்பட்டது! ஆட்டுவிப்பவன் எங்கோ இருக்க, மற்றவர்கள் ஆடவில்லையா?

**ப**லத்த கைதட்டல் எழுந்தது. நண்பர்களின் நகைச்சுவைப் பேச்சுக்களும், இடையிடையே சுந்தரேசனின் இரண்டொரு வார்த்தைகளும் அந்த நிகழ்ச்சிக்குக் கலகலப்பை உண்டாக்கின. ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த கல்யாணி, புதுப் பாவாடையுடனும், இரட்டைப் பின்னலுடனும் அண்ணன் அருகே சிரித்தபடியே நின்றாள். அன்னபூரணிக்கோ அளவிட முடியாத மகிழ்ச்சி. பட்ட கஷ்டமெல்லாம் பகலவனின் பார்வை பட்ட பனி போல் மறைந்து விடும் என்று சொல்லும் மகிழ்ச்சி நிறைந்த பார்வை.

மகன் சிறந்த டாக்டராகி விடுவான் என்று தன் பார்வையாலேயே மனைவியிடம் சுந்தரேசன் சொல்வது போன்ற தோற்றம்!

டாக்டர் பட்டம் பெற்ற மகனுக்கு வீட்டில் நடந்த வரவேற்பின் போது எடுக்கப்பட்ட போட்டோ அது! ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருக்கும் பொழுது கல்யாணியின் பார்வையில் பட்டு, அவள் நெஞ்சத்தில் அலை அலையாய்ப் பழைய நிகழ்ச்சிகள் மடிந்து மடிந்து விழுந்தன.

''ஏண்டா, முரளி! உன்னைப் படிக்க வைச்சு, டாக்டராக்கிவிட வேண்டும் என்ற ஒரே லட்சியத்திலே ஓடாகத் தேய்ந்த அப்பாவிடமும் சொல்லாமல், நீ படிக்கிற பொழுது உனக்கு வியர்வை அருகப் பெருகுகிறதே என்று நினைச்சு, இராத்திரி முழுதும் தூங்காமல் கையொடிய விசிறிண்டு இருந்தாளே அம்மா, அவள்கிட்டே கூடச் சொல்லாமல், நீ படிக்கிற அரிக்கேன் விளக்கிலே எண்ணெய் ஆயிடப் போகிறதேன்னு மூன்று முறை விடாமல் எண்ணெய் விட்ட என்னிடமும் சொல்லாமல், எப்படிடா அந்தத் திடீர் முடிவைச் செஞ்சே? பாவி, செய்ததையும் செய்து விட்டு, கொஞ்சம்கூடப் பதறாமல் அப்பா கிட்ட வந்து ஆசீர்வாதம் கேட்டாயே...''

கல்யாணியால் அடக்கிக் கொள்ள முடியவில்லை. அந்தக் காட்சியை அவளால் என்ன, அன்னபூரணியாலும் மறக்க முடியாதுதான்.

இரவில் எட்டு மணிக்குள் வீட்டுக்கு வந்துவிடும் முரளி, இன்னும் வரவில்லையே என்று வாசலுக்கும் உள்ளுக்குமாகப் போய் வந்து கொண்டிருந்தாள் அன்னபூரணி.

கடிகாரம் ஒன்பது அடித்து ஓய்ந்தது.

வாரப் பத்திரிகையொன்றைப் படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் தந்தையின் அருகில் தாவணியின் தலைப்பைச் சுழற்றியவாறு வாசலையே பார்த்துக் கொண்டு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள் கல்யாணி.

அன்னபூரணியோ கால்கள் துவள, ஒரு ஸ்டூலில் உட்கார்ந்திருந்தாள்.

வாசலில் டாக்ஸி நிற்கும் ஒலி கேட்டது.

அவசரமாக எழுந்த அன்னபூரணி வாசலில் கண்ட காட்சியைக் கண்டதும் விக்கித்து நின்று விட்டாள்.

அதிர்ச்சி தாங்காத சுந்தரேசன் ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்துக் கொண்டார். கல்யாணிக்கு ஒரு முறை வியர்த்துக் கொட்டியது. 'பெரிய' பெண் ஆயிற்றே !

டாக்ஸிக்காரன் போய் விட்டான்.

முரளி ஸ்டெல்லாவின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வாசற்படியில் காலை வைத்தான்.

''நுழையாதே !''

அன்னபூரணிக்கே அதிர்ந்துவிட்டது.

சுந்தரேசன் அதற்கு மேல் பேசவேயில்லை. கணவன் அருகே நின்றாள் அன்னபூரணி. அவள் பார்வை, கல்யாணியின் மேல் நிலைத்து நின்றது. தாவணி போட்டுக் கொண்டு மூன்றாண்டுகள் ஆகிவிட்ட அந்தப் பெண்ணின் கண்களை ஊடுருவிப் பார்த்தாள் அன்னபூரணி.

பெற்றவர்களின் முகத்தையோ உடன் பிறந்தவளின் முகத்தையோ முரளி பிறகு பார்க்க முடியவில்லை. அன்னபூரணியின் திட்டவட்டமான முடிவுதான் அதற்குக் காரணம்.

தங்கை பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, பட்டப் படிப்பும் முடித்துவிட்டாள் என்பதை முரளி தெரிந்து கொண்ட போதிலும், அந்த நிலைக்குத் தங்கையைக் கொண்டு வர அம்மா செய்த முயற்சிகள் எத்தனையோ என்பதை அவனால் கற்பனைதான் செய்ய முடிந்தது. எத்தனை முறைகள் அனுப்பிய பணம் திரும்பி வந்துவிட்டது? கல்லூரியில் பணம் கட்டிவிடலாம் என்றால், கல்யாணி பெற்றிருந்த 'ஸ்காலர்ஷிப்' வழியில் நின்றதே!

முப்பத்தாறு கடிதங்களை அனுப்பியும் பதிலே போடாத அம்மா ஒரு கல்தானே !

விக்கி விக்கி அழுது கொண்டிருந்த மகளைக் கண்ட அன்னபூரணி, ''அடி, அசடே! ஏதோ அவன் எழுதியிருக்கிறதைப் படிச்சுப் பார்த்துவிட்டு அழறே? விட்டுத் தள்ளுடி....'' என்றவாறே மகளின் தோளைத் தட்டினாள் அவள்.

'' அம்மா.... அம்மா... எப்படியம்மா அழாமல் இருக்க முடியும்? ஒரு தரமா, இரண்டு தரமா ? அவன் எழுதிய எல்லாக் கடிதத்திலேயும் உன்னைப் பற்றி இப்படியே எழுதறானே.... நியாயமா? ஏனம்மா, அவன் பரீட்சைக்குப் படித்தபொழுது, அவன் வயிறு காயப்படாதுன்னு, நீ சாப்பிடறதைக் குறைச்சுண்டு, அதையும் அவனுக்குப் போட்டாயே ! பாவி, இப்படியொரு கல்யாணம் பண்ணிண்டு....''

சட்டென்று மகளின் வாயைப் பொத்தினாள் அன்னபூரணி.

மகளின் நீர் நிறைந்த கண்களை நேரடியாகச் சந்தித்தாள் அன்னபூரணி. தானும் பேசாமல், கண்களால் சொன்னாள் :

''அவனைப் பற்றிய பேச்சையே எடுக்க வேண்டாம்!''

தாயாரின் மடியில் விழுந்து குலுங்கிக் குலுங்கி அழுதாள் கல்யாணி. மகளின் முதுகை ஆதரவாகத் தடவிக் கொடுத்த அன்னபூரணியின் கண்களிலும் நீர் பனித்தது.

''இந்தச் சந்தோஷமான செய்தியை அம்மாவுக்குத் தெரிவித்துவிட வேண்டும். இதற்காகவாவது அம்மா பதில் போட மாட்டாளா ?'' என்று சரளாவிடம் கேட்டான் முரளி.

''ஆமாம். இவ்வளவு வருடங்கள் கழித்துக் கிடைத்திருக்கும் இந்த நல்ல செய்தியாவது அம்மா மனத்தைக் கரைய வைக்காதா ?'' என்று சரளாவும் தன் ஏக்கத்தை வெளிப்படுத்தினாள்.

தன்னால்தான் முரளிக்குத் திருமணமான அன்றே 'அத்தகைய' வரவேற்பு கிடைத்தது என்று மனம் உடைந்து போனாள் சரளா. ஆனால் முரளி தான் முதலில் மிகவும் தொய்ந்து போய்விட்டாலும், பிறகு தன்னையும் மனைவியையும் தேற்றிக் கொண்டான்.

காலத்தால் ஆறாத புண்ணில்லை என்று வாழ்க்கையை நடத்தி வருகிற அவனுக்கு, காலத்தாலும் கரைக்க முடியாத கல்லாக அம்மாவின் மனம் மாறிவிட்டதே என்று எண்ணாத நாளில்லை; எழுதாத கடிதமில்லை.

முரளிக்கு என்றைக்கும் ஆறாத மனத்தாங்கல் இதுதான் :

''நேரடியாகப் பார்க்கத்தான் அனுமதி தரவில்லை இந்த அம்மா; பதில் கூடவா போடக் கூடாது? ஒரு வரிகூட எழுதவில்லையே ? தாய் மனமா, பேய் மனமா ? நம்பிய பெண்ணைக் கைவிடாமல் மணம் புரிந்து கொண்ட நான், வேறு ஜாதிப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டது அம்மாவுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். அதற்காக, அதிர்ச்சி தாங்காமல் அப்பா தான் கண்ணை மூடி விட்டாரென்றால், அம்மா இருந்தும் இல்லாமல் இருக்கிறாளே ! இந்தப் பொண்ணு கல்யாணிகூடவா ஒரு வரி எழுதக் கூடாது? பெண்கள் மனம் இரக்கத்துக்கு ஓர் உதாரணமான இடம் என்றெல்லாம் சொல்வது பொய்தானா ?......''

''என்ன அப்படியே திகைக்கப் போய் உட்கார்ந்து விட்டீங்க.... ம்.... என்ன உங்களைத்தானே ?....'' என்று முரளியை உலுக்கினாள் சரளா.

சுயநிலைக்கு வந்த அவன், ''ம்.... அம்மா ஞாபகம்தான்...'' என்று சொன்னான். பிறகு அந்த மகிழ்ச்சிகரமான செய்தியை அம்மாவுக்குத் தெரிவிக்கக் கடிதம் எழுதத் தொடங்கினான்.

தபால்காரன் கொடுத்து விட்டுப் போன 'எக்ஸ்பிரஸ் டெலிவரி' கடிதத்தைக் கையெழுத்திட்டுப் பெற்றுக் கொண்ட அன்னபூரணி சற்றே அவசரத்துடன் அந்தக் கவரைப் பிரித்தாள்.

அவளுக்குக் கடிதம் வருவதெல்லாம் மகன் முரளியிடமிருந்துதான். பிற உறவுகளெல்லாம் மிகவும் தூரத்து உறவுகள்தான் !

''என்ன இருந்தாலும் அன்னம், அவரும் போய் விட்ட பிறகு, உனக்கு அவன்தான் எல்லாம். ஏதோ அந்தக் கல்யாணம் நடந்து போச்சு.... இனிமேல் கல்யாணியோடு நீ

தனியாக இருக்கிறது அவ்வளவாக நன்னு யில்லேதான்......'' என்று நீட்டி முழக்கிய வர்களும் அவளுடைய உறவினர்களில் சிலர்.

சுந்தரேசனின் பிடிவாத குணத்தினால் மரணப் படுக்கையில் அவர் கேட்டுக் கொண்டபடி அவருக்குக் கொள்ளி போட்டவன், தூரத்து உறவான வேறு என்ற பிள்ளை! அன்னபூரணியும் அதற்கு மறுப்பு தெரிவிக்க வில்லையே! அவள் கல் மனத்தின் உச்ச கட்டம் அது!

முரளி அவ்வளவு 'பாக்கியம்' செய் திருந்தான். கல்யாணிகூட அயர்ந்து போய் விட்டாள்!

தனக்குப் பிறந்த ஒரே பிள்ளை, டாக்டர் துறையில் பல்வேறு பகுதிகளில் விசேஷப் பயிற்சி பெற வெளிநாடு போகப் போகிறான் என்ற மகிழ்ச்சிச் செய்தியைத் தாங்கிய அந்தக் கடிதம், அன்னபூரணியின் மனத்தின் ஒரு மூலையில் சிறிது மகிழ்ச்சியைத் தராமல் இல்லை. பெற்றவளாயிற்றே! அவள் மனத் தில் ஒரு தீர்மானம் உருவாகியது.

''நான் நினைக்கிறபடி நடந்து விட்டால்.''

அன்னபூரணி அடுத்தடுத்த காரியங்களில் தீவிரமாக சுடுபடப் பரபரத்தாள்.

'வெளிநாடு போய்வரக் குறைந்தது ஆறு மாதங்களாகும்' என்ற வரி அன்னபூரணி யின் மனத்தில் புதுத் தெம்பைக் கொடுத்தது. அந்த ஆறு மாதங்களுக்குள்....

''முருகா, உன்னைத்தான்டா நம்பியிருக் கேன்....''

குளித்து விட்டுக் குளியலறையிலிருந்து வெளியில் வந்த கல்யாணி, ஹாலில் அம்மா கை கூப்பியவாறு நிற்பதும், அந்த விரல்களுக்கிடையில் நீலக் கவர் தெரிவதும் கண்டு, அவசரம் அவசரமாக உடைகளை அணிந்து கொண்டு, அந்தக் கவரை அம்மா விடமிருந்து வாங்கிப் படித்தாள்.

''ஓ! துரை வெளிநாடு போகப் போகிறாரா? இந்நூறு மைல் தள்ளியிருந்த வன், இரண்டாயிரம் மைல் தள்ளிப் போகிறாரா?.... போகட்டும்..... ஏனம்மா, அதுக்குத்தான் முருகனை வேண்டுகிறீயா?'' என்று கிண்டலாகவே கேட்டாள் கல்யாணி!

''போடி பைத்தியக்காரப் பெண்ணே! விஷயம் புரியாமல் பேசாதே.... போகப் போகப் பார் புரியும்....'' என்று பேசியபடி செல்லும் அம்மாவைக் கண்டு, அதிசயித்து நின்றாள் கல்யாணி!

அம்மா என்ன செய்யப் போகிறாள்? கல் கரைந்து விட்டதா?

''ஏன்னம்மா, இது நிஜம்தானா?'' வியப் பில் கண்கள் விரியக் கேட்டாள் கல்யாணி.

''நிஜமாத்தான்டி. எனக்கு அந்தக் காலத்திலே பன்னிரண்டு வயசிலே கல் யாணம் ஆயிடுத்து. இப்போ உனக்கு இருபத்து ஒன்று முடியப் போகிறது... எப் படியோ நடக்க வேண்டிய உன் கல்யாணம் எப்படியோ நடக்கப் போகிறது.... ம்....'' சற்றே நிறுத்தினாள் அன்னபூரணி.

தன் தாயார் சொல்வதை மிகவும் உன்னிப் பாகக் கவனித்துக் கொண்டிருந்தாள் கல்யாணி;



''ஏதாவது ஒரு பாங்கியில் நீங்கதான் சிபார்சு செய்து என்னை ஒரு 'நைட் வாட்ச்மேன் வேலையில் சேர்க்கணும். அதற்கப்புறம் தானுங்க எனக்கு ராத்திரித் தூக்கமே வரும்!''

'அம்மாவிடம் சொல்லி விடலாமா?' என்ற கேள்வி எழுந்தது கல்யாணியின் மனத்தில்.

வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள் அன்னபூரணி.

''ஏண்டி, உன் ஆபிஸிலே பாஸ்கர்ன்னு ஒரு பிள்ளையாண்டான் இருக்கானாமே....?'' சற்றே விஷமப் புன்னகையோடு மகளைக் கேட்டாள் தாயார்! மகள் முகத்தில் ஏற்படும் மாறுதலைக் கவனிக்கத் தவறவில்லை.

''அம்மா... அம்மா... அது வந்து....'' என்று முடிக்காமல் தாயாரின் தோளில் முகம் புதைத்தாள் கல்யாணி.

''அசடே! எனக்குத் தெரியாதுன்னு நினைக்காதே! பாஸ்கரனுடைய அம்மா என் சிநேகிதியாச்சே. போன வாரமே கோயிலிலே சொன்னாள். கவலைப்படாதே: முருகன் சந்நிதியிலே முடிச்சுடறேன்.....'' தன் கண்களில் நீர் வடிவதை மகள் காணாமல் இருக்கத் தன் புடவைத் தலைப்பால் ஒற்றிக் கொண்டாள்.

''அம்மா.... அம்மா.... நீ தெய்வம் தானம்மா....'' என்று விம்மலுடன் சொன் னாள் கல்யாணி. தன் எண்ணப்படியே வாழ்க்கை அமையப் போகிறது என்ற மகிழ்ச்சிக் கடலில் திளைத்தாள் அவள். நியாயம்தானே!

ஆடம்பரமற்ற முறையில் ஆண்டவன் சந்நிதியில் மகளின் திருமணத்தை முடித்து விட்ட அன்னபூரணியின் கால்களில் விழுந்து நமஸ்கரித்த பாஸ்கரன், கண்களில் நீர் மல்கக் கூறினான்:

''உங்கள் எண்ணப்படியே மகன் முரளி வெளிநாடு போயிருக்கிற இந்தச் சமயத்தில் கல்யாணியின் கல்யாணத்தை முடித்துவிட் டீர்கள். அவன் திருமணத்தால் பிரிந்த உங்கள் உறவு, இவள் கல்யாணத்தில் சேர்ந்துவிடும் என்ற நம்பிக்கையை உடைத்தெறிந்து விட் டீர்கள்....''

ஜனவரி

14ம்

முதல்

சென்னை:

கெயிட்டி · ஸ்ரீகிருஷ்ணா

சரவணா · சீனிவாசா

மற்றும் தென்னாடெங்கும்



இயக்குநர் திலகம்

K.S. கோபாலகிருஷ்ணன்

அளிக்கும்



விநாயகா பிலிம்ஸ்

# சுபதினம் (A)

இசை: K.V. மஹாதேவன் · டைரக்ஷன்: ஸ்ரீகாந்த் · தயாரிப்பு: T.S. மஹாதேவன்

ஸ்டூடியோ: கற்பகம்

ELEGANT

அன்னபூரணி இடைமறித்தாள்:

"அந்த உறவு முறிந்த உறவுதான். நீங்கள் நினைப்பது போல நடந்துவிடப் போகிறதே என்ற பயத்தில்தான் அவன் இல்லாத சமயத்தில், இவளுக்குக் கல்யாணம் செய்து வைக்க எண்ணினேன். முருகனே அவனை வெளிநாட்டுக்கு அனுப்பி வைத்து எனக்கு வழிகாட்டிவிட்டான்....."

பாஸ்கரன் விக்கித்து நின்று விட்டான்.

அன்று இரவு, பாஸ்கரன், கல்யாணியிடம் கேட்ட கேள்வி: "உன் அம்மா ஒரு கல்லா?"

**பா**ஸ்கரனும், கல்யாணியும் சினிமாவுக்குப் போயிருந்தார்கள்.

கடமையை முடித்துவிட்ட அன்னபூரணி, ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு, மகன் முரளி எழுதிய கடிதங்களையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாகப் படிக்க ஆரம்பித்தாள்.

அந்தப் பத்தாவது கடிதம்:

"அம்மா, நான் உன்னையோ, அப்பாவையோ கேட்காமல் அவளைத் திருமணம் செய்து கொண்டது தப்புதான். என்னையே நம்பி வந்துவிட்ட அவளைக் கைவிட மனம் வரவில்லை. அன்பு உள்ளமும், பாச நெஞ்சமும் கொண்ட நீ, என் செயலுக்கு மறுப்புச் சொல்ல மாட்டாய் என்று நினைத்தேன். என் போதாத வேளை பெற்ற உன் மனம் கல்லாகி விட்டது...உன்னால் எப்படியம்மா இருக்க முடிகிறது...?"

அன்னம் அடுத்த கடிதத்தைப் பார்த்தாள். அதைப் படிக்கும் முன்பாக அவள் பார்வை சுந்தரேசனின் புகைப்படத்தில் நிலைத்தது. மகன் எழுதிய கடிதங்களை அவருக்குப் படித்துக் காட்டுவது போல் இருந்தது அவள் செய்கை!

"அன்னம்! மரணப் படுக்கையில் இருக்கிற நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொள். உன் உயிரே போனாலும் அவனைப் பார்க்காதே! பார்க்கவும் விடாதே! தன் சுகமே பெரிய சுகமாகப் போய்விட்ட அவனுக்கு எந்த உரிமையும் கொடுக்காதே. நான் சொன்ன அந்தக் காரணத்தை மட்டும் மறந்து விடாதே.... !"

"நிச்சயமாக மறக்கவில்லை: அதை நினைவில் வைத்துக் கொண்டுதான் காரியங்களைச் செய்து வருகிறேன்...."

கடிகாரத்தில் முட்கள் ஓடிப் பிடித்து விளையாடின.

அந்தக் கடைசி எக்ஸ்பிரஸ் கடிதம்.

"....பல நாட்கள் எனக்காக ஓடாக உழைத்து, என்னை டாக்டராக்கின நீ பெருமைப்படக்கூடிய விஷயம், நான் வெளிநாடு போகப் போவது. இதற்காகவாவது உன் நல்லாசிகளை எழுத்தின் மூலம் தெரிவிப்பாயா? நான் வெளிநாடு போய்விட்டு, மீண்டும் வந்து உன்னைச் சந்திப்பேனா என்ற சந்தேகம் எனக்கு. அம்மா, தயவுசெய்து ஒரு வரியாவது எழுதுவாயா? உன் ஆசி இல்லாமல் நடந்த என் திருமணம் பூரணம் அடையவில்லையம்மா. மழலைச் செல்வத்தைக் காண்பேனா என்ற ஏக்கம் அதிகமாகிவிட்டதம்மா. ஒரு வேளை நீ சாபம் கொடுத்து விட்டாயா? உன் மனம் மட்டும் கல் இல்லை; நீயே கல்லாகி விட்டாயா?...."

அன்னபூரணியால் அடக்கிக் கொள்ள முடியவில்லை, அழுகையை. எவ்வளவோ வருஷங்களாக வெளிப்படுத்தாத அந்தத் தாயுள்ளம், மடை திறந்த வெள்ளமாயிற்று. அன்னபூரணி அழுதாள், அழுதாள், அப்படி அழுதாள்.....

எவ்வளவுதான் இழுபட்டாலும், ரப்பர் ஒரு சமயத்தில் அறுந்து விடுகிறதல்லவா?

சுந்தரேசனின் புகைப்படத்தைப் பார்த்து அலறினாள் அன்னபூரணி.

"உங்கள் காதிலே விழுகிறதா? என் மனசு கல்லாம்; நானே கல்லாகி விட்டேனாம்! பெத்த மகன் சொல்கிறான்! நான் ஏன் கல்லாக மாறினேன் என்று உங்களுக்கும், முருகனுக்கும்தான் தெரியும்.... ம்.... இவன் மட்டும் பிறந்திருந்தால் இவனை இப்படிப் பிரிந்திருப்பேனா?...கூடப் பிறந்தாளே கல்யாணி, அவளால்தானே நான் கல்லாக மாறினேன்...?"

வாசற்படியருகே கல்லாக நின்றிருந்தாள் கல்யாணி! அவளருகே பாஸ்கரன்! சினிமா முடிந்து வீடு திரும்பியவர்கள் அன்னபூரணியின் குரல் கேட்டு நின்றனர்.

அன்னபூரணி வாய் ஓயாமல் அரற்றினாள்; மகள் வெளியே நிற்பது தெரியாமல்.



—பாபநாசம் வீ. ப. க. மூர்த்தி

மாமல்லபுரத்தில் உள்ள தபால் அலுவலகத்தில் போடப்படும் முத்திரைகளில் அந்த ஊரில் சிறப்பாகக் கருதப்படும் கடற்கரைக் கோயில்களைக் காண்கிறோம். அவ்வாறே ஒவ்வொரு ஊரிலும் நகரத்திலும் இருக்கும் சிறப்பான ஒன்றைத் தபால் முத்திரைகளில் பதித்தால் என்ன? அந்தந்த ஊரிலிருந்து போகும் கடிதங்கள் அந்த ஊரின் சிறப்பைப் பிற ஊர்க்காரர்களுக்கும் ஏன், வெளி நாட்டாருக்கும்கூட சொல்லிக் கொண்டிருக்கும். முத்திரைகள் அழிந்து புதிதாகச் செய்ய நேரும்போதாவது இம்முறையை மேற்கொண்டார்களானால் மிக்க சிறப்பாக அமையும்!



பிரான்ஸில் உள்ள ஒரு ஹோட்டலில் ஒரு விளம்பரப் பலகை தொங்கியது. "இங்கு எல்லா மொழிகளும் பேசப்படும்" என்று அதில் எழுதியிருந்தது. அங்கு வந்த ஓர் ஆங்கிலேயப் பிரயாணி அந்தப் பலகையைப் பார்த்துவிட்டு ஹோட்டல் குமாஸ்தாவிடம் ஆங்கிலத்தில் பேசினார். பின் ஜெர்மன் பாஷையில் பேசினார். பிறகு இத்தாலிய பாஷையில் பேசினார். ஆனால் எதற்கும் அந்த குமாஸ்தாவிடமிருந்து பதில் வரக் காணோம். கடைசியாக அந்தப் பிரயாணி பிரெஞ்சு மொழியிலேயே அந்தக் குமாஸ்தாவை நோக்கி, "இங்கு எல்லா மொழியிலும் பேசுபவர் யார்?" என்று கேட்டார்.

அந்தக் குமாஸ்தா அமைதியாகப் பதில் சொன்னார்: "ஹோட்டலுக்கு வருபவர்கள்தான்."

நகல்: உமா

ஆதாரம்: பாயின்ட் - டு - வியூ

---

"பாவி, முரளி, இவன் காதல் கல்யாணத்தை நானே நடத்தியிருப்பேன்....

அப்படி நடத்தியிருந்தால் கல்யாணியின் கதி ? தன் கலப்புத் திருமணத்தால் தங்கையின் வாழ்வே சூனியமாகப் போய் விடும் என்ற அறிவு அவனுக்கு ஏற்படவேயில்லையே !.... தன் காதலே பெரிது என்று சொல்லி நுழைய இருந்தவனை, 'நுழையாதே' என்று சொல்லி நீங்கள் அமைதி தேடிக் கொண்டீர்கள்.... சுபாவத்தில் கல்லாயிருக்கிற உங்கள் மனம், பலவீனப் பட்டு உயிரையே கொண்டு போய்விட்டது. அதே சமயத்தில்தான் பலவீனமான என் தாய் மனம், கல்லாக மாறி விட்டது!..."

கல்யாணி பாஸ்கரனைப் பார்த்தாள். அம்மாவைக் கட்டிக் கொண்டு அழவேண்டும் போலிருந்தது அவளுக்கு. தடுத்து நிறுத்தினான் பாஸ்கரன்.

"கல்யாணிக்குத் திருமணம் செய்து வைக்கிறவரை என் மனத்தைக் கல்லாக்கி, ஏன் நானே கல்லாக மாறிவிட்டேன். முதலில் என்னைத் திட்டிய ஊர் மக்களே என்னைப் பாராட்டும் வகையில் மகனைப் பகைத்துக் கொண்டேன்.... காரணம் என் மகளின் வாழ்வுதான்....."

அன்னபூரணிக்குக் குரல் கம்மியது. தொண்டை கரகரத்தது. என்றுமில்லாமல் ஒரேயடியாகக் கத்தியதால் ஏற்பட்ட இருமல், நரம்புகளைச் சுண்டி இழுக்க, மயக்கமானாள்.

"அம்மா !" என்று அலறியவண்ணம் கீழே விழப் போன தாயாரைத் தாங்கிக் கொண்டாள் கல்யாணி. மயக்க நிலையிலும் தன் மகளை அணைத்துக் கொண்டாள் அன்னபூரணி;

ஆசுவாசப்படுத்திக் கொள்ள ஊஞ்சலில் சாய்ந்தாற்போல் உட்கார்ந்து கொண்டாள். தாயாரின் முகத்தில் அரும்பியிருந்த வியர்வை முத்துக்களைத் துடைத்தாள் கல்யாணி. மின்விசிறியைச் சுழற்றச் செய்து, அருகே யிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான் பாஸ்கரன்.

கல்யாணிதான் பேச ஆரம்பித்தாள்:

"அம்மா! உன் நல்ல மனசைப் புரிஞ்சுக்காமல் நான்கூட சில சமயம், ஏன் அம்மா இப்படிக் கல்லாகப் போயிட்டான்னு நினைப்பேன்....இப்பத்தானம்மா உன்னைப் புரிஞ்சுக்க முடிஞ்சது...." அழுகையுடன் கல்யாணி கூறிய சொற்கள் அன்னபூரணியின் முகத்தில் தெளிவை ஏற்படுத்தியது.

அன்னபூரணி மெதுவாகப் பேசினாள் :

"கல்யாணி! ஒன்னு சொல்றேன் கேளு. எதையும் நாம் உதாசீனப்படுத்துவதில்லே. நமக்குச் சாதகமாக அமையறதையெல்லாம் பிரமாதப்படுத்திப் பேசுவோம்; ஆனால் அதுவே பாதகமா மாறிடுத்துன்னு, பாதாளத்திலே தள்ளி விடறோம். இப்போ பாரேன்.... முரளியோடே கல்யாணத்திலே அவனுக்கும் நிம்மதியில்லே. நான் அவனுக்குச் சாதகமா ஆகாததினாலே என்னை அவன் கல்லாக்கி விட்டான்! அதே சமயத்திலே உன்னைப் புரிஞ்சுண்டு உன் எண்ணப்படியே நீ காதலித்தவருக்கே கல்யாணம் பண்ணி வைக்கப் போறேன்னு சொன்னப்போ, 'அம்மா, நீ தெய்வம்னு' சொன்னாய். முரளிக்கும், உனக்கும் நான் தாய். ஒரு குழந்தை என்னைக் கல்லாத்தான் பார்த்தது; இன்னொன்று தெய்வமாகப் பார்த்தது....கோயிலுக்குப் போகிறவன் மனசிலே தான் எல்லாமே இருக்கு.... தெய்வம் கல் உருவில்தானே இருக்கு? கல்லாகப் பார்க்கிறவன், தெய்வத்தையா பார்க்க முடியும்?"

அன்னபூரணி சற்று நிறுத்தினாள். பாஸ்கரனுக்கு ஏதோ அசரீரி பேசுவதுபோல் இருந்தது. கல்யாணிக்கு ஒன்றுமே பேசத் தோன்றவில்லை. கல்லாக உட்கார்ந்திருந்தாள்!

அன்னபூரணி தொடர்ந்தாள். அணையப் போகும் ஜோதி கொழுந்துவிட்டு எரியுமாமே, அதுபோல். கண்களில் ஒருவித ஒளி மின்ன, அவள் பேசினாள்:

"கல்யாணி, நான் மட்டும் வாழறது பெரிசில்லே; பிறத்தியாரும் வாழணும் அம்மா...." அன்னபூரணிக்கு விக்கல் எடுத்தது. தொண்டையில் ஏதோ அடைப்பது போன்ற பிரமை.....

கண்களில் நீர் வழியச் சொன்னான் பாஸ்கரன் :

"கல்யாணி, உன் அம்மா கல்தான்; ஆனால் சாதாரணக் கல் இல்லே; சந்தனக் கல். தானும் தேய்ந்து கொண்டு, சந்தனத்துக்கு அதிக மணம் தருகிறதே அந்தச் சந்தனக் கல்தான்...."

அன்னபூரணி, புன்னகையோடு, தன் கணவரின் புகைப்படத்தையே உற்று நோக்குகிறாள். அன்னபூரணியின் பார்வை நிலைத்து நிற்கிறது !

# வாழ்வு

"பிறையே! பிறையே!! ஒரு சேதி
பேச விழைகிறேன் உன்னிடத்தே!
சிறியேன் என்றே எண்ணாமல்,
செவியில் என்மொழி கொள்வாயோ?"
"பிள்ளாய்! பிள்ளாய்!! சொல்வாய், நீ!
பெரியவன் சிறியவன் என்பது தான்
உள்ளம் என்பதைப் பொறுத்ததுவாம்!!
உருவம் என்பதோ அடுத்ததுதான்!"

"நிலவுப் பிஞ்சே! நீயும் நான்
நித்தம் வளர்ந்து மாறாமல்,
இலங்கும் இந்த உருவோடே
என்றும் இருந்தால் அழகன்றோ?"
"ஆசைக் குழந்தாய்! உன் கேள்வி!
அதிசய அறிவின் முதற் கேள்வி!
தூசாய், இருளாய் இருந்தாலும்,
துளியும் வளர்தல் வேண்டுமடா!

"வளர்ச்சி" என்பதே வாழ்வாகும்!
வாழ்வின் கதையே அதுவாகும்!!
"தளர்ச்சி" என்பதும் ஒரு வகையில்
"சாவாம் வாழ்வின்" முனைகளடா!"
"ஏதோ பேசி மழுப்புகிறாய்!
என்னைப் புரிந்தும் குழப்புகிறாய்!
நீதே விளைத்திடும் 'வளர்ச்சி'யினைத்
தெரிந்தே தேடிச் செல்கின்றாய்!

வளர்ந்து வளர்ந்தே தேய்கின்றாய்!
வளர்வதால் அன்றோ தேய்கின்றாய்!!
'களங்கம்' உனக்கு வருவதுவும்
கணக்காய் நீயே வளர்வதால் தான்!
ஆற்றைக் கடக்கும் படகே போல் —
ஆரக்கப் பழத்தின் கனியே போல் —
எற்றே ஆடும் பந்தே போல்,
ஏனோ வடிவை மாற்றுகிறாய்?"

"வளரும் எதற்கும் கறையுண்டு!
வாழும் எதற்கும் குறையுண்டு!
வளரும் போதும் வாழ்கின்றேன்!
மாறும் போதும் வாழ்கின்றேன்!
மிதக்கும் படகின் அமைதியினை;
மேவும் கனியின் ஒட்டுறவை;
குதிக்கும் பந்தின் விசைத்திறனைக்
கொண்டால் வாழ்வே வெற்றியடா!"

"நன்று! நன்று குளிர் மதியே!
நயமாய்ச் சொன்னாய் புது மதியை!
குன்றிக் குறைந்தே தேய்வதுவும்
கோள் புது வாழ்வின் வாய்ப்புக்கே!"

- செம்மல்



# WIN Rs. 25,000 IN ATTRACTIVE PRIZES

# ENTER THE *new* SILKO SHAMPOO SLOGAN CONTEST

**TWO SETS OF PRIZES, TWO OPPORTUNITIES, WITH JUST ONE ENTRY.**

## (A) PRIZES FOR ARRANGING THE 8 SLOGANS IN CORRECT ORDER



**1st PRIZE:** GODREJ REFRIGERATOR 9 CFT



**2nd PRIZE:** KISSAN GRINDMASTER 'MINI'



**3rd PRIZE:** U.M.S. GRUNDIG ELECTRO MODEL P45




**4th PRIZE:** MAZDEN ICE-CREAM CHURNER



**5th PRIZE:** BUSH BARON TRANSISTOR



**6th PRIZE:** HGE THERMAL URN

over 125 consolation prizes.

## (B) PRIZES FOR BEST SLOGAN SUBMITTED BY CONTESTANTS



**1st PRIZE:** BAJAJ COOKING RANGE 'SENIOR'



**2nd PRIZE:** ADLER AIR CIRCULATOR WITH REGULATOR



**3rd PRIZE:** MURPHY TABLE MODEL RADIO



**4th PRIZE:** MURPHY TRANSISTOR RADIO



**5th PRIZE:** MANTECH ICE-CREAM FREEZER



**6th PRIZE:** BUSH BANJO

over 125 consolation prizes.

ENTER NOW IT'S SO EASY

A
The first thing you have to do is to arrange the 8 slogans given by us in your order of preference.

B
Then write one brief, catchy slogan for New Silko Shampoo yourself.

That's all you do. It's so simple, separate prizes will be given to winners in the two categories, although you send in both entries in just one form.




**NEW SILKO SHAMPOO**

ANOTHER CHOICE PRODUCT FROM PEARLINE-PARIS, MAKERS OF COSMETICS FOR OVER A GENERATION.

FREE - A useful gift with every large size bottle

*Get your entry forms from any Pearline-Paris Dealer.*

**NO ENTRY FEE!**

CLOSING DATE: 15th February, 1969.




**PEARLINE-PARIS PRIVATE LIMITED, BOMBAY 1**

**Other Pearline Products:** Icy-Kool (After Shave Lotion) Vitex (hair vitaliser), Depil (hair remover), Brilliantine, Eau-de-Cologne, Lavender, Lotion, Perfumes.

VAP/PP/8

# பரிவும் பக்தியும்

## க. பஞ்சாபகேசன்

இரண்டு வீடுகளையும் தடுத்துக் கொண்டிருந்ததோ, அல்லது பிரித்துக் கொண்டிருந்ததோ —

ஆயினும் அது ஒன்றும் உயரமான சுவர் இல்லை. ஆனால் அச்சுவரின் மேல் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்குப் படர்ந்திருந்த பந்தலின் மேல் அருவி போல் ஆடிக் கொண்டிருந்த முல்லைப் பூக்கள் மட்டும் —

இந்த வீட்டிலிருந்து அந்த வீட்டுக்குத் தினசரி இரண்டு படியாவது போகும்.

பூக்களை எடுத்துச் சென்று கொடுப்பவன் ஆனந்தன். பெயருக்கேற்ப எப்போதும் அவன் முகம் களையாகத்தான் இருக்கும்.

பூக்களை வாங்கிக் கொள்பவள் சித்ரா. தன் வீட்டிலிருந்து படர்ந்த முல்லைப் பந்தல் அடுத்த வீட்டில் அமர்க்களமாய்ப் பூத்துக் கொட்டுவது ஒரு பக்கமிருக்கட்டும். அந்தப் பூக்கள் என்னவோ தங்களுக்குச் சொந்தமில்லை என்ற பாவனையில் இந்த ஆனந்தன் ஒன்று விடாமல் அவற்றைப் பறித்துக் கொண்டு வந்து கொடுத்து விடுவதுதான் அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவன் அப்படிச் செய்வதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது. அவனும் அவனுடைய வயதான தாயுந்தான் அந்த வீட்டில். இரண்டு படி முல்லைப் பூக்களை வைத்துக் கொண்டு அவர்கள் என்ன செய்வது?

அடுத்தடுத்த வீடுகளில் வசிக்கும் அவர்களிருவரும் ஒரே அலுவலகத்தில்தான் பணிபுரிகிறார்கள். ஆனாலும் அவன் புறப்படும் நேரம் இவள் என்றுமே புறப்பட்டதில்லை; பஸ் ஸ்டாப்பில் காத்து நின்றதில்லை; ஏன், அலுவலகத்தில் கூட ஆனந்தன் அவளிடம் அவசியமில்லாமல் எதுவும் பேசியதும் கிடையாது....

இப்படிப்பட்டவன் தினசரி மல்லிகை பூக்கும் காலத்தில் மட்டும்...பூக்களைக் கொண்டு வரும்போது....

தினசரி எப்படி யெப்படியோ வாசகங்கள்!

''சித்ரா! இன்றைக்கு ஒரு நூறு பூ கூடப் பூத்திருக்கும் போலிருக்கே...''

''நேற்றைவிட இன்றைக்கு இந்தப் பூக்களுக்கு வெண்மை அதிகம், சித்ரா!''

''இறைவனுடைய மனம் மந்தகாசத்தில் சிரிக்கும்போதுதான் முல்லைப் பூக்கள் மலர்கின்றனவோ சித்ரா?''

இப்படியெல்லாம் ஆனந்தன் சொல்லும்போது மெய்மறந்திருக்கிறாள் சித்ரா; அவனுடைய அவ்வாசகங்களின் உட்பொருளை ஆராயும் லயத்தில் தன்னை மறந்திருக்கிறாள் சித்ரா.

ஆனாலும்—

இந்தக் கடவுள் தன் மனத்தில் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறான்?

ஆனந்தன் தன் மனத்தோடு படும் துயரத்தை அலுவலகத்தில் அவன் முகக் குறிப்புகளிலிருந்து சித்ரா உணர்ந்த சந்தர்ப்பங்கள் அநேகம்.

செவிப் புலனில் ஆனந்தனுக்குப் பெருங் குறையை ஆண்டவன் வைத்து விட்டான். இதைச் சாதாரணச் சொல்லில் சொல்லுவதானால் "அவனுக்குக் காது கேட்காது." ஆனால் அந்தப் பொல்லாத இறைவன், ஆனந்தனின் இதயச் செவிக்கு எத்தகைய நுட்பமான கேட்கும் திறனை அளித்து விட்டிருந்தான்! சிப்பிக்குள்ளே முத்து; அந்த முத்தோ, மாசு மறுவற்ற ஓர் நல்முத்து!

அலுவலகத்திலிருந்த எத்தனையோ 'ஸ்டெனோ டைப்பிஸ்டுகளில் ஆனந்தனும் ஒருவன்.

அந்தக் கலையில் அவனுடைய வேகம் அங்கு வேறு யாருக்கும் இல்லை என்பது மற்றவரைப் பொறுத்தமட்டில் — சித்ராவைத் தவிர — எல்லோருக்குமே கசப்பான உண்மைதான்.

''காதுமட்டும் இருந்தால் பெரிய மானேஜருக்கே 'பி.ஏ.' யாகி விடுவான்!''

''காது இருந்தால் அவனுக்குக் கை எங்கே இவ்வளவு வேகமாக ஓடும்?''

''இது ரொம்ப சௌகரியம். சத்தமே கேட்காமல் அடித்துத் தள்ளிக் கொண்டே போகிறானே!''

இவை சகப் பணியாளர்களின் விமர்சனங்கள்! இப்படியெல்லாம் ஒருவர் சொல்லுவதை மற்றவர் கேட்டுச் சிரித்து மகிழ்வார்கள். அவர்களுடைய செவிப் புலனுக்கு மகிழ்வளிக்கும் அதே சொற்கள் சித்ராவின் காதுகளுக்கு நாராசமாயிருக்கும்.

மதிய வேளை.

'காண்டீனில்' நல்ல கூட்டம். எப்போதும் போல் ஆனந்தன் தனக்குரிய இடத்தில் அமர்ந்து பலகாரங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

பக்கத்து வரிசைகளில் சக பணியாளர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்; எதிர் வரிசையில் சற்றுத் தொலைவில் பெண்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பேச்சின் ஒலிகள் பரவத் தொடங்கின.

''சாப்பாட்டில் வஞ்சனை செய்வதில்லையப்பா இவன்.''

''தாய்க்கு ஒரே பிள்ளை; அப்பன் விட்டுப் போயிருக்கிற சொத்து இன்னும் நூறு பிள்ளைகளுக்குக் கூறு போட்டால்கூட மிஞ்சி மேலும் இரண்டு தலைமுறைக்காவது வரும்.''

''அதென்னவோ அப்பா, இன்று சாயந்திரம் அவனை ஒரு பத்து ரூபாய் கடன் கேட்கலாம் என்றிருக்கிறேன்....''

''பணம் வேண்டும் என்கிறதைச் சத்தம் போட்டுச் சொல்லுவாயா, அல்லது கையால் சைகை காட்டிச் சொல்லுவாயா?''

''போடா, முட்டாள்! நான் என்ன முறையைக் கையாளப் போகிறேன் என்று பொறுத்திருந்து பாரேன்!''

பெண்கள் பகுதியில் உட்கார்ந்திருந்த சித்ராவுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. ஒரு மனிதனுக்குக் காது கேட்கவில்லை என்றால், அதற்காக இப்படியெல்லாமா வேடிக்கையாகப் பேசுவது?

இதற்குள் தானுண்டு, தன் காரியமுண்டு என்று அங்கிருந்து புறப்பட்டுவிட்டான், ஆனந்தன் டிபனைச் சாப்பிட்டு முடித்துவிட்டு.

**பி**ற்பகல் மணி நான்கு இருக்கும். ஏதோ மும்முரமாய் டைப் செய்து கொண்டிருந்த ஆனந்தனிடம் ஒரு துண்டுக் கடிதத்தைக் கொண்டு வந்து தந்தான் பியூன்.

கடிதத்தில் மிகச் சுருக்கமாக—

''ஆனந்த்,

மிக அவசரமாக எனக்குப் பத்து ரூபாய் தேவை. நாளை திருப்பி விடுவேன்..

இப்படிக்கு — **வேலுச்சாமி.**''

ஆனந்தன் தான் இருந்த இடத்திலிருந்தே திரும்பிப் பார்த்தான். நாலைந்து 'ஸீட்'டுகள் தள்ளி அமர்ந்திருந்த வேலுச்சாமி இவனைப் பார்த்துச் சிரித்தான் இலேசாக.

ஆனந்தன் கொஞ்சம் கூடத் தாமதிக்கவில்லை. பையிலிருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்து, பியூனிடம்



கொடுத்து வேலுச்சாமியிடம் கொடுக்கச் சொன்னான்.

இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த சித்ரா, பத்து நிமிடங்களுக்கு அப்புறம் அந்த

வேலுச்சாமி தன் நண்பர்களிடம் சொல்லிக் கொண்டிருந்ததையும் கேட்டாள்.

''இவனுக்குச் சீட்டு எழுதிக் கொடுத்ததைப் பெரிய கௌரவமாக நினைத்து விட்டான் போலிருக்கிறது. உண்மையில் காது கேட்காததால்தானே சீட்டே எழுதி அனுப்பினேன்?'' இதைக் கேட்ட எல்லோரும் சிரித்தார்கள்.

சித்ராவுக்கு அதற்கப்புறம் வேலை ஓடினால் தானே?

அன்று மாலையும், படிகளில் மல்லிகைப் பூக்களை அள்ளிப் போட்டுக் கொண்டு வந்து நின்றவன் சொன்ன வார்த்தைகள் சித்ராவை மேலும் விதிர் விதிர்க்க வைத்தன.

''என்னைச் சத்தம் போட்டுப் பணம் கேட்க அந்த வேலுச்சாமிக்கு ஒரே வெட்கம், சித்ரா! சீட்டில் எழுதிக் கேட்டான்...'' என்று கூறிச் சிரித்த சிரிப்பில் எத்தகைய குழந்தைத் தன்மை ஒளிவிட்டது!

வேலுச்சாமி நினைத்தது உண்மையா? இப்போது இவன் நினைத்துக் கொண்டிருப்பது உண்மையா?... படிகளுடன் மல்லிகைகளைத் தன் கரங்களில் வாங்கிக் கொண்ட சித்ராவுக்கு அந்தப் படிகளும் மல்லிகைகளும் கரங்களும் நெஞ்சமும் விசித்திரமாய் நடுங்கின.

ஆனந்தனின் தாய் சித்ராவின் அம்மாவுடன் பேசிக் கொண்டிருந்தாள். அப்போது அங்கே சித்ரா மட்டுமே இருந்தாள்.

''ரொம்ப நெருங்கிய உறவுக்குக் கல்யாணம். கல்யாணக் கடுதாசி வந்து ஒரு வாரமாகி விட்டது. இன்னும் இரண்டு நாட்களில் கல்யாணம். அப்படியொன்றும் மிகத் தூரமில்லை; பக்கத்தில், விழுப்புரத்தில்தான்.. இவன் போக மாட்டானாம்!'' — ஆனந்தனின் தாயார்.

''அந்தப் பிள்ளை மனசு நினைக்கிற விதத்திலும் ஒரு தப்புமில்லே. கல்யாணமென்றால் நாலு பேரிடம் கலகலப்பாகப் பேசியாகவேண்டுமே?'' — சித்ராவின் அன்னை.

''அதுதான் உண்மை... இவன் விஷயத்தில் இது இப்படியேதான் போய்க்கொண்டிருக்கும் போலிருக்கிறது. எப்போதும் சந்தோஷமாக இருப்பது போலவே இருக்கிறான். ஆனால் நம்மால்...இவனைப் பெற்ற என்னால் கூட அப்படி இருக்க முடியவில்லையே?'' — விசித்தாள் ஆனந்தனின் அன்னை.

ஆனால் நான்கு நாட்களுக்குப் பிறகு — அந்தத் திருமணத்துக்கும் போய்விட்டே—திரும்பி வந்த ஆனந்தன் எத்தனை மகிழ்ச்சியுடன் இருந்தான்!

மல்லிகை மலர்களைச் சித்ராவிடம் கொண்டு வந்து கொடுத்தபோது, ''சித்ரா! கல்யாணம் ரொம்பப் பிரமாதம் போ! என் அம்மாவுக்குப் பயம், நான் எங்கே முதலில் சொன்னபடி கல்யாணத்துக்குப் போகாமலே இருந்து விடுவேனோ என்று....சித்ரா! கல்யாணத்தில் நான் பார்த்த ஒவ்வொருவருடைய முகத்திலும் நிலவிய மகிழ்ச்சியை விட, நான் கல்யாணத்துக்குப் புறப்படச் சம்மதித்தபோது என் அம்மாவின் முகத்தில் விளையாடிய மகிழ்ச்சிதான் ரொம்பப் பெரிது... அதற்காகவே நான் போனேன்...'' என்றான்.

சித்ராவின் கரங்களில் மலர்களும் அவளது நெஞ்சத்துக்குள் அந்தக்கரணமும் மீட்டும் நடுங்கின.

அன்று ஞாயிற்றுக்கிழமை. சித்ரா சுவாதீனமாக ஆனந்தனின் வீட்டுக்குள் நுழைந்தாள். கூடை நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அவன் படித்துக் கொண்டிருந்த புத்தகம் —

'ரொம்ப மும்முரமாய்ப் படிக்கிற அந்தப் புத்தகம் என்னவா யிருக்கும்' என்ற ஆவல் உந்த எட்டிப் பார்த்தவள் —

ஆச்சரியப்பட்டாள். அவன் புத்தகத்தைச் 'சட்'டென்று மறைத்துக் கொண்டுவிட்டான். ஆனால் அதன் வழுவழுப்பான வர்ண அட்டையில் அழகிய பெண்ணின் உருவம் கண காலத்தில் தெரிந்து மறைந்ததுடன்—புத்தகத்தின் பெயரும் ஏதோ '...காதல்' என்றும் இருந்தது.

''சித்ரா, உனக்கெல்லாம் இம்மாதிரிப் புத்தகங்கள் பிடிக்காது; ஏன், எனக்கும் பிடிக்காதுதான். ஆனாலும் இதை அந்த... யார் கொடுத்தால் என்ன...இது என்னிடம் எப்படியோ வந்து சேர்ந்தது. ஞாயிற்றுக்கிழமை, பொழுதுபோகவில்லையே என்று...''

பேச்சில் அவன் தடுமாறினாலும், அந்தக் கண்களில்தான் எத்தனை உணர்ச்சி ததும்பிக் கொண்டிருந்தது! சித்ரா பேசாமல் வீட்டுக்



## "நகல் அல்ல அசலே!"



"டாக்டர் லாகு" என்ற தலைப்பில் ஒரு நாடகம் மகாராஷ்டிரத்தில் ரொம்பப் பிரசித்தம். ரத்னகிரியில் "டாக்டர் லாகு" நாடகம் நடந்து கொண்டிருந்தது. இதில் டாக்டர் லாகு வில்லன். கொலைக் குற்றத்துக்காக அவரைப் பிடிக்க முயலுகிறார் ஓர் இன்ஸ்பெக்டர். இந்தப் போலீஸ் அதிகாரியாகத் தோன்றும் திரு ரானே ரொம்பத் தத்ரூபமாக நடிக்கக் கூடியவர்.

அன்றைய தினம் நாடகம் பார்க்க வந்த கூட்டம் மிகுதி. டிக்கெட் நிறைய விற்றுவிட்டார்கள். ஆனால் உட்காரப் பலருக்கு இடமில்லை. நின்று கொண்டே பார்த்தார்கள். இரண்டு காட்சிகள் முடிந்தன. அவ்விரு காட்சிகளிலும் திரு ரானே இன்ஸ்பெக்டராக நடித்ததைப் பார்த்த ரசிகப் பெருமக்கள் மெய்மறந்தார்கள்.

நின்றுகொண்டே நாடகம் பார்த்த பலரும் மேடைக்கு விரைந்தார்கள். 'இன்ஸ்பெக்டரை' அணுகி, தங்களிடம் டிக்கெட் உள்ளதென்றும் உட்கார இடம் பெற்றுத் தர வேண்டியது அவரது கடமை என்றும் சொன்னார்கள்.

திரு ரானே தாம் இன்ஸ்பெக்டரே அல்ல என்று வாதாடிப் பார்த்தார். ஆனால் மக்கள் கேட்டால்தானே! இன்ஸ்பெக்டர் என்றே அவரை முழுமையாக நம்பித் தங்கள் கோரிக்கைக்குச் செவி சாய்க்குமாறு வற்புறுத்தினார்கள்.

வேறு வழியின்றித் திரு ரானே நாடக நிர்வாகியுடன் கலந்து ஆலோசித்து மேற்கொண்டு நாற்காலிகளைத் தருவித்துப் போட்டு அவர்களைத் திருப்தி செய்ய வேண்டியதாயிற்று.

எப்படி திரு ரானேயின் தத்ரூப நடிப்பு!

உண்மைநிகழ்ச்சியைஎழுதியவர்:வி.எஸ். ஸங்கடன்கர்

---

ருள் சென்று அவனுடைய தாயாருடன் பேசத் தொடங்கி விட்டான்.

பத்து நிமிடங்கள் கழித்து அவன் திரும்பிய போது கூடத்தில் கூடை நாற்காலியில் அமர்ந்திருந்த அவனுடைய கரங்களில் அந்தப் புத்தகமில்லை. கேள்வியை முகத்தில் தேக்கி அவனைப் பார்த்தாள் அவள்.

அவன் சிரித்தான். "நாளைக்கு அதை அந்த ஆளிடமே திருப்பித் தந்துவிடப் போகிறேன், சித்ரா. எனக்குப் புரிகிறது. இதை நீ விரும்ப வில்லை என்று...."

சித்ராவின் மனம் மறுபடியும் புல்லரித்தது. ஆறறிவு படைத்த மனிதனின் பரிபூரணமான புலனுணர்வுகள் அனைத்தையும் விட, ஒரு புலன் — அதிலும் முக்கியமான செவிப்புலன்—குறைப்பட்டுள்ள இந்த மனிதன் மற்ற மனிதர்களை எப்படி எடை போடுகிறான்?

அவன் — அந்த ஆனந்தன் — அவளுடைய மனத்தில் ஓர் உயர்ந்த பீடம் வகித்துக் கொண்டிருந்தான். அந்த இடத்தை அவன் இழக்க முடியாதுதான்.

ஆனாலும் இந்தக் 'காதல்' என்பதைப் பற்றிச் சித்ரா இப்போது சிந்திக்கத் தொடங்கி விட்டாள்!

அன்று மாலை ஆனந்தன் ஒரு படி மல்லிகை மலர்களைத் தான் கொண்டு வந்து தந்தான்.

"இன்று பூத்தது இவ்வளவுதான், சித்ரா! மல்லிகை 'சீசன்' மெதுவாய் முடிந்து கொண்டு வருகிறது" என்றான்.

சித்ரா அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாள். ஆனந்தனுக்கு மெய் சிலிர்த்தாற் போலிருந்தது.

"சித்ரா...." என்றான்.

அவள் தலை கவிழ்ந்தபடியே, நாணம் உடலைச் சிலிர்க்கச் செய்ய, கையிலிருந்த மல்லிகை மலர்களுடன் வேகமாய் வீட்டுக்குள் சென்றாள்.

சிந்தனை இதயத்தைக் கவ்விக் கொள்ளத் தன் இல்லத்துக்குத் திரும்பினான் ஆனந்தன்.

'...கடந்த ஆறு மாதங்களாகத் தினசரி பூக்களைக் கொண்டு போய்க் கொடுத்திருக்கிறேன். என்றுமில்லாமல் இன்று ஏன் சித்ரா இப்படி.... அந்த முகமும் கன்னங்களும் சிவந்த விதம்....'

இதயக் கூடையில் இதமான எண்ணங்கள் புதிர்களாக நிறைய ஆனந்தன் வழக்கம் போல் தனது கூடை நாற்காலியில் உட்கார்ந்தான்.

மல்லிகைகளைத் தொடுத்துக் கொண்டிருந்த சித்ராவோ—

'பூக்களை இறைவனுக்கு அர்ப்பணமாக்குவதைப் போல், என்னை அவருக்கு... அவருக்கு....'

இந்த நினைவுகளால் வடிக்கப்பட்டதாலோ என்னவோ, தொடுக்கப்பட்ட அந்த மல்லிகைப் பூக்களுக்குத்தான் எத்தகைய அழகு சேர்ந்து விட்டது! அவள் மனமும் மல்லிகைப் பந்தராகி விட்டது!

ஆனந்தனின் அன்னை 'மெதுவாக'த் தன் மகனுக்குப் புரியும்படியாக அந்த விஷயத்தை, சித்ரா அவனை மணந்துகொள்ள விரும்பும் விஷயத்தை வெளியிட்டாள்.

"அம்மா, இது நியாயமில்லை..." படபடத்தான் ஆனந்தன்.

சித்ராவின் விருப்பத்தை வலியுறுத்தினாள் தாயார்.

"நானே அவளைக் கேட்கிறேன்..." என்று சொல்லி விட்டான் ஆனந்தன்.

அன்று ஒரு மலர்கூடப் பூக்கவில்லை. வெறுங் கையுடன் — ஆனால் மனம் நிறைந்திருப்பது மாதிரி இருக்கிறதே — சித்ராவின் வீட்டுக்குள் சென்றான் அவன்.

எத்தனை அழகான புன்னகையுடன் அவனை வரவேற்றாள் சித்ரா!

"என்ன சித்ரா!..."

நாணம் அவளைப் போர்த்தவே தலை குனிந்தாள்.

"உன்னை எனக்குப் புரிகிறது, சித்ரா! ஆனால், நான்... நான்.... எனக்கு...எனக்கு"

விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட மூன்று பகுதிகளிலும் உடனே வேலை செய்கிறது...

# இரவோடிரவாக ஜலதோஷத்தை நீக்குகிறது!



**விக்ஸ் வேபோரப் உடனடியாக உங்களுக்கு இதமளிக்கிறது....மிகச் சுலபமாக சுவாசிக்க உதவுகிறது....இரவு முழுவதும் நன்றாகத் தூங்க உதவுகிறது!**

ஜலதோஷத்தின் முதல் அறிகுறிகளான—தொண்டை அழற்சி, மூக்கின் ஒழுக்கு, மார்பில் இறுக்கம், சிரமப்பட்டு சுவாசித்தல்—இவைகள் தென்பட்டவுடனே விக்ஸ் வேபோரப்பை ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட மூக்கு, தொண்டை, மார்பு ஆகிய மூன்று பகுதிகளிலும் தடவுங்கள். சில விநாடிகளிலேயே விக்ஸ் வேபோரப் உங்கள் சருமத்தை சூடாக்குவதை உணர்வீர்கள்...உங்களுக்கு உடனேயே அது இதமளிக்கிறது...மேலும், குணமளிக்கக் கூடிய வேபோரப்பின் ஆவிகள் மூக்கு, மார்புகுழாய்களின் அடைப்பை நீக்கி தொண்டை அழற்சியைச் சமனப் படுத்துகிறது.

விக்ஸ் வேபோரப் இரண்டு வழிகளில் ஜலதோஷத்தை எதிர்க்கிறது: நீங்கள் சுகமாகத் தூங்கும்பொழுது இந்த வியக்கத்தக்க இருவழிச் செயல் இரவு முழுவதும் தொடர்ந்து நடைபெறுகிறது. பொழுது விடிந்ததும் ஜலதோஷத் தொந்தரவு குறைந்து நீங்கள் மறுபடியும் ஆரோக்கியமும் ஆனந்தமும் பெறுகிறீர்கள்.




## விக்ஸ் வேபோரப்பின் வியத்தகு இருவழிச் செயல்



**வெளிப்புறச் செயல்:** வேபோரப்பின் சருமத்தை சூடாக்கும் தன்மை உங்களுக்கு உடனடியாக சுகமளிக்கிறது; சருமத்தின் மீது செயல்புரியும் வேபோரப்பின் குணமளிக்க வல்ல மருந்துகள் மூக்கு, மார்பு இவைகளின் இறுக்கத்தை நீக்குகிறது...வலிக்கும் தசைகளுக்கு இதமளிக்கிறது.



**உட்புற செயல்:** உங்கள் சொந்த உடலின் வெப்பமே வேபோரப்பை உடனடியாக மருந்து ஆவிகளாக மாற்றுகிறது. இந்த ஆவிகளை இரவு முழுவதும் ஒவ்வொரு முறை மூச்சுவிட்டு இழுக்கும்பொழுதும் நீங்கள் உள்ளுக்கு சுவாசிக்கிறீர்கள். இந்த உட்புற செயல் மூக்கிலும் மார்பிலுமுள்ள அடைப்பை நீக்க உதவுகிறது...தொண்டைப் புண்ணுக்கு இதமளிக்கிறது.

கடுமையான ஜலதோஷத்திற்கு கொதிநீரின்று எழும்
விக்ஸ் வேபோரப்பின் மருந்துகூடிய ஆவிகளை சுவாசியுங்கள்

# விக்ஸ் வேபோரப்




3 அளவுகளில்

# படித்துப் பாருங்கள்

## ஸ்வப்ன லோகம்

'கல்கி'யின் நகைச்சுவையை ரஸிக்க வேண்டுமா? பிரயாணக் கட்டுரைக்குச் சில மாதிரிகள் வேண்டுமா? நம் முன்னோர்களின் பெருமைக்கு அழியாச் சின்னங்களாக விளங்கும் மாமல்லபுரம், தஞ்சை பெரிய கோயில் போன்ற சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்களைக் கல்கியின் பேனாமுனை எப்படி வரைந்து காட்டுகின்றது என்று அறிய வேண்டுமா? இதோ ஒரு புஸ்தகம் இருக்கிறது — ஸ்வப்னலோகம் — வாங்கிப் படியுங்கள்!

பேராசிரியர் கல்கி அவர்கள் ஆனந்த விகடனில் சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் மகாபலிபுரத்தைப் பற்றி மூன்று கட்டுரைகளும் தஞ்சையைப் பற்றி ஒரு நீண்ட கட்டுரையும் எழுதினார். அவற்றின் தொகுப்பே இச்சிறு புத்தகம். புத்தகம் சிறிதாயினும் சுவையில் — விஷயத்தில் மிக மிகச் சிறந்து விளங்குவதைக் காண்கிறோம்.

இவையெல்லாவற்றையும்விட, கல்கி பிற்காலத்தில் எழுதிய அழியாப் புகழ் வாய்ந்த சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் ஆகிய நவீனங்களுக்கு வித்து அவர் உள்ளத்தில் எப்படி விழுந்தது என்பதையும் இந்தப் புத்தகத்தில் உள்ள கட்டுரைகள் நமக்குக் கூறாமல் கூறுகின்றன.

"ஸ்வப்ன லோகம்" நம்மைக் கனவுக்கும் நனவுக்கும் மாற்றி மாற்றிக் கொண்டு போகும் அற்புதமான படைப்பு.

பிரசுரம்: மங்கள நூலகம், நுங்கம்பாக்கம், சென்னை — 34. விலை: ரூ. 1-20.

## யசோதரா

மிகச் சாதாரண நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு உள்ளத்தைத்தொடும் ஒரு நாவலை உருவாக்க முடியும் என்பதற்குத் தக்க சான்றாக உள்ளது இந்நூல்.

பிச்சைக்காரன் நந்து. அவன் மகள் யசோதரா. அவர்களிடம் பரிவு காட்டி மனித இதயத்துடன் நடந்துகொண்ட ராமநாத பாபு. நந்துவின் தந்தை ஜமீன்தார் - யாருமே அதிகமான செயல் எதையும் செய்து விடவில்லை. ஆனால், கதைப்போக்குக்கு உறுதுணையாக இருக்கிறார்கள். கதையின் தொடக்கத்தில் பிச்சைக்காரியாகத் தோன்றிய யசோதரா, கதையின் நடுவில் ஜமீன்தாரிணியாகக் கடைசியில் தன் உடைமைகள் அனைத்தையும் தருமமாக உலகுக்கே தானம் செய்துவிட்டு மீண்டும் பிச்சைக்காரியாகி விடுவதற்கு அடிப்படைக் காரணமாயிருந்த இனம் பாகுபாடு படிப்பவர்கள் மனத்தை நிச்சயம் உருக்கிவிடும்.

ஹிந்தியில் 'விசுவம்பரநாத் கௌசிக்' எழுதிய இந்நாவலைக் "கல்கி" உதவியாசிரியர் ரா. வீழிநாதன் மிகவும் அழகாகத் தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். இந்நாவல் "கல்கி"யில் தொடர்கதையாக வெளிவந்து ஆயிரம் ஆயிரம் வாசகர்களைக் கவர்ந்தது.

பிரசுரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், சென்னை-8. விலை: ரூ. 4-50.

# வட்ட மேஜை

தமிழனின் தன்னிகரற்ற கலைகளைத் தரணிக்குக் காட்டும் தஞ்சைக் கலைக்கூடம் கண்டேன். களிப்பு மிகக் கொண்டேன்.

ஆனால் அதன் அருகே உள்ள கழிவு அறை பல மாதங்களாகத் துப்புரவு செய்யப்படாமல், நாற்றம் மிகுந்து உள்ளே நுழைய முடியாத நிலையில் இருப்பதைக் கண்டு நெஞ்சம் மிக நொந்தேன். ஆச்சரியம் என்னவென்றால் அதன் அருகேதான் நகர சுகாதார அலுவலகம் உள்ளது. வெளிநாட்டார் வந்து போகும் இடம் இவ்வளவு இழிநிலையில் இருக்குமானால் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள்?

நெய்வேலி
8—1—69 சா. சம்சுதீன், பி.ஏ.

'நாற்றங்காலின் அழகும் தோப்பளித்த நிழலும்' என்ற தலைப்பைப் பார்த்ததும் ஏதோ விவசாயிகளுக்கான கட்டுரையோ என்று ஒரு கணம் எண்ண வைத்தாலும் ஒரு வகையில் பொருத்தமான சங்கீத அறுவடை பற்றியதாகவே அமைந்து விட்டது! திரு கப்புடுவுக்கு என் மனமார்ந்த பாராட்டுகள். வெறும் கட்டுரையாக இல்லாமல் நகைச்சுவை மிளிரும் ஓர் அநுபவமாக இருந்தது அது.

சென்னை-17
8—1—69 ஆர். கிருஷ்ணன்

கல்கி வள்ளுவர் மலர் ஓர் அரிய பொக்கிஷம். 1969ஆம் ஆண்டு தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் புதிய தலைவர் திரு க. வேம்பு (விக்கிரமன்) அவர்களுக்கு எங்களைப் போன்ற எழுத்தாளர்களின் ஒத்துழைப்பு நிச்சயம் இருக்கும் என்பதை வட்ட மேஜை மூலம் தெரிவித்துக் கொள்வதில் பெருமை அடைகிறேன்.

சென்னை—5
11—1—69 'புனர்வசு'

ர. க. நல்லபெருமாள் அவர்கள் எழுதிய 'யாருக்கு யார் துணை?' என்ற சிறுகதை உள்ளத்தைத் தொடும்படியாக இருந்தது. "நேர்மையும், மானமும்தான் மனிதனுக்கு முக்கியம். நமக்கு அன்பு செலுத்த உலகத்திலே யாரும் இல்லையென்றால், உயிரை விட்டு விடலாம்" போன்ற உருக்கமான வரிகள் கதையில் ஆங்காங்கே உள்ளன. இப்போது கூடச் சொத்து, சுகம் எல்லாவற்றையும் பையன்களின் படிப்புக்கு அர்ப்பணித்து விடும் பெற்றோர்கள் பலர் உள்ளனர். அப்படிப்பட்டவர்களின் பையன்கள் தங்கள் தந்தையை முதிய பருவத்தில் பேணிக் காப்பது கடமையாகும்.

தேவூர்
14—1—69 ஏ. சுப்பிரமணியம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# டாடாவிஷன்



டாடாவின் பெருநோக்கு. தீர்க்க தரிசனமுள்ள கருத்துக்கள் இருந்து என்ன? அவை மக்களிடையே பரவாவிட்டால் என்ன பயன்?— அவை மக்களைத் தழுவுது என்று செயல்படுத்த வேண்டாமா?

ஜாம்ஷெட்பூரில் நல்ல கருத்துக்கள் செயலாகாமல் வீணுவதில்லை. ஏற்ற உதவிகளும் சூழ்நிலையும் அங்கே உள்ளன. இத்தகைய ஒன்றே குடும்ப நலத்திட்டம்.

இந்தத் திட்டம் ஜாம்ஷெட்பூரில் தொடங்கிய மூன்று ஆண்டுகளுக்குள் 'விவாத-வட்டங்களில்' கலந்து கொள்வோர் தொகை பத்து மடங்காக உயர்ந்து விட்டது. விவாதத்தின் விளைவாக எழுந்த தெளிவான உறுதி: 1965-இல் ஜாம்ஷெட்பூரில் பிறப்புவிகிதம் குறையத் தொடங்கி விட்டது.

டாடா எ:கு ஸ்தாபனத்தின் குடும்ப நலத் திட்டத்தினுல் ஜாம்ஷெட்பூர் மக்களுக்கு என்ன பயன்?

இரண்டு நவீன நகரத்துக் குடும்பத் திட்ட நிலையங்களும் ஆ பிரசவ, குழந்தை பராமரிப்பு வ களும் இனமாகக் குடும்பக் கட்டுப்பாட்டு சாதனங்களை வழங்குகின்றன, ஆலோசனை கூறுகின்றன.

இரண்டு நகர நிலையங்களிலும் டாடா மெயின் ஆஸ்பத்திரியிலும் 'வாஸக்டமி' ஆபரேஷன் செய்யப்படுகிறது. அதைச் செய்து கொள்ளும் கம்பெனி ஊழியருக்கு ஆபரேஷன் செலவு இல்லை. அதோடு ரொக்கப் பரிசாக ரூ. 200/- தரப்படுகிறது. போனவருஷம் ஆகஸ்டு டிசம்பர் காலத்தில் 1650 பேர் ஆபரேஷன் செய்து கொண்டதில் வியப்பில்லை. கம்பெனி ஊழியரின் மனைவியர் 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்டாலோ, 'லூப்' பொருத்திக் கொண்டாலோ ஊக்கப்படுத்தும் வகையில் ரொக்கம் வழங்கப்படுகிறது.

**டாடா ஸ்டீல்**

REGISTERED No. M. 4342
Registered as a Newspaper in Ceylon















